# காஞ்சிபுரம்

(கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்கு முன்)



முனைவர் கு. பகவதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# காஞ்சிபுரம்

## கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்கு முன்

முனைவர் கு. பகவதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

## BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the Book | : | **kāñcipuram**<br>ki.pi. āṟām nūṟṟāṇṭirku muṉ |
| Author | : | Dr. K. Bhagavathi<br>Associate Professor<br>International Institute of Tamil Studies<br>Chennai - 600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 538 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Year of Publication | : | 2005 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | vi + 218 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 65/- (Rupees Sixty Five Only) |
| Printed by | : | Pavai Printers<br>No. 17 (Old No. 142)<br>Jani Jan Khan Road<br>Royapettah, Chennai - 600 014 |
| Subject | : | Place Name cum Historical Study of Kanchipuram |

**முனைவர் சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

# அணிந்துரை

தமிழக ஊர்ப்பெயர்கள் பற்றிப் பல்வேறு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பழமையும் பெருமையும் மிக்க நகரமாக விளங்கும் காஞ்சியைப் பற்றிய ஓர் ஆய்வாக இந்நூல் வெளிவருகிறது. வரலாற்றில் காஞ்சிக்கென்று தனித்த இடம் உண்டு. இந்நகரம் அரசியலிலும் சமயத்திலும் கல்வியிலும் பெற்றுள்ள சிறப்புக் குறிப்பிடத் தக்கதாக உள்ளது. இந்நகரைப் பற்றி ஒரு புராணம் அமைந்துள்ளமை இந்நகர்ச்சிறப்புக்கு எடுத்துக்காட்டாக அமையும்.

இந்நிலையில், கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன்னைய காஞ்சியைப் பற்றிய முழுமையான ஓர் ஆய்வு நூல் இல்லை எனும் குறையை நிறைவு செய்யும் வகையில் இந்நூல் வெளிவருகின்றது. இந்நிறுவனத்தில் சமூகவியல் மற்றும் கலைப்பண்பாட்டுப் புலத்தில் இணைப் பேராசிரியராக இருக்கும் முனைவர் கு. பகவதியின் தனி ஆய்வுத் திட்டப்பணியாக 1998இல் எடுத்துக்கொள்ளப்பெற்ற இத்திட்டப்பணி இப்போது அவர்களால் நிறைவு செய்யப்பெற்று நூலாக்கம் பெறுகிறது. இந்நூல், ஆய்வு அடிப்படையில் ஒரு வரலாற்று ஆய்வு என்ற வகையில், கி.பி.6ஆம் நூற்றாண்டுக்கு முந்தைய காஞ்சி தொடர்பான வரலாற்று மூலங்களோடு செய்திகள் தொகுக்கப்பெற்று மேற்கொள்ளபெற்ற ஆய்வின் விளைவாக வெளிவருகின்றது.

இந்நூலினை வெளியிட அனுமதியளித்த நூல் மதிப்பீட்டுக் குழுவினர்க்கும், இந்நூலினை மதிப்பீடு செய்த மதிப்பீட்டாளருக்கும் நிறுவனத்தின் சார்பில் நன்றி.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வருகின்ற **நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர் திருமிகு சி.வி.சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் **திருமிகு பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,** அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் **திருமிகு தா. சந்திரசேகரன், இ.ஆ.ப.,** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளி அச்சுக்கோப்புச் செய்த திருமதி பி.கௌசல்யாவுக்கும், நூலை அழகுற அச்சிட்டுத்தந்த பாவை அச்சகத்தார்க்கும் பாராட்டுகள்.

சென்னை
13-4-05

**இயக்குநர்**

# நன்றியுரை

தமிழகத்தின் வரலாற்றைத் தெளிவாக்கவல்ல மூலங்கள் பல. ஆனால் சில இன்னமும் முழுமையாக ஆய்வு செய்யப்படவில்லை; வரலாற்று முழுமைக்குத் துணை கொள்ளப்படவுமில்லை. இவற்றுள் குறிப்பிடத்தக்க ஒன்று ஊர்ப்பெயர்கள். ஊர்ப்பெயர்களின் முக்கியத்துவம் அறிஞர் பெருமக்கள் பலராலும் சுட்டப்பட்டுவந்துள்ளது. எனினும், அறிஞர்கள் பலர் பார்வை இதனை நோக்கிச் செல்லவில்லை என்பது இன்றைய நிலையும் கூட. இந்நிலையில், **'காஞ்சிபுரம் – கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன்'** என்ற இந்த ஆய்வு வரலாற்றுத் தெளிவிற்கு ஊர்ப்பெயர் ஆய்வு எந்த அளவிற்குத் தேவையானது என்பதை எடுத்தியம்புகிறது; தமிழக ஊர்ப்பெயர்கள் அனைத்தையும் ஆராயவேண்டியதன் முக்கியத்துவத்தை உணர்த்துகிறது; தவிர, வளர்ந்துவரும் நகர் சார்ந்த, சமூகவியல் சார்ந்த கல்விகளுக்கு (Urban Sociology, Urbanization, Urban Ecology, Urban Anthropology, Urban Psychology, Urban Geology, Urban Morphology போன்றன) இந்த ஊர்ப்பெயர் ஆய்வுகள் துணைபுரியவல்லன என்பதையும் உணரச்செய்கின்றது. இந்நிலையில் 'தமிழக ஊர்ப்பெயர்க் களஞ்சியம்' ஒன்றை உருவாக்குதல், தமிழக வரலாற்றை முழுமையுறச் செய்வதற்கும் வளர்ந்துவரும் கல்விச் சூழலுக்கும் பயன்தரத்தக்கது என்ற என் விழைவை அறிஞர் முன் வைத்து, இந்த நூல் வெளிவரத் துணை நின்ற அன்பு உள்ளங்கள் அனைத்திற்கும் நன்றி சொல்ல விழைகிறேன்.

இத் திட்டப்பணியை மேற்கொண்டு நான் ஆய்வு செய்ய விழைந்தபோது ஊக்கமளித்தவர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மேனாள் இயக்குநர், முனைவர் ச. சு. இராமர் இளங்கோ அவர்கள். அன்னாருக்கு என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஊர்ப்பெயராய்வுத் துறையில் என்னை ஈடுபடச் செய்தவர் முன்னாள் இயக்குநர் என் ஆசிரியர், பேராசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள். அவர் 1982ஆம் ஆண்டு என்னை ஊர்ப்பெயர்களை ஆய்வு செய்ய வழிகாட்டினார். அன்று தொடங்கிய ஊர்ப்பெயர்கள் ஆய்வுப்பணியின் விளைவாகப் பல நூல்கள், பல கட்டுரைகள் வெளியிடும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஐந்தாவது நூலாக 'காஞ்சிபுரம் - கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன்' என்ற இந்த நூல் அமைகிறது. இந்த ஆய்வையும் மதிப்பீடு செய்து நூல் செம்மையுறத் தம் சீரிய கருத்துகளை நல்கியவர் பேராசிரியர் ச.வே.சுப்பிரமணியன் அவர்கள். அன்னாருக்கும் என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்

இந்த நூலை வெளியிட வேண்டியன செய்தவர் நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்கள். அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் இத்திட்டப்பணியை மேற்கொண்ட பொழுது தேவையான நூல்கள் பலவற்றையும் உடனுக்குடன் அளித்துதவிய நூலக நண்பர்கள் அனைவருக்கும் என் நன்றி.

இந்த ஆய்விற்குத் தேவைப்பட்ட கல்வெட்டுச் சான்றினைத் தெரிவித்துதவியவர் டாக்டர் இரா.கலைக்கோவன் அவர்கள்; தேவைப்பட்ட நூல் ஒன்றினை அளித்து உதவியவர் கல்வெட்டாய்வாளர் திரு. க. குழந்தைவேலன் அவர்கள். இருவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

துணை நூற்பட்டியல் உருவாக்கத்தில் துணைநின்ற திட்ட அலுவலர் செல்வி அ.சரசுவதி அவர்களுக்கும், ஒளியச்சுக் கோத்த திருமதி பி.கௌசல்யா அவர்களுக்கும் என் நன்றி.

கு. பகவதி

# உள்ளே

# முன்னுரை

உலகமெல்லாம் பல நூறு ஆண்டுகளாக ஒலித்துக் கொண்டிருக்கும் ஒரு தமிழ்ப் பெயர்; தமிழகத்தின் ஓர் ஊர்ப் பெயர் காஞ்சிபுரம்.

பெருநகராக, பல்சமயத் தலமாக, கலைக்கோயிலாக, கல்விச் சாலையாகத் தொன்று தொட்டு இன்று வரை திகழ்ந்து வரும் இவ்வூர் தன் தன்னிறைவில் தமிழகத்தின் பெருமையையும் உயர்த்திய ஊர்; உயர்த்தி வரும் ஊர். எனவே தான்,

நகரேஷு காஞ்சி என்றான் ஒரு வடமொழிப் புலவன்.[1]

**கச்சி மாநகர் ஓர் தட்டுங் கடவுளர் உலகோர் தட்டும்**
**வைச்சு முன் அயனார் தூக்க மற்றது மீது செல்ல**
**நிச்சயம் முறுகித் தாழ்ந்து நிலமிசை விழும் இவ்வூரை**
**இச்சகத்தூர்களொடும் எண்ணுதல் மடமைப் பாற்றே**

என்று காஞ்சி பிற ஊர்களோடு ஒப்பிடுவதற்கே அரிய ஊர் என்றான் தமிழ்ப்புலவன் ஒருவன்.[2]

**No other city in South India can claim to have played such a dominant, decisive and continuous role in the history of the peninsula**

என்கிறார் இன்றைய ஓர் ஆய்வாளர்.[3]

---

1. காஞ்சிபுரம் மலர், ப. 71.
2. காஞ்சிப்புராணம்- திருநகரப்படலம், 1.
3. Kanchipuram through the ages, p.8.

இச்சிந்தனைகள் காஞ்சிபுரத்தின் வரலாற்றை முழுமையாக அறிந்து கொள்ள வேண்டும் என்ற உணர்வைத் தருவன. இந்த உணர்வுடன் காஞ்சிபுரத்தின் வரலாற்றை அறிந்து கொள்ள முனையும் போது, பொதுவாக வரலாற்று முழுமைக்கு அடிப்படையாய் அமையவேண்டிய இரண்டு சிந்தனைகள் இங்கும் முன்னிற்கின்றன.

1. ஒவ்வொரு வரலாற்றுக்கும் அதன் ஒவ்வொரு காலக் கட்டச் செய்திகளும், அவற்றின் ஒவ்வொரு கூறுகளும் ஆழமான ஆய்விற்கு உட்படுத்தப்படவேண்டும் என்பதும்
2. அந்த வரலாறும் தோற்றம் தொட்டுக் காலவாரியாக ஆராயப்படவேண்டும் என்பனவுமே அவை.

இவற்றுள் தோற்றம் என்பது பற்றி நோக்க, எந்த ஒரு வரலாற்றிற்கும் தோற்றம் உண்டு. ஆயின் சில வரலாறுகளுக்குத் தோற்றம் குறித்த செய்திகள் கிடைப்பது இல்லை. எனினும் கிடைக்கின்ற வரையிலும் தோற்றம் பற்றிய செய்திகளை முழுமையாகத் தொகுத்த பின்னரே ஆராய முற்படவேண்டும் என்பது புலப்படுகிறது. இதனைப் போன்றதே காலமும்.

காலவாரியாகத் தான் வரலாற்றுச் செய்திகளைப் பார்வையிடவேண்டும். கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் "உடம்புக்கு எலும்புக் கூடு எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியமானது வரலாற்றுக்குக் கால வரிசை முறை" என்பார்.[4] ஆயின் பல வரலாறுகளுக்குக்காலமும் தெளிவாகக் கிடைக்கவில்லை[5] என்பதே நம்முன் நிற்கும் உண்மை. எனவே தான் "ஆண்டுகள் வழி நிகழ்ச்சி நிரல் வரலாற்றின் கண்ணாயின் பண்டைய இந்திய வரலாறு எப்போதும் குருடாகவே இருக்கும்" என்பார் பி.டி. சீனிவாச ஐயங்கார்.[6]

இந்திய வரலாற்றின் ஒரு பகுதியான தமிழக வரலாறும் தோற்றம், காலம் தொடர்பான தெளிவின்மைகளும் சான்றின்மைகளும் நிறைந்த வரலாறு தான். இருப்பினும் கிடைத்துள்ள மூலங்களைக் கொண்டு வரலாற்று ஆசிரியர்கள் வரலாற்றைத் தெளிவாக எழுத முயன்றுள்ளனர்; முயன்று வருகின்றனர். காஞ்சி பற்றிய ஆய்வுகளும் இத்தகையனவே.

---

4. தென்னிந்திய வரலாறு, பக். 20-21.
5. தமிழ் நாட்டு வரலாறு, சங்ககாலம்-அரசியல், பதிப்புரை, xii.
6. தமிழர் வரலாறு I, ப. 7.

காஞ்சி பற்றிப் பல நூல்கள் வெளிவந்துள்ளன. அறிஞர்களும் ஆய்வாளர்களும் வெகுவாக முயன்று இதன் வரலாற்றுச் சிறப்பை வெளிக்கொணர முயன்றுள்ளனர்; வெற்றியும் பெற்றுள்ளனர். எனினும் காஞ்சி குறித்த ஆய்வு முழுமை பெற்று விடவில்லை; முடிவுபெற்று விடவில்லை. தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

பொதுவாக ஆய்வுகள் தொடர்ந்து நடப்பதற்கும் நூல்கள் வெளி வருவதற்கும் சில காரணங்கள் உண்டு. பல்கோணப் பார்வைகள், பல்துறைச் சார்புடைய அணுகுமுறைகள், மேலும் மேலும் ஆழமாகச் சிந்திக்கும் தன்மை, புதிய ஆய்வு மூலங்கள் கிடைக்கும் தன்மை போன்றவை இவற்றிற்குக் காரணங்களாகும். மா. இராசமாணிக்கனார், "ஆராய்ச்சி என்பது முடிந்த முடிபன்று. நாளும் வளர்ந்து வருவது. ஆதலின் மேற்கண்ட நூல்கள் வெளிவந்த பிறகும், சில வரலாற்றுச் செய்திகள் புதியனவாக அறிஞரால் வெளியிடப் பெறுதல் இயல்பே அன்றோ? அங்ஙனம் இன்றளவும் வெளிவந்துள்ள குறிப்புகளும் பிறவும் வரலாற்று முறைக்கும் தமிழ் முறைக்கும் மாறுபடாவகையில் நன்கு ஆராய்ந்து வெளியிடலே இந்நூலின் நல்நோக்கம் ஆகும்"[7] என்று கூறும் கருத்தை இங்கும் அரணாக்கலாம். மேலும் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார், "நம் நாட்டுச் சரித்திரப் பகுதிகள் பலவற்றில் அபிப்ராய வேறுபாடுகளுக்கு இடம் இருந்து கொண்டே தானிருக்கும். ஆனால் இம் மாதிரி நூல்கள் அவ்வப்போது ஆய்ந்த தீர்மானங்களை எல்லோரும் எளிதில் அறிந்து கொள்வதற்கு வேண்டிய நல்ல கருவி நூல்களாகும்" என்று கூறும் கூற்றும்[8] நூல்கள் புதிதாக எழுதப்பட வேண்டியதன் தேவையை யுணர்த்துவதாக அமைகிறது. தவிர, புதிதாகக் கண்டு பிடிக்கப்பட்ட உண்மைகள், கோட்பாடுகள் போன்றவற்றையும் அவ்வப்போது வரலாற்று நூல்களில் இணைத்துக் கொண்டே வரவேண்டும். அப்படி இணைத்து வரும் போதுதான் வரலாறு மேலும் மேலும் தெளிவும் துல்லியமும் பெறும். இவ் உண்மைகளைக் கருத்தில் கொண்டே காஞ்சி தொடர்பாக இதுவரையிலும் வெளிவந்த ஆய்வுகளைத் தொடர்ந்து இவ்வாய்வும் வெளிவருகிறது.

---

7. சோழர் வரலாறு, ப. 17.

8. சோழர் வரலாறு, முன்னுரை.

## காஞ்சி ஆய்வுகள்; இந்த ஆய்வின் எல்லை

ஆய்வு என்பது இதுவரையிலும் சிந்தித்த சிந்தனைகளின் மேலே சிந்திப்பது என்ற நிலையில் இது வரையில் நடைபெற்ற காஞ்சிபற்றிய ஆய்வுகள் எண்ணத்தக்கன.

Kanchipuram in Early South Indian history - T.V. Mahalingam (Madras, 1968)

Kanchipuram through the ages- C.R. Srinivasan (Delhi, 1979) போன்றன காஞ்சிபுரம் பற்றிய தனித்த ஆய்வுகள்.

Varadarajaswami Temple, Kanchi - K.V. Raman (New Delhi, 1975)

காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் ஓர் ஆய்வு - முனைவர் சி. இரத்தினம் (உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1998)

திருக்கச்சிக் கோயில்கள்- அ.அறிவொளி (மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1983)

காஞ்சியின் கவின்மிகுக் கோயில்கள்- டி.வி. ஆர். சாரி (காஞ்சிபுரம், 1982)

ஸ்ரீ.காமாக்ஷிதேவி- பு.மா. ஜெய செந்தில் நாதன் (காஞ்சிபுரம், 1975)

திருமுறையுள் திருக்கச்சித் தளிகள்- தணிகையரசு (தொகு) (காஞ்சிபுரம், 1975)

திருவேகம்பர் செம்பொற்கோயில் (காஞ்சிபுரம், 1981) போன்றன[9] காஞ்சி கோயில் பற்றிய ஆய்வுகள்.

காஞ்சிபுரம் மலர், காஞ்சி தொடர்பான பல செய்திகளைத் தாங்கிய கட்டுரைகளின் தொகுப்பு.

இவ்வாறு இவைபோன்று தனித்த நூல்களாக, கட்டுரைகளாக அமைவன தவிர, பல்லவர் தொடர்பான நூல்களிலும் காஞ்சி ஆராயப்பட்டுள்ளது. தமிழக வரலாற்று நூல்களும், தமிழக மன்னர்கள் பற்றியெழுந்த நூல்களும் காஞ்சியை ஆராய்ந்துள்ளன. காஞ்சியின் சிறப்பு, தமிழக மக்களை

---

9. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 216.

மட்டுமல்ல, இந்திய மக்களை மட்டுமல்ல, உலக மக்களையும் கவர்ந்ததைக் காஞ்சியின் வரலாறு காட்டுவது போன்று வரலாற்று அறிஞர்களையும் காஞ்சி கவர்ந்ததைக் காட்டுவனவே காஞ்சியின் வரலாற்றை விளக்கும் இவ்வரிய கட்டுரைகளும் நூல்களும். இவற்றின் மூலம் காஞ்சியின் வரலாறு தெரிகிறது; இந்த வரலாற்றைப் பெறத்துணை புரியும் வரலாற்று மூலங்கள் தெரிகின்றன; காஞ்சி தொடர்பாக அறிஞர்களிடையே காணப்பட்ட வேறுபட்ட சிந்தனைகளும் புலப்படுகின்றன. மேலும் இந்நூல்கள் அனைத்தின் மூலம் காஞ்சி, பல்லவர் காலத்தில் மிகச் சிறப்பும் செல்வாக்கும் பெற்றிருந்தது தெளிவாகிறது. அதே நேரத்தில் பல்லவர்க்கு முன்னைய பின்னைய அதன் வரலாறும் சீரும் சிறப்பும் பெற்றதொரு வரலாறாக இருந்துள்ளது என்பதையும் உணர்தல் இயலுகிறது. எனினும் காஞ்சியைப் பற்றிய ஆய்வுக்குத் துணைபுரியும் எல்லா வரலாற்று மூலங்களையும் அணுகி, காஞ்சியின் தோன்று தொட்டு இன்று வரையிலுமான அதன்சிறப்பை, அதன் பெயர் தொடங்கி, அமைப்பு, ஆட்சியாளர்கள், மக்களின் வாழ்வியல் போன்ற அனைத்துக் கோணங்களிலும் நோக்கித் தந்த முழுமையான நூல் இதுவரையிலும் தமிழில் எழுதப்படவில்லை என்பதே இங்குப் புலப்படும் உண்மை.

இத்தகைய நிலையில் காஞ்சியை முழுமையாக ஆராய அதன் வரலாறு தோற்றம் தொடங்கி ஆராயப்படவேண்டும் என்ற நிலையிலும், கிடைத்த வரையிலும் எல்லா வரலாற்று மூலங்கள் மூலமும் புலப்படும் எல்லாக்கூறுகளும் ஆராயப்படவேண்டும் என்ற நிலையிலும் இந்த ஆய்வு ஒரு தொடக்கமாக அமைகிறது; பிற்காலப்பல்லவர்க்கு முன்னைய காஞ்சியின் சிறப்பை முதலில் வெளிக்கொணரவேண்டும் என்ற எண்ணத்தில் 'கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன்' என எல்லையும் வகுத்துக் கொள்கிறது.

### வரலாற்று மூலங்கள்

வரலாற்றை எழுதத் துணையாகும் மூலங்களாக மொழி (இலக்கியம், வாய்மொழி இலக்கியம், கலைச் சொற்கள் போன்றன), தொல்பொருட்கள் (கல்வெட்டுகள், காசுகள், புதைபொருட் சான்றுகள், கோயில்கள் போன்றன), கலைகள் (நாட்டுப்புறக் கலைகள், செவ்வியற் கலைகள் போன்றன), மக்களின் வாழ்வியல் கூறுகள், பிறநாட்டார்க் குறிப்புகள், பிற பகுதியினர்க் குறிப்புகள் போன்றன துணையாகின்றன. ஆயின்

இவையெல்லாம் முழுமையாகக் கிடைப்பதில்லை, கிடைப்பனவும் எல்லாக் காலத்திற்கும் துணையாவன அல்ல. குறிப்பிட்ட இலக்கியம் குறிப்பிட்ட வரலாற்றுக்குத் துணை நிற்கும். குறிப்பிட்ட கல்வெட்டு, சில வரலாற்று உண்மைகளைப் புலப்படுத்தும். எனவே எல்லா மூலங்களும் எல்லாக் காலத்திற்கும் எல்லா வரலாற்றுக்கும் கிடைக்காத நிலையில் கிடைக்கின்ற மூலங்கள் அனைத்தையும் பயன் கொள்ள வேண்டும். ஆழமாக, ஒவ்வொரு செய்தியையும் காலவாரியாக அணுகி ஆராயும்போது உண்மைகள் புலப்படும். இந்த உண்மைகள் வரலாற்றைத் தெரிவுபடுத்த உதவும்.

பழந்தமிழக வரலாறு என எடுத்துக் கொண்டாலும் மேலே சுட்டிய வரலாற்று மூலங்கள் அனைத்தும் நமக்குக் கிடைக்கவில்லை. கிடைப்பன வெகு சில. எனினும் இவை யாவற்றையும் ஈடுசெய்ய நமக்கு அரும்பொருளாகக் கிடைத்திருப்பவை அக்காலத் தமிழ் இலக்கியங்கள். குறிப்பாகச் சங்க இலக்கியங்கள். இங்குத் தமிழ்த் தாத்தா உ.வே.சா. அவர்களை நாம் நன்றியோடு நினைவு கூரவேண்டும். சங்க இலக்கியங்கள் பொதிந்து வைத்துள்ள அன்றைய தமிழர் பற்றிய செய்திகளின் கற்பனை மிகுதியற்ற நம்பகத் தன்மை போற்றுதற்குரியது.

இலக்கியங்களை வரலாற்று மூலங்களாகக் கொள்ளலாமா கூடாதா என்ற கேள்விக்கு இன்று இடமில்லை. இலக்கியங்களில் காணப்படும் புனைவுகளை ஆய்ந்து தவிர்த்து, புலப்படும் வரலாற்று உண்மைகளை உணர்ந்து புலப்படுத்துதல் வரலாற்று ஆசிரியர் கடமை என்ற நிலையில் இவை மிகச் சிறந்த வரலாற்று மூலங்களாகக் கொள்ளத் தக்கன என்பது அறிஞர்கள் ஏற்றுக் கொண்ட உண்மை. இந்நிலையில் அன்றைய இலக்கியங்கள் காட்டிய சங்க காலத் தமிழ் மக்களின் வாழ்வியல், அரசியல் நோக்கப்பட்டு, அன்றைய தமிழக வரலாறும் எழுதப் பட்டுவிட்டது. மேலும் சங்க இலக்கியம் பற்றிக் கூறும் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார், "பண்பாடுகளின் ஒருங்கிணைப்பால் நேர்ந்த தொல்லைகள் ஒருபுறமிருக்க, தமிழும் ஆரியமும் ஒன்றையொன்று தழுவியதன் பயனாகத் தமிழ் மொழி வளமும் செழிப்பும் பெற்றது. அதன் விளைவாகத் தோன்றிய இலக்கியம் ஒப்புக் கொண்ட மேம்பாடுடைய இலக்கியத்தின் எழிலையும் தாய்நில மொழியின் ஆற்றலையும் ஒருங்கே பெற்றது. அதுதான் சங்க இலக்கியம். அதுதான் நமக்குக் கிடைத்திருக்கும் மிகப்பழைய

இலக்கியம்; அதுவே பலவழிகளில் தலைசிறந்த தமிழ் இலக்கியம்" என்று கூறும் கூற்றும்[10] இங்கு நினைவுகூரத்தக்கது. எனவே தமிழகத்தின் பண்டைய வரலாற்றுக்கு நமக்கு மிகுதியாகத் துணையாவன சங்க இலக்கியங்களே என்பது ஏற்கெனவே உறுதிப்படுத்தப்பட்ட உண்மை. இந்நிலையே இந்தக் காஞ்சி வரலாற்றுக்குமாம்.

இப்பாக்களில், புலவர்கள் கண்ட காட்சிகளை, உணர்ந்த உணர்வுகளை, வாழ்ந்த வாழ்வை அப்படியே பதித்து வைத்ததன் காரணமாக, இவை தம் இயல்பான போக்கில் வரலாற்றுத் தடங்களை ஆழமாகப் பதித்துச் சென்று விட்டிருக்கக் காண்கிறோம். காஞ்சியும் இவ்வாறே பதிவு செய்யப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்துள் காஞ்சி காட்டப்படும் தன்மை அன்றைய அம்மூதூரினை அப்படியே காட்சிப்படுத்துகிறது.

சங்க இலக்கியத்தை அடுத்து, பிற அக்கால படைப்புகளைக் காண, தொல்காப்பியத்தில் இவ்வூர் பற்றிய குறிப்பில்லை.

மணிமேகலை காஞ்சியின் வரலாற்றுச் சிறப்பையுணர மிகுதியாகத் துணைபுரிகிறது. சங்க இலக்கியம் பெற்ற நம்பகத் தன்மையை இது சில கூறுகளில் அறிஞர்களிடம் பெறமுடியாது போயினும்,[11] மதம் சார்ந்த, சிறப்பாகப் புத்தமதம் விளக்கும் இதன் வரலாறு போற்றத்தக்க வரலாறு என்று அறிஞர்கள் ஏற்கின்றனர். இந்த நிலையில் காஞ்சியின் வரலாற்றைப் புலப்படுத்துவதில் மணிமேகலையின் முக்கியத்துவமும் குறிப்பிடத்தக்கது.

தொல்லியல் அறிஞர்களின் கருத்துகளும், அக்காலச் செப்பேடுகள் துணையும் இங்குச் சிறப்பாகச் சுட்டத்தக்கன. "பொறிப்புகள் எல்லாம் உண்மையைக் கூறுகின்றன என்று கூறமுடியாது. முழு உண்மையைக் கூறுகின்ற பொறிப்புகள் மிகவும் அரியன ஆகும்" என கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் கூறும் கூற்று[12] இங்கு நினைவு கூரத்தக்கது. எனினும் எந்தச் சான்றாயினும், அவற்றை முழுமையாகப் பிற வரலாற்று மூலங்களுடன் ஒப்புநோக்கி, ஆராய்ந்து அவற்றின் உண்மைத்

---

10. தென்னிந்திய வரலாறு, ப. 204.

11. மணிமேகலைச் சிந்தனைகள், ப. 38.

12. தென்னிந்திய வரலாறு, ப. 30.

தன்மையையுணர்ந்து பின் அவற்றை வரலாற்றுக்குப் பயன் கொள்ளுதல் சரியானது என்ற நிலையில் இங்கு இவையும் மூலங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

மரபுச் செய்திகளும் இவற்றைப் போன்றதேயாம். பண்டைய காஞ்சி பற்றிய செய்திகள் பிற்கால வரலாற்று மூலங்களிலும் காணக் கிடைக்கின்றன. தேவாரம், பெரியபுராணம், மெக்கன்ஸிக் குறிப்புகள் போன்றன குறிப்பிடத்தக்கன. இவற்றுள் காணப்படும் செய்திகளும் இவை எந்த அளவிற்குக் காஞ்சியின் பழமையான வரலாற்றை அறியத் துணையாகின்றன என்ற நிலையில் ஆராயப்பட்டு இங்கு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன.

பெயர்கள் சிறந்த வரலாற்று மூலங்கள் என்ற நிலையில் காஞ்சியின் வரலாற்று விளக்கத்திற்கு இங்குக் காஞ்சியின் பெயர்களும், தொடர்புடைய பெயர்களும் ஆராயப்படுகின்றன.

காஞ்சி வருணனையில் தெளிவுபெறும் மக்கள் வாழ்வியலுடன், அருகாமையில் வாழ்ந்த மக்களின் வாழ்வியலும் நோக்கப்படுகின்றன.

மேலும் உள்நாட்டுத் தரவுகளுடன் பிறபகுதியினர்க் குறிப்புகளும், பிறநாட்டார்ச்சான்றுகளும் மூலங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

இவற்றுடன் இதுவரையிலும் காஞ்சி தொடர்பாக ஆராய்ந்து தம் அரிய சிந்தனைகளை அளித்துள்ள அறிஞர்களின் ஆய்வுகளும் பயன்கொள்ளப்படுகின்றன. காஞ்சி பற்றிய ஆய்வினுள் மேலே செல்ல, இவ் அறிஞர்களின் கருத்துகள் மிகுந்த துணையாக அமைந்தன; காஞ்சிபற்றிய வரலாற்றை மேலும் உணர்ந்து கொள்ள இவர்களின் சிந்தனைகள் வழிகாட்டின. இந்நிலையில் இந்த அறிஞர்கள் அனைவரும் வழிகாட்டியவர்கள்; நன்றிக்குரியவர்கள்.

### ஆய்வின் அமைப்பு

கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன்னைய காஞ்சியின் வரலாற்றை அறிய மேலே சுட்டப்பட்ட வரலாற்று மூலங்களினின்றும், கிடைத்தவரையிலும் செய்திகள் தொகுக்கப்பட்டன; கிடைத்த கருத்துகள் வகைப்படுத்தப்பட்டன. இந்நிலையில் இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரையுடன் 4

இயல்களாகப் பிரிக்கப்பட்டது. முன்னுரை ஆய்வின் நோக்கையும் போக்கையும் விளக்க, முடிவுரை இந்த ஆய்வின் மூலம் காஞ்சியின் வரலாறு சார்ந்து வெளிப்பட்ட சில முடிவுகளையும் உணரப் பட்ட சில சிந்தனைகளையும் தருகிறது. நான்கு இயல்களாக 1. காஞ்சி- பெயராய்வு 2. அமைப்பு 3. ஆட்சியாளர்களும், ஆட்சிமுறையும் 4. வாழ்வியல் என்பன அமைகின்றன.

### 1. காஞ்சி–பெயராய்வு

இந்த இயலில் காஞ்சியின் பெயர்க்காரணம் காணும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. கச்சி என்றும் வழங்கப்பட்ட இதன் இன்னொரு பெயர்க்காரணம் காணும் முயற்சியும் மேற்கொள்ளப்படுகிறது. தவிர, காஞ்சி, கச்சி என்ற இரண்டு பெயர்களாலும் காஞ்சிபுரம் அன்று வழங்கப்பட்டதற்கு, அறிஞர்கள் தரும் விளக்கங்கள் சுட்டப்பட்டு, உண்மைக் காரணம் காண முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. இந்தப்பெயராய்வு காஞ்சியின் வரலாற்றை அறியத்துணைபுரியும் நிலை குறித்தும் இவ்வியல் ஆராய்கிறது.

### 2. அமைப்பு

இயற்கையின் அரவணைப்பில் எழுந்து சிறந்த இவ்வூரின் அமைப்பு தொடர்பான செய்திகள் இங்கு ஆய்வு செய்யப்படுகின்றன. இயல்பாக எழுந்த ஓர் ஊர் பலதுறை சார்ந்த வளர்ச்சி காரணமாகவும், அரசியல் காரணமாகவும் நகராக விரிவாக்கம் பெற்றதை இவ்வியல் விளக்குகிறது.

### 3. ஆட்சியாளர்களும், ஆட்சிமுறையும்

தொன்று தொட்டுக் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தோர் வரலாறு காணும் முயற்சி இவ் இயலில் மேற்கொள்ளப்படுகிறது. காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு பண்டைய காலத்திலேயே தமிழர் ஆட்சி புரிந்து வந்துள்ளனர் என்பது இங்குத் தெரியவரினும், இவர்களின் ஆட்சி எல்லைக்குட்பட்ட இடங்கள் தெளிவாகவில்லை. மேலும் காஞ்சி மட்டுமே இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படும் நிலையில், ஆட்சியின் எல்லை குறித்த ஆய்வுக்குள் இந்த இயல் செல்லவில்லை. காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொன்று தொட்டு ஆண்டு வந்தோருள் யாருக்குப்பின் யார் ஆண்டனர்; தமிழர் யார், பிறநாட்டார் யார், எவ்வாறு ஆண்டனர் போன்ற செய்திகள் அனைத்தையும் காண விழைந்த போதிலும் வரலாற்று

மூலங்கள் மிகுதியாகக் கிடைக்காத நிலையில் கிடைத்த செய்திகள் வகைப்படுத்தப்பட்டு, இத்தலைநகரத்தின் தலைவர்களாகக் கருதப்படுவோர் யார்? யார்? இவர்களின் வரலாறுகள் என்ன? போன்ற கோணங்களில் மட்டும் இந்த ஆய்வு தன் போக்கை அமைத்துக் கொள்கிறது.

### 4. வாழ்வியல்

காஞ்சி மக்களின் அன்றைய வாழ்க்கை முறைகள் இங்கு ஆராயப்படுகின்றன. அவர்களின் பண்பாடு சார்ந்த பழக்க வழக்கங்கள், கல்வி, சமயம், வாணிகம் தொடர்பாகத் தெரியவரும் செய்திகள் இயம்பப்படுகின்றன. இவை இம்மக்களின் வாழ்க்கை எத்தகைய சிறந்த முறையில் அமைந்திருந்தது என்பதை விளக்குந்தன்மையும் இங்குப் புலப்படுத்தப்படுகின்றது.

# இயல் - 1

## காஞ்சி - பெயராய்வு

ஒருவரை அல்லது ஒன்றைக் குறிப்பிட்டுச் சுட்டவும், பிறிதொருவரிடமிருந்து அல்லது பிறிதொன்றிடமிருந்து வேறுபடுத்திக் காட்டவும் பெயர்கள் சூட்டப் பெறுகின்றன. மனிதன் இவர்களோடு, இவற்றோடு கொள்ளும் அறிமுகத்தின் ஆரம்பத்திலேயே பெயர்களின் தோற்றமும் தொடங்கி விடுகிறது. இடப்படும் பெயர்கள் பொருட்களின் தோற்றம் பண்பு போன்றவற்றோடும் இடுபவர் மனநிலையோடும் சூழ்நிலையோடும் தொடர்புடையவை. எனவே பொருட்களுக்கும் பெயர்களுக்குமான நெருக்கமான உறவு பொருட்களின் வரலாற்றை வெளிப்படுத்தவும் துணையாகின்றன. இந்நிலையில் பெயர்களின் பொருள் (meaning) பொருட்களின் (things) உண்மை வரலாற்றை அறிய மிகத் தேவை என்பது புலப்படும். இவற்றுள் இடப்பெயர் பற்றி ஆராயும் போது, மொழியியல், இனவரலாறு, சமயம், அரசியல் வரலாறு, தொல்பொருள், நிலநூல், சமூகவியல், நாட்டுப்புறவியல், இயற்கை அறிவியல் போன்ற பல துறை அறிவையும் இடப்பெயர் ஆய்வு தரவல்லது என, கி. நாச்சி முத்து இயம்பும் சிந்தனையுடன்[1] இவற்றின் இன்னொரு பயனும் இங்குச் சிந்தித்தற்குரியது; சுட்டுவதற்குரியது. இடப்பெயர்கள்/ஊர்ப்பெயர்களின் உண்மைக் காரணத்தைக் காண முனையும் போது அங்குத் தெளிவாவன இடங்களின்/ஊர்களின் வரலாறுகளும் கூட. இன்னொரு கோணத்தில் சொல்வது என்றால் இடங்களின்/ஊர்களின் வரலாறுகளைத் தெரிந்து கொள்ளும் போதே அவற்றின் பெயர்க் காரணமும் விளங்கும்;

---

1. தமிழ் இடப்பெயராய்வு, பக். 52-61.

பெயர்க் காரணத்தை உறுதிப்படுத்தவும் இயலும். இந்நிலையில் தமிழக வரலாற்றுக்கு இடங்களின்/ஊர்களின் வரலாறுகளும் மிகுந்த பயனாகும் என்ற நிலையில் பெயராய்வுகளின் முக்கியத்துவம் மீண்டும் உறுதிப்படுகிறது. இந்நிலையில் காஞ்சியின் பெயராய்வாக அமையும் இந்த இயலில் காஞ்சியின் பெயர்க் காரணம் காணும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. கி.பி. 6க்கு முன்னைய காஞ்சியின் வரலாற்றைத் தெளிவாக்குவதில் காஞ்சி பெயர் ஆய்வின் முக்கியத்துவமும் புலப்படுத்தப்படுகிறது.

பொதுவாகப் பொருட்கள் முதல் பெயரை மனிதத் தொடர்பின் ஆரம்பத்திலேயே பெற்றாலும் மக்களுக்கும் அப்பொருட்களுக்கும் இடையே மேலும் மேலும் ஏற்படும் தொடர்பு காரணமாகப் பல பெயர்களை ஒரு பொருள் பெறுகிறது. எல்லாப் பொருட்களும் இவ்வாறு பல பெயர்களைப் பெறும் எனக் கூறமுடியாது. சில பெறும். எனவே ஒரு பொருளின் செல்வாக்கை, ஒரு பொருளின் பயன்பாட்டை, மனிதனுக்கும் ஒருபொருளுக்குமான நெருக்கமான தொடர்பை அத்தகைய பலபெயர்கள் உணர்த்தும். ஊர்ப்பெயர்களுக்கும் இது பொருந்தும். ஊரின் சிறப்புக்கு ஏற்ப, மக்கள் வாழ்வியலில் அவ்வூர் பெறும் இடத்திற்கு ஏற்ப, பலபெயர்களைச் சில ஊர்கள் பெறும் வாய்ப்பு அமைகின்றது. இப்பெயர்களை அவ்வூர்கள் ஒரே காலகட்டத்திலும் பெறும். பல்வேறு காலங்களிலும் பெறும். தமிழகத்தில் இவ்வாறு பல பெயர்களைப் பெற்ற ஊர்கள் சில. அவற்றுள் ஒன்று காஞ்சி.

காஞ்சியின் வரலாற்றிற்கு இதன் அனைத்துப் பெயர்களையும் ஆராய்தல் தேவை. காஞ்சியின் பெயர்கள் ஒவ்வொன்றின் தனித்தனி ஆய்வு ஒவ்வொரு பெயரும் இதற்கு வழங்கப்பட்டதன் காரணத்தைக் காணத் துணையாகி, காஞ்சியின் வரலாற்றைத் தெளிவாக்க உதவும். மக்களிடம் காஞ்சி பெற்ற செல்வாக்கையும், காஞ்சியின் செல்வாக்கால் மக்கள் கவரப்பெற்ற விதங்களையும் இவ்வாய்வு தெளிவுபடுத்தும்.

தமிழக வரலாற்று மூலங்கள் காஞ்சி என்ற ஊர்ப்பெயரைக் காட்டுகின்றன. இதன் பல வடிவங்களைக் காட்டுகின்றன. இந்த ஊரின் பிற பெயர்களையும் காட்டுகின்றன. காஞ்சி, காஞ்சிபுரம், கஞ்சி, கஞ்சிபுரம், காஞ்சீ, காஞ்சீபுரம், காஞ்சி மாநகர், காஞ்சிநாடு, கச்சி, கச்சிப்பேடு, கச்சிமாநகர், கச்சியம்பதி, அத்தியூர், திருஅத்தியூர், சின்னக்காஞ்சி, சிவக்காஞ்சி, காஞ்சனபுரம்,

காஞ்சீபுரி, சம்பாபுரி, பல்லவேந்திரபுரி, விட்டுணு காஞ்சி, புத்தக் காஞ்சி, ஜைனக் காஞ்சி, முப்புவனவனம், காமபீடம், தபோமயம், மும்மூர்த்தி வாசம், துண்டிரபுரம், இலயசித்தூர், பிரமபுரம், விண்டுபுரம், சிவபுரம், சருவசித்திகரம், கன்னிகாப்பு, ஆதிபீடம், பிரளயசித்து, இந்துபுரம், மும்முடீஸ்வரம், காமகோட்டம், சகலசித்தி தண்டகபுரம், சத்திய வரத ஷேத்திரம் போன்ற பல பெயர்கள் அங்கே தென்படுவதாக அறிஞர்கள் சொல்லிச் சென்றுள்ளனர்.[2]

இயற்கை, தத்துவம், அரசியல், சமயம் என, பல சார்புகள் காரணமாகக் காஞ்சி பெற்ற பெயர்கள் இவை. இவற்றுள் காஞ்சி, காஞ்சிபுரம், காஞ்சிநாடு, கச்சி, கச்சிப்பேடு, கச்சிமாநகர் தவிர, பிற அனைத்துப் பெயர்களும் பிற்காலப் பல்லவர்களின் காலமான கி.பி. 6-க்குப் பின்னைய பெயர்களாக, பின்னைய வரலாற்று மூலங்கள் சுட்டும் பெயர்களாகத் தெரியவருகின்றன. இந்நிலையில் இந்த ஆய்வில், அன்றைய காஞ்சியின் வரலாற்றைத் தெளிவு பெற உதவும் காஞ்சி, கச்சி சார்ந்த பெயர்கள் மட்டும் ஆய்வு செய்யப்படுகின்றன. இப்பெயர்களுக்கு அறிஞர் சுட்டும் காரணங்களையும் இவற்றுள் எக்காரணம் இவ்வூர்ப்பெயரின் உண்மைக் காரணமாக இருத்தல் கூடும், பிற ஏன் பொருத்தமானதாக இல்லை, பொருந்தும் காரணம் எவ்வாறு அன்றைய காஞ்சியின் வரலாற்றைத் தெளிவுபடுத்தவும் உதவுகின்றது போன்றன இங்கு நோக்கப்படுகின்றன. தவிர, இங்கு, காஞ்சி, கச்சி இப்பெயர்கள் இரண்டும் எவ்வாறு ஒரே நகரைக் குறித்து வழங்கின; எப்போது வழங்கத் தொடங்கின என இரண்டு பெயர்கள் வழங்கப்பட்டதன் காரணமும் ஆராயப்பட இருக்கின்றது.

### 1. காஞ்சி : பிறவடிவங்கள் – பயிற்சிகள்

| | | |
|---|---|---|
| கச்சிப்பேட்டுக்காஞ்சிக் கொற்றனார் | - | குறுந். 213, 216 |
| கழனியம்படப்பைக் காஞ்சியூரன் | - | அகம்96:8, குறுந். 127:3 |
| காஞ்சிப்புலவனார் | - | நற். 123 |
| மதுரைக் காஞ்சிப் புலவர் | - | அகம் . 89; குறுந். 173 |

---

2. காஞ்சிபுரம் மலர், ப. 103.
காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 22.

| | | |
|---|---|---|
| காஞ்சி - | அரும்பு | - ஐங். 1 : 4 |
| | பூ | - புறம்.18; குறி.4;அகம்.25,296; கலி. 26:3 |
| | தளிர் | - புறம். 344 |
| | மரம் | - புறம். 351; பதிற். 23 : 19, 62 : 15; பொரு. 180, 190; சிறு. 178-181 ; பெரும். 374-76: கலி. 108: 62, 63 ; மலை.449; அகம்.156, 286, 336, 346 |
| | தாது | - அகம். 56:3-6, 341-6-11; குறுந்.16, கலி. 34:8, 108:60 |
| | துறை | - கலி. 74 : 5 |
| | நிலையாமை | - புறம். 365; பதிற். 65: 3-4, 84 : 19, 90 : 37-39 |
| | காஞ்சிப்பண் | - புறம். 281:5; 296:1-3 |
| | ஆறு | - பதிற். 48:17-18 |
| | அணிவகை | - பரி. 7:46-50 |

பொன்னெயிற் காஞ்சி - மணி. 21.418

பொன்னெயிற் காஞ்சிநாடு - மணி. 28.156

காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடப்பட்டது - பல்லவர் செப்பேடுகள் முப்பது, பக். 360, 367.

**2. கச்சி : பிற வடிவங்கள் – பயிற்சிகள்**

கச்சியோனே கைவண் தோன்றல் - பெரும். 421

கச்சி மாநகர் புக்ககாதை - மணி. 28

கச்சி முற்றத்து நின்னுயிர் கடைகொள - மணி. 21. 174

கச்சிப்பேட்டு
இளந்தச்சனார் - நற். 266

கச்சிப்பேட்டுப்
பெருந்தச்சனார் - நற். 144, 213

கச்சிப்பேட்டு
நன்னாகையார் - குறுந்.. 30, 172, 180

கச்சிப்பேட்டுக் காஞ்சிக்
கொற்றனார் - குறுந். 213, 216

காஞ்சி, கச்சி பெயர்களின் பிறவடிவங்களும், பொருண்மைகளும் இப்பயிற்சிகளில் தெளிவாக விளக்கமாகின்றன. இப்பயிற்சிகள், இச்சொற்கள் தமிழர் வாழ்விலும், வழக்கிலும் செல்வாக்குடன் திகழ்ந்தமையைக் காட்டுகின்றன. இப்பயிற்சிகள் மூலமாகவும், பொருண்மைகள் மூலமாகவும், இவ்வூர்ப் பெயர்க்காரணங்களை ஆராய முற்படும் போது, எல்லா ஊர்ப் பெயர்களுக்கும், கூறப்பட்ட, தோற்றுவிக்கப்பட்ட பல காரணங்களை இவற்றிற்கும் காண்கிறோம். தோற்ற வரலாறு தெளிவில்லாத காரணத்தால் ஏற்பட்ட ஐயங்களே, கருத்துகளே இத்தகைய ஊகங்களுக்கும் கற்பித்தலுக்குமுரிய காரணங்களாகும். எனவே காஞ்சி, கச்சியின் பயிற்சிகள், பொருண்மைகள், இவற்றின் தோற்றக் காலம், அக்காலச் சூழல், ஆராய்ச்சியாளர்களால் சுட்டப்படும் பெயர்க்காரணங்கள் அனைத்தையும் ஆராய்ந்த பின்னரே இவற்றுள் எது உண்மையான காரணமாக இருத்தல் கூடும் என முடிவு செய்தல் இயலும் என்ற நிலையில் முதலில் அறிஞர்கள் கூறும் கருத்துகளைக் காணலாம்.

### 1. 1 காஞ்சி- சொல்லப்பட்டு வரும் காரணங்கள்

1. தாவரம் - "காஞ்சி என்ற மரம் (பூவரசுமரம்) காஞ்சிபுரத்தில் அகலமாயும் பரந்தும் காணப்படுகிறது. எனவே அதன் நிழல் சூரியன் உதயமாகும் போது அதனடியிலேயே விழுந்து விடுகிறது. இம் மரத்தின் பெருமையால் காஞ்சிபுரம் தன் நிழல் பிரியாத காஞ்சி எனப்பெயர் பெற்றது. இதனைக் கச்சியப்பச் சிவாச்சாரியார் காஞ்சி மாநகருக்குத் 'தன் நிழல் பிரியாத' என்று

அடை கொடுத்துக் கூறியுள்ளமையினால் அறியலாம்."[3]

புரம் என்ற சொல்லுக்கு ஊர் என்பது பொருளாகிறது. எனவே காஞ்சி மரத்தையுடைய ஊர் காஞ்சிபுரம் ஆகிறது என்பது சிறப்புக்குரியதும் இயற்கையோடு இயைந்த பெயராகவும் விளங்குகிறது".[4]

"காஞ்சி என்ற மரமிருந்த காரணத்தால் காஞ்சிபுரம் எனக் கூறப்படுவதே மிகவும் பொருத்தமுடையதாகிறது".[5]

"காஞ்சி என்ற ஊர்ப்பெயர் மரப்பெயரால் பெயர் பெற்றது.[6]

"காஞ்சிபுரம் ஆற்றுப்பூவரசு மிக்கதால் இப்பகுதி காஞ்சிபுரம் எனப்பெயர் பெற்றது".[7]

"காஞ்சி என்னும் தாவரவிசேடத்தால் இம்மாநகர் பெயர் பெற்றிருக்கக்கூடும்".[8]

"காஞ்சி மரங்கள் மிக்கிருந்த இடமாதலால் இவ்வூர் காஞ்சிபுரம் எனப்பெயர்பெற்றது".[9]

"காஞ்சி மாநகர்ச் சோலையில் காஞ்சி மரங்கள் இருந்தனவாகப் பெரும் பாணாற்றுப் படையில் வருகிறது. அதனால் தான் இந்த நகருக்குக் காஞ்சிபுரம் எனப்பெயர் வந்தது போலும்".[10]

2. அணி - "காஞ்சி என்பது மகளிர் இடையில் அணியும் மேகலையாம். நிலமகள் இடையில் அணியும் ஆபரணம் போல காஞ்சி இவ்வுலகில் அமைந்துள்ளதால் இப்பெயர் பெற்றது என்பர்".[11]

---

3. மேலது, ப. 23. 4. மேலது ப. 23. 5. மேலது ப. 23.
6 இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 96.
7. காஞ்சிபுரம் மலர், ப. 68. 8. மேலது ப. 69.
9. மேலது ப. 103. 10. மேலது, ப. 10.
11. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 22

"காஞ்சி என்பது மகளிர் இடையில் அணியும் மேகலைக்குப் பெயர். நிலமகளின் இடையில் அணியும் காஞ்சிபோல நடுவாக அமைந்ததால் அப்பெயர் அமைந்தது என்று ஒரு காரணமும் கொண்டது உண்டு".[12]

"நிலமகளுக்கு ஒட்டியாணம் போன்று (காஞ்சி-ஒட்டியாணம்) விளங்குவதால் இப்பெயர் வந்தது".[13]

3. நிலையாமை - "காஞ்சி என்னும் சொல்லுக்கு நிலையாமை என்ற பெயரும் உண்டு. மக்கள் வீடு பெறுவதற்காகப் பல்வேறு நிலையாமைக் கருத்துகளைச் சொல்லுதல் காஞ்சித் திணையாகும். அவ்வாறு சொல்லும் சான்றாண்மையோர் பலரும் வாழ்ந்ததால் காஞ்சி என்ற பெயர் பெற்றதென்பர்".[14]

"காஞ்சி - நிலையாமை; நிலையா உலகில் நிலைத்தது புறப்பொருள் ஒன்றே என அன்னை காமாட்சி உணர்த்தியதால் இப்பெயர் பெற்றது".[15]

4. புராணம் - "காஞ்சிபுரத்தை, பிரமன், அஞ்சித்தல்-பூசித்தல், புரம்-நகரம் எனப் பிரித்து நோக்கிப் பிரமனால் பூசிக்கப்பெற்ற நகரம் காஞ்சி புரமாயிற்று என்பர் சிலர்."[16]

"க+அஞ்சி → காஞ்சி எனப்பிரித்து, க, பிரமம், அஞ்சி-அஞ்சித்தல். எனவே பிரமதேவனால் விரும்பிப் பூசித்துப் பேறு பெற்ற தலம் எனப்பொருள். படுமென்றும் க-தலைமை, காஞ்சி- பேரின்பம் தருவது என்றும்

---

12. காஞ்சிபுரம் மலர், ப. 10. 13. காஞ்சிபுரம் மலர், ப. 63.

14. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 22.

15. காஞ்சிபுரம் மலர், ப. 63.

16. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 22.

நிலமகளுக்குக் காஞ்சி என்னும் உந்தித் தானத்தை ஒத்தது என்னும் காரணப் பொருள் கூறுவதும் உண்டு எனக் கூறுவர். இவையெல்லாம் பொருந்தாத கூற்று களாகவே கொள்ளல் வேண்டும்".[17]

5. மதில் - "காஞ்சி என்ற சொல்லுக்கு மதில் என்ற பொருள் இருப்பதால் மதில் விசேடத்தாலும் இப்பெயர் இவ்வூருக்கு ஏற்பட்டு இருக்கலாம்."[18]

இவ்வாறு அறிஞர் பலரின் கருத்துகளுடன் முடிவு செய்ய முடியவில்லை என்ற எண்ணமும் அறிஞர்களிடம் காணப்படுகிறது.[19]

---

17. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பக் 39-40.
18. காஞ்சிபுரம் மலர், ப. 69.
19. 'The Origin and Significance of the words Kacci and Kanchi are not clearly known while the former word is a Tamil one, the later is taken both as a Tamil word and also as a Sanskrit word. As a Tamil word, it is spilit up into two, Ka and añci. Ka is taken to mean Brahma and añci or añcittal to mean worship, thus showing that the name stands for the place where Brahma worshipped God Siva. Again Ka is taken to mean eminence, headship, bliss and Kanchi to mean the place where one get supreme bliss. A third explanation is also offered. It is said that Kanchi is the name of a tree and since there was a forest of such trees at the place it came to be called so, in the same way to Tillai (chidambaram) is so named because of the Tillaivanam which existed there and jambukeswaram near Tirucirappalli came to be called after the forest of Jambu trees that once existed there. The term Kanchi in Sanskrit is taken also as a girdle and it is explained that the city was like a girdle in the earth- Kanchipuram in the early South Indian history, pp.4-5.

The Origin of the word Kacci and Kanchi cannot be explained satisfactorily. Fanciful explanations are found in later religious literature as well as in the legendary accounts grew in abundance

## 2. 1 கச்சி-சொல்லப்பட்டு வரும் காரணங்கள்

1. தாவரம் - "கச்சி என்ற பெயர் (சீந்தில் என்பது பொருள்) தாவரப்பெயரே."[20]

2. மயில் - "கட்சி என்ற சொல்லும் கச்சி என்ற சொல்லும் ஒலிப்பில் சிறு மாற்றமே யொழிய வேறொன்றுமில்லை. க விற்கும் சி க்கும் இடையில் டகர ஒற்றும் சகர ஒற்றுமே மாற்றம். ஒலியமைப்பில் சிறிது மாறுபட்டுள்ளதால் ஒலிப்பவர் வாயில் கட்சி என்ற சொல் கச்சி என்று வழங்கப்பட்டு விட்டது. இப்பொழுது கட்சி என்ற சொல்லுக்குப் பொருள் காண்போமே யானால் அது காட்டில் மயில் வாழ்கின்ற பகுதியைக் குறிப்பது எனலாம். கட்சி என்ற சொல்லுக்குக் காடு, கூடு, புகலிடம், சேக்கை, ஒதுக்கிடம் எனப்பல பொருட்களைக் கூறுவர். சங்க இலக்கியங்களை நோக்குவோமே யானால் பெரும்பாலும் மயில்கள் வாழ்கின்ற காட்டுப் பகுதியைக் குறிப்பிடக் கட்சி என்ற சொல்லைக் குறிப்பிட்டனர் என்பதனைப் பின் வரும் எடுத்துக்காட்டுகள் நமக்குத் தெளிவாக்குகின்றன

வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி
மயிலறிபறியா - நற். 13

---

in the subsequent periods of the city's history. T.V. Mahalingam's suggestion that the city was so named after Kanchi tree may be acceptable as it appears to be nearer the truth. However the poetical explanation of kanchi as a girdle to earth is also sensible for the word Kanchi denotes a girdle in Sanskrit....... However whatever explanations are given regarding the origin of the name of the city can only be considered as tentative- Kanchipuram through the ages, pp.7-8.

20. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், ப. 94.

சேணோன் இழைத்த நெடுங்கால் கழுதின்
கானமஞ்ஞை கட்சி சேர்க்கும்
கல்லகத்தது எம் ஊரே - நற். 276

நனவுறு கட்சியின் நன்மயில் ஆல -அகம். 372

மணிவரைக் கட்சி மடமயிலாலுநம் மலர்ந்த
வள்ளியங்கானம்- ஐங்குறு. 250

உச்சி நின்ற உவவுமதி கண்டு
கட்சி மஞ்ஞையிற் சுரமுதல் சேர்ந்த
சில்வளை விறலி - புறம். 60

ஆகவே இன்றுள்ள காஞ்சி மாநகரம் காடு கொன்று நாடாக்கி வளப்படுத்தியதற்கு முன் மயில்கள் வாழ்ந்த அழகிய காடாக இருந்திருத்தல் கூடும். ஏனெனில் நிலமுழுவதும் ஒரு காலத்தில் காடாக வல்லவோ இருந்தன. அவ்வாறு மயில்கள் வாழ்ந்த இடங்கள் ஊராகத் திரியும்போது அவை அம்மயில்களின் பெயராலேயே அழைக்கப்படுவதை மயிலாப்பூர், மயிலம், மயிலாடுதுறை, மயிலாடும் பாறை போன்ற ஊர்கள் இன்றும் இருப்பதிலிருந்து நாம் அறிகின்றோம். மேலும் இதனை நினைவு படுத்துவதற்காக வேண்டித்தானோ என்னவோ அந்நகரத்தை அமைத்தவர்கள் அதனை மயில் வடிவாக அமைத்திருந்தனர் என்பதனைப் பெயர் அறியாத புலவர் பாடிச் சென்ற பாடல் மூலம் தெளிவாக நாம் அறிகின்றோம். அப்புலவர் பாடிய பாடல் தண்டியலங்கார நூலில் மேற்கோள் பாடலாக நமக்குக் கிடைத்திருக்கிறது.

அப்பாடல் வருமாறு :

**ஏரியிரண்டும் சிறகா எயில் வயிறா**
**காடுடைய பீலி கடிகாவா – நீர்வண்ணன்**
**அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே**
**பொற்றேரான் கச்சிப் பொலிவு.**

இவற்றையெல்லாம் நோக்குங்கால் மயில் வாழ்ந்த இடத்தில் அமைந்த நகரத்தைக் கட்சி என்ற சொல்லால் அழைக்க அது ஒலிமயக்கத்தால் கச்சி என்று சான்றோர் முதல் கல்லாதார் வரை அழைக்கப்பட்டு நாளடைவில் வட மொழியில் (சம்ஸ்கிருதம்) காஞ்சி என மருவி இன்று அந்நகரம் காஞ்சி என எல்லோரும் அழைக்கும்படி ஆயிற்று. எடுத்துக்காட்டாக மயிலாடுதுறை என்ற ஊர்ப்பெயர் வடமொழியாளரால் மயூரம் என்று அழைக்கப்பட்டு இன்று மாயவரமாகக் காட்சியளிப்பது போலாம். இவ்வழக்கு மணிமேகலை நூல் எழுந்த காலத்தே வழங்கத் தலைப்பட்டு விட்டதை அந்நூலின் மூலம் நாம் அறியலாம்.[21]

3\. ஆடை - "இனி கச்சி எனப்பொருள் கொண்டு காண்போமானால் அது ஆடவர்கள் இடுப்பில் அணியும் துணி. அதாவது ஆடை நெகிழாமல் இருப்பதற்காக வேண்டிக் கட்டப்பட்ட துணியின் பெயராகும் எனலாம் அல்லது பெண்கள் மார்பில் அணியும் இரவிக்கை போன்ற ஆடையும் எனலாம்.

காஞ்சி, திருவேங்கடம் முதல் தெற்கே குமரிமுனை வரை இருந்த தமிழ்ப் பகுதிக்குக் கச்சி போன்று அமைந்திருந்தது எனப்பொருள் கொள்ளினும் அமையும். இந்தப் பெருளில் ஒரு புலவர் 'கச்சி' என்ற ஊரைக் குறிப்பிட்டு, கச்சி என்ற பெயரால் சொல்விளையாட்டுப் புரிந்துள்ளமையைக் காணலாம்.

**கச்சிக் குரங்கன் மனுநீதி வேந்தன் கனவரை மேல்**
**கச்சிக்குச் சொல்லி முலை பூணுமோ? சிறுகைகளள**

---

21\. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பக். 40-41.

கச்சிக்கு வாரி முடித்திடுமோ இன்று ஓர் காளை பின்னே
கச்சிக்கு எனச் சென்று இராமேசுவரம் கண்ட காட்சி
நன்றே (தனிப்பாடல் திரட்டு, கழக வெளியீடு)" [22]

4. அணி - "கச்சி என்ற சொல் திரிந்து காஞ்சியாக வழங்கப்பட்டபோது அதன் பொருள் மேகலாபரணம் போன்று அந்நகர் வீற்றிருந்தது. அதனால் அப்பெயர் ஏற்பட்டது என்றும் பொருள் கொள்வர். சேக்கிழார் சுவாமிகள் இக் கருத்தினரே. அவர் தாம் இயற்றிய பெரிய புராணத்தில்,

**தண்காஞ்சி மென்சினைப் பூங்கொம்பராடல்**
**சார்ந்தசைய அதன் மருங்கு சுரும்பு தாழ்ந்து**
**பண்காஞ்சி இசை பாடும் பழனவேலிப்**
**பணை மருதம் புடைய யுடைத்தாய்ப் பாரில் நீடும்**
**திண்காஞ்சி நகர் நொச்சி இஞ்சி சூழ்ந்த**
**செழுங்கிடங்கு திருமறைகளொலிக்குந் தெய்வ**
**வண்காஞ்சி அல்குல் மலை வல்லி காக்க**
**வளர் கருணைக் கடலுலகஞ் சூழ்ந்தால் மானும்**

என்று குறிப்பிடுகிறார்."[23]

5. வடமொழித் திரிபு; மரூஉ- "கச்சி என்ற சொல் இடையில் அணியும் அரைஞாண் அல்லது ஒட்டியாணம் என்னும் பொருளுடையதான "காஞ்சீபுர" என்றதன் சுருங்கிய வடிவமாம் "காஞ்சி" என்ற சமஸ்கிருதச் சொல்லின் தமிழ்ப் படுத்தப்பட்ட வடிவமே ஆகும்."[24]

"கச்சி என்பது காஞ்சிபுரத்தின் மரூஉ ஆகும். காஞ்சி என்பது கஞ்சி என வடமொழியில் திரிந்து வழங்கிப் பின்னர் கஞ்சி அல்லது கச்சி எனத் திரிந்தது என்பர்."[25]

---

22. மேலது பக். 41-42.

23. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 42.

24. தமிழர் வரலாறு I, பக். 524-25.

25. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 22.

இவ்வனைத்துக் காரணங்களிலும், காஞ்சியும் கச்சியும் தமிழ்ச் சொற்களே என்பதும், இயற்கைச் சார்புடன் வழங்கப்பட்ட பெயர்களே இவை என்பதும் பல அறிஞர்கள் சிந்தனையாக இருந்தபோதிலும், முடிவாக இதனை ஏற்பதில் அறிஞர்களிடம் தயக்கம் காணப்படுகின்றது. இந்த ஆராய்ச்சியிலும் இவை தமிழ்ச்சொற்கள்; இயற்கைச் சார்புடன் தோற்றம் பெற்ற சொற்கள் என்ற முடிவே பெறப்படுகின்ற நிலையில் இவை ஏன் பொருத்தமாக அமைகின்றன;பிற ஏன் பொருத்தமான காரணங்களாக இல்லை என்பதை இங்கு விளக்கமாகக் காணலாம்.

### 3. பொருந்தாக் காரணங்கள்

1. மேகலை என்னும் பொருண்மையுடைய காஞ்சி வடமொழிச் சொல். அதன் தமிழாக்கம் / மரூஉ கச்சி.

2. ஆடை

3. மதில்

4. பிரமன் பூசித்த தலம்.

5. நிலையாமை.

1. மேகலை என்னும் பொருண்மையுடைய காஞ்சி வடமொழிச் சொல். அதன் தமிழாக்கம் மரூஉ / கச்சி: காஞ்சி என்பது வடமொழிச் சொல் என்பது பி.டி. சீனிவாச ஐயங்கார் கருத்து என்பதை, புலவர் கா.கோவிந்தன் எடுத்தியம்புகிறார். "காஞ்சியும் அதைத் தலைநகராகக் கொண்ட நாடும் பழந்தமிழர் காலத்தில் தமிழரசர்களால் ஆளப்படவில்லை. சமஸ்கிருத ராசாக்களால் ஆளப்பட்டது என்பதற்குத் திருவாளர் அய்யங்கார் காட்டும் பிறிதொரு காரணம் காஞ்சிபுரம் என்ற ஊர்ப்பெயரைக் கி.மு. 200 ஆம் ஆண்டைச் சார்ந்த பதஞ்சலி என்ற இலக்கண ஆசிரியர் உணர்ந்திருக்கவும் காஞ்சி என்ற அவ்வூர்ப் பெயர் பழந்தமிழ்ப் பாக்களில் இடம்பெறவில்லை யென்பது. கி.மு. 200 இல் வாழ்ந்த பதஞ்சலி மதுரையின் குடிமகன் என்னும் பொருளுடையதான மதுராபுரக, உறையூரின் குடிமகனான உரகபுரக என்ற சொற்களின் பிறப்பியல் முறைக்கு இலக்கணம் கூறாமல் காஞ்சிபுரத்தின் குடிமகன் என்னும் பொருள் உடையதான காஞ்சிபுரக என்ற சொல்லுக்கு மட்டுமே பிறப்பியல் இலக்கணம் வகுத்துள்ளார். காரணம் அந்நாட்களில் காஞ்சிபுரமே சமஸ்கிருத நாகரிகத்தின் தென்கோடி எல்லைத் தளமாக

அமைந்து விட்டதுதான்..அம்மாநகர் தமிழ் வழங்கும் நாட்டில் இடம் பெற்றிருப்பினும் அதற்கு என ஒரு தமிழ்ப்பெயர் இல்லை. கச்சி என்பது அதன் பெயராகக் கி.பி. 5ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பெரும்பாணாற்றுப்படையில் முதன்முதலாக இடம் பெற்றுள்ளது. ஆனால் அதுவும் இடையில் அணியும் அரைஞாண் அல்லது ஒட்டியாணம் என்னும் பொருள் உடையதான காஞ்சீபுர என்றதன் சுருங்கிய வடிவமாம் காஞ்சி என்ற சமஸ்கிருதச் சொல்லின் தமிழ்ப்படுத்தப்பட்ட வடிவமே ஆகும். காஞ்சியூர் என்ற சொல் தமிழ்ப்பாக்களில் இடம் பெற்றுள்ளது என்றாலும் அது காஞ்சி மரங்கள் நிறைந்த ஊர் என்ற பொதுப்பொருள் உடையதேயன்றி, காஞ்சீபுரத்தின் இயற்பெயரைக் குறிக்க வல்லதன்று (322-23) என அவர் கூறியிருப்பதுகாண்க" என இதனை எடுத்தியம்பும் புலவர் கா.கோவிந்தன்,[26] பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்தை மறுக்கிறார். காஞ்சி தமிழ்ச் சொல்லே என நிறுவுகிறார்.

"காஞ்சி மாநகர் அத்துணைப் பழங்காலத்தில் பல்கலைப் பெருநிலையமாகத் திகழ்ந்தது என்றால் அது அப்பெருநிலையை எடுத்த எடுப்பிலேயே அடைந்திருக்க இயலாது. அப்பெருநிலை அம்மாநகரத்துக்கு வந்து குடியேறியவர்கள் காலத்திற்குப்பிறகே உருவாகியிருக்கவும் இயலாது. அந்நிலை அம்மாநகரத்து நிலைத்தக் குடியினராய மண்ணுக்குரிய மக்களின் பல தலைமுறை இடைவிடா முயற்சியின் விளைவாகவே உருவாகியிருக்க வேண்டும். மேலும் அறிஞர் பெருமக்கள் பலரின் பிறப்பிடமாக வளர்ந்த ஒருபெருநகர் தனக்கென ஒரு பெயரை அது தோன்றிய காலத்திலேயே பெறத்தவறி விட்டு அங்கு வந்து குடியேறிய வடநாட்டுச் சமஸ்கிருத மொழியாளர் அவர்களின் மொழிப்பெயரால் பெயர் சூட்டும் வரை காத்திருந்தது என்பது நகரங்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய வரலாற்று நெறியினை உணராதார் கூற்றே ஆகும்" என்றியம்பும் இவர்[27] அப்பழங்காலத்தில் தமிழகம் பேரூர்களாலும் சிற்றூர்களாலும் நிறைந்திருந்த நிலை, அவற்றை இணைக்கும் பெருவழிகள், நடைபெற்ற போக்குவரத்துகள் போன்ற பலவற்றையும் எடுத்தியம்பி, தமிழகத்தின் அன்றைய குடியிருப்புகளின் மேன்மையையும் விளக்குகிறார். தவிர, புரம் என்ற பெயருடன்

---

26. தமிழர் வரலாறு, I, பக். 524-25.

27. தமிழர் வரலாறு, I, ப. 526.

பண்டைத் தமிழகத்தில் ஊர்கள் இல்லாமையை எடுத்துக் காட்டி, "இவ்வாறு வடஇந்திய ஊர்ப்பெயர்களைக் குறிப்பிடும்போதும் சமஸ்கிருத மொழியாளர்கள் அப்பெயர்களோடு இணைத்து வழங்கும் புரம் புத்திரம் என்பனவற்றை விடுத்தே எடுத்தாள்வதை மரபாகக் கொண்டு விட்ட பழந்தமிழ்ப் புலவர்கள் தமிழகத்துத் தலையாய நகர்களுள் ஒன்றாகிய காஞ்சிக்கு அவ்வடநாட்டுப் பெயர் ஈற்றுப் பகுதியாம் புரம் என்பதை இணைத்துக் காஞ்சீபுரமென வழங்கினர் என்பது வாதநெறியில் ஏற்றுக் கொள்ள இயலாத ஒன்று. ஆகவே அந்நகருக்குப் பழந்தமிழர் இட்டு வழங்கிய பெயர் காஞ்சி என்பதே. அம்மாநகரத்தில் வந்து வாழத் தொடங்கிய சமஸ்கிருத மொழியாளர்கள் தங்கள் வடநாட்டுப் பெயர் மரபையொட்டிப் புரம் என்பதைக் காஞ்சியோடு இணைத்துக் காஞ்சிபுரம் என மாற்றி அழைத்தனர் என்பதே இயல்பாகப் பெறக் கூடிய முடிவாகும்" என்கிறார்.[28] காஞ்சி என்ற பெயர் பழந்தமிழ்ப் பாக்களில் இடம்பெறவில்லை என்ற பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்தையும் மறுத்து, காஞ்சி இலக்கியங்களில் பயிற்சி பெற்று வந்துள்ளமையையும் தெளிவாக இயம்புகிறார்.[29] மேலும் கே.ஏ. நீலகண்டசாஸ்திரியாரின் கருத்துகளையும் தெ.வை. மகாலிங்கம் அவர்களின் கூற்றினையும் எடுத்துக்காட்டி, காஞ்சி என்பது பழந்தமிழர் அறிந்த தனித்தமிழ்ப் பெயரே; கச்சி அதன் தமிழாக்கம் அன்று. மாறாகக் காஞ்சியின் மற்றொரு பெயர் என்பதற்கான அகச் சான்றுகளே நிறைந்துள்ளன என்றும் எழுதுகிறார்.[30]

சங்க இலக்கியத்தில் காணக்கிடைப்பது, 'காஞ்சி' என்ற வடிவமே. இங்குப் 'புரம்' என்ற பொதுக் கூறு அதற்கு இல்லை. பின்னர் மணிமேகலையிலும் அது காஞ்சிநகர், காஞ்சிநாடு என்று வழங்கப்பட்டுள்ளதே தவிர, 'காஞ்சிபுரம்' என்று அது அங்குச் சுட்டப்படவில்லை. பதஞ்சலி 'காஞ்சிபுரக' என்று சொல்லியதற்குப் பின் பல்லவர் செப்பேடுகளே முதல் முதலில் 'காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடப்பட்டது' என்று குறிப்பிடும் தன்மையில் (மொழிபெயர்ப்பில்) காஞ்சிபுரம் என்ற வழக்குத் தெரிய வருகிறது. எனவே புலவர் கோவிந்தனின் கருத்தாக அமையும், பிற மொழிச் சார்பு காரணமாகத் தான் 'புரம்' இணைந்துள்ளது என்பது இங்கு மேலும் விளக்கம் பெறுகிறது.

---

28. தமிழர் வரலாறு, I, ப. 531.

29. தமிழர் வரலாறு, I, பக். 532-33. 30. தமிழர் வரலாறு, I, ப. 537.

புலவர் கோவிந்தன் சொல்லிச் செல்லும் இத்தகைய பல கருத்துகளுடன், மேலும் சில கருத்துகளும் காஞ்சி தமிழ்ச் சொல்லே என்பதை நிறுவுவதற்குத் துணையாகின்றன. முனைவர் பொற்கோ, "தமிழிலும் வடமொழியிலும் ஒரு சொல் ஆளப் பெற்றிருந்தால் உடனே அது வடமொழிச் சொல் என்றும் தமிழில் அது கடன் சொல்லாக ஆளப்பெற்றுள்ளது என்றும் கருதுவது ஒரு பொதுமரபாக இருந்து வந்திருக்கிறது... ஒருசொல் தமிழ்ச் சொல்லா வடசொல்லா என்று கண்டறியப்பின்வரும் நெறிமுறைகள் மிகவும் உதவும்" என்று கூறி நெறிமுறைகளையும் தருகின்றார்.[31] காஞ்சி என்ற சொல் சங்க இலக்கியத்தில் பயின்று

---

31. ஆராய்ச்சிக்கு உரிய அந்தச் சொல்லுக்குப் பொருள் விளக்கமும் வேர்ச்சொல்லும் தமிழில் முறையாக அமைந்திருந்தால் அது தமிழ்ச் சொல்லே.

ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல்லின் வேர்ச் சொல்லோடு பல்வேறு விகுதிகள் சேர்ந்து பல்வேறு சொற்கள் தமிழில் உருவாகியிருக்குமானால் அந்தச் சொல் தமிழ்ச் சொல்லே.

ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல்லின் அடிச் சொல்லோடு உருவாலும் பொருளாலும் ஒத்த இனச் சொற்கள் ஏனைய திராவிட மொழிகளில் இருக்குமானால் ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல் தமிழ்ச் சொல்லாகவேயிருக்கும்.

ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல்லுக்கு வடமொழி வாணர்கள் கூறும் வேரும் விளக்கமும் கற்பனைக் கதைகளாக இருக்கும் நிலையில் அந்தச் சொல் தமிழிலும் ஏனைய திராவிட மொழிகளிலும் ஆளப்பட்டிருக்குமானால் அது தமிழ்ச் சொல்லே என்றே தெளிய வேண்டும்.

ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல் தமிழிற் ஏனைய திராவிடமொழிகளிலும் மரபு வழிப்பட்ட பல்வேறு தொகைச் சொற்களில் பயின்று வருமானால் அது தமிழ்ச் சொல்லே.

ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல் பொதுவாக எந்தச் சமுதாயமும் பயன்படுத்தக் கூடிய அடிப்படைச் சொல்லாக இருந்து அச்சொல்லின் பொருளைக் குறிக்க வேறு சொல் எதுவும் தமிழில் இல்லையானால் ஆராய்ச்சிக்குரிய அந்தச் சொல் தமிழ்ச் சொல் என்றே தெளிய வேண்டும்.

வரும் மிகுதியான பயிற்சிகள், அது பல பொருட்களில் வழங்கப் பெற்ற நிலை போன்ற பலவும் இவர் கூறும் கருத்துகளோடு இணையும் தன்மை இதனைத் தமிழ்ச் சொல் என்று நிறுவப் போதிய சான்றுகளாம். மேலும் காஞ்சியை வடமொழிச் சொல் என்று சொல்லும் பி.டி.சீனிவாச ஐயங்கார் கச்சியைக் காஞ்சியின் தமிழாக்கம் என்று சொல்லும் அளவிலேயே[32] கச்சியை வடசொல் அன்று என்பதைச் சொல்லி விடுகிறார். எனவே காஞ்சி தமிழ்ச் சொல் என்பதுடன் இங்குக் கச்சியும் தமிழ்ச்சொல் என்பது உறுதிப்படுகிறது. இந்நிலையில் காஞ்சி வடமொழிச் சொல் இல்லை என்ற நிலையில் காஞ்சி மேகலை என்ற வடமொழிப் பொருண்மையுடையது என்ற எண்ணமும் பொருத்த மற்றதாகிவிடுகிறது. காஞ்சி என்ற சொல் அணியைக் குறித்துத் தமிழிலும் வழங்கப்படுகிறது. இதன் பயிற்சி சங்க இலக்கியத்திலேயே உண்டு. மேகலை வேறு காஞ்சி வேறு என்பதும் அங்குத்தெரிகிறது.

**மேகலை காஞ்சி வாகுவலயம்**
**எல்லாங் கவருமியல்பிற்றாய்** —பரி.7:47—49

எனவே காஞ்சி என்ற சொல் பிற பொருண்மைகளைப் போன்று அணியைக் குறிக்கவும் தமிழில் முதலில் வழங்கி, பின்னரே வடமொழியாளரிடம் சென்றிருக்கிறது என்பதையும் உணர முடிகிறது.

தமிழரின் வாழ்வில் தொன்றுதொட்டே தாவரங்களின் தொடர்பு மிகுதி. அவர்களின் ஆடை, அணிகலன்கள், உணவுகள் என அவர்களின் பண்பாட்டோடு தொடர்புடைய அனைத்திலும் தாவரங்களின் இடம் தெளிவாக விளங்குகிறது. அணிவகைகள் என்னும் போது முதலில் இயற்கைப் பொருட்களைத் தம்முடைய அணிகலன்களாகப் பயன்படுத்திய தமிழர் பின்னரே பல்வேறு உலோகங்கள், செயற்கைப் பொருட்கள் பயன்பாட்டில் சிந்தை செலுத்தினர். இருப்பினும் அவர்கள் அச்சொற்களை

---

இவையெல்லாம் ஒருபுறமிருக்க வடமொழியில் உள்ள ஒரு சொல்லுக்கு வேரும் விளக்கமும் சரியாக அமையாத நிலையில் அச்சொல் தமிழில் ஆளப்படாமல் மற்றத் திராவிட மொழிகளில் காணப்பட்டாலும் அதுவும் தொல் தமிழுக்கும் திராவிட மொழிகளுக்குமுரிய சொல்லே என்றும் தெரிய வேண்டும்- புலமை, ஜுன் 2001.

32. தமிழர் வரலாறு I, ப. 537.

மறக்கவில்லை. பிறபொருட்களில் செய்த பல அணிகளையும், இயற்கைப் பொருட்களின் பெயர்களாலேயே வழங்கினர். இன்று வரையிலும் தோடு, ஆரம், முறி, ஓலை போன்ற பல சொற்கள் தமிழரிடம் காணப்படுகின்றன. இத்தகைய சொற்களுள் ஒரு சொல்லாகவே காஞ்சியும் அமைகிறது. காஞ்சி மரத்தின் ஒவ்வொரு பகுதியையும் பயன்கொண்ட தமிழர் இதன் இலை, பூ போன்றவற்றை இடையிலும் அணிந்து அழகுபடுத்திக் கொண்டிருக்கலாம். காஞ்சி என்று பயின்ற அவ்வழக்கு, பின்னர் பிற உலோகப் பொருட்களில் செய்து அணிந்த அணியையும் குறித்து வழங்கத் தொடங்கியிருக்க வேண்டும் என்பது பொருத்தமாக அமைகிறது. இந்நிலையில் இக் காஞ்சியே வடநாட்டாரிடம் சென்றுள்ள நிலையில் அவர்களின் சொல்லாகப் பின்னர் கருதப்படத் தொடங்கியிருக்கிறது என்று கருதுதல் இயலுகிறது.

எனவே எந்தக் கோணத்தில் பார்த்தாலும் காஞ்சி வடமொழிச் சொல் அன்று; தமிழ்ச் சொல் என்பதே தெளிவுபடுகிறது; உறுதிப்படுகிறது.

2. ஆடை:

கச்சு, கச்சை போன்ற ஆடைத் தொடர்பான பொருண்மைகள் இந்த ஊர்ப்பெயர்க் காரணங்களாகச் சுட்டப்படுதலும் பொருத்தமானதாகத் தோன்றவில்லை. சொல்லில் காணப்படும் தொடர்பு என்ற ஒன்றை வைத்துக் கொண்டு பெயர்க் காரணம் காணமுற்படல் எல்லா ஊர்ப்பெயர்களுக்கும் பொருந்தாது. மகளிர் மார்பாடையாகவும், இடையாடை நெகிழாமல் இருப்பதற்காகவும், இந்தத் தாவரங்களைப் பயன் கொண்டிருக்கலாம். எனினும் ஆடை என்ற பொருளுக்கும் இந்த ஊர்களுக்கும் தொடர்பு இருப்பதாகச் சுட்டுவதற்குச் சரியான அடிப்படைவேண்டும்.

3. மதில்:

மதில் காரணமாகக் காஞ்சி என்ற பெயர் அமைந்தது என்பதும் தெளிவானதாக அமையவில்லை. காஞ்சிக்கு மதில் என்ற பொருள் இருப்பதாகச் சுட்டப்படுகிறது. சங்க இலக்கியங்களில் காஞ்சி பல்வேறு பொருண்மைகளில் பயன்படுத்தப்பட்டதாகத் தெரியவரினும் மதில் என்ற பொருண்மை அங்கு இல்லை. மேலும் ஓர் ஊர் மதிலோடு

உருவாக்கப்படுவது என்பது திட்டமிட்டு அமைக்கப்படும் ஊர்களுக்கே பொருந்தும். காஞ்சி திட்டமிடப்பட்டு உருவாக்கப்பட்ட ஊரன்று என்பது வரலாறு காட்டும் உண்மை. மேலும் காஞ்சியின் பண்டைய வரலாற்றில் மதில் பற்றிய எண்ணம் காணக்கூடவில்லை என்பதும் எண்ணுவதற்குரியது. பின்னர் உருவாகிய மதிலின் சிறப்புக் காரணமாக இப்பெயர் பெற்றது என்பதும் ஏற்புடைய கருத்தாகாது. தமிழ்நாட்டு வரலாறு-பல்லவர்- பாண்டியர் காலம்- முதல் பகுதி நூலும், "காஞ்சிபுரம் கோட்டையுடைய நகரம் என்று இலக்கியங்கள் குறித்தாலும் கோட்டையின் பகுதிகளை, இன்று வரை நடத்திய, அகழாய்வில் காண இயலவில்லை" என்று கூறுகிறது.[33] எனவே மதில் காரணம் என்பதும் ஏற்புடையதாக அமையவில்லை.

4. பிரம்மன் பூசித்த தலம்:

பிரமன் பூசித்த தலம் என்பது புராணச் சார்புடையது. கச்சி, காஞ்சி கால ஊர்ப்பெயரிடும் முறையோடு இது பொருந்தவில்லை.

5. நிலையாமை:

நிலையாமை என்ற காஞ்சிக்குரிய இன்னொரு பொருளைக் காரணம் காட்டுதலும் இயல்பானதாக இல்லை. இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மக்களையே அக்கால கட்டத்தில் காண்கிறோம். எனவே தத்துவம் சார்ந்த பொருளைத் தம் ஊர்ப்பெயர்களுக்கு இட்டு வழங்கினர் அன்றைய மக்கள் என்பதும் முரணான கருத்தாகவே அமைகிறது; ஊர்ப்பெயரிடும் அன்றைய மரபுக்கும் இது பொருந்தாது அமைகிறது.

## 4. பொருந்தும் காரணம்

இந்நிலையில் இவ்வனைத்துக் காரணங்களையும் ஆராயும்போது இயற்கைச் சார்புதான் இவ்விரண்டு பெயர்கட்கும் காரணமாக இருத்தல் கூடும் என்று முடிவு செய்வதற்கே அன்றைய சூழல்கள் அரணாகின்றன. இயற்கைச் சார்பிலும் கச்சிக்கு, மயில் காரணமாக இருக்கலாமோ என்ற ஐயம் இருப்பினும், காஞ்சி தாவரம் சார்புடையது என்பது உறுதியானது.

---

33. தமிழ்நாட்டு வரலாறு, பல்லவர் பாண்டியர் காலம் - முதல் பகுதி, ப. 2.

கச்சி, காஞ்சி இரண்டு ஊர்களின் தோற்றக் காலம் பழமையும், தொன்மையும் பொருந்தியது. இவற்றை நமக்கு அறிமுகப்படுத்தும் இலக்கியங்களும் பழமைவாய்ந்தன. இவ்விலக்கியங்கள் பழந்தமிழரின் வாழ்வியலைப்பெரும்பாலும் கற்பனையின்றித் தருகின்றன. எனவே இவை தரும் கச்சி, காஞ்சி இரண்டின் பழமையும் பெருமையும் கூட உண்மையானவைகள் என்பதைப் புரிந்து கொள்ளல் இயலுகிறது.

சங்க காலத்தில் தமிழர் தாங்கள் வசித்து வந்த ஊர்களுக்குப் பல பெயர்களையுமிட்டு அழைத்துவந்தனர். பொதுவாக, தமிழரின் ஊர்ப்பெயர் வரலாற்றை நோக்கும் போது அவர்களிடம் காலந்தோறும் ஊர்ப்பெயரிடுவதில் சில முறைகள் இருந்ததை யுணரமுடிகிறது. ஊர்ப்பெயரிடுதல் வரலாற்றில் தமிழரின் வாழ்வின் தொடக்கத்தில் இயற்கையின் ஆதிக்கம் மிகுந்து காணப்பட்டது. பின்னர் செயற்கை தொடர்புறுகிறது. இடைக் காலத்தில் பக்தி மேம்படுகிறது. தொடர்ந்து அரசர்களின் பெயர்கள், பின்னர் ஆட்பெயர்கள் ஆட்சி செய்யத் தொடங்குகின்றன. தமிழரின் ஊர்ப்பெயரிடும் மரபு இவ்வாறு காலந்தோறும் அமைய, இயற்கையின் அரவணைப்பில் முழுவதுமாக இருந்த காலகட்டமாக, கச்சி, காஞ்சியின் வரலாற்றுத் தொடக்கத்தைக் காண்கிறோம். எனவே இப்பெயர்களை இயற்கையோடு குறிப்பாகத் தாவரத்தோடு பொருத்திக் காணலே இயல்பாகப் பொருந்துகிறது.

இவ்விரண்டு பெயர்களுக்கும் இயற்கை/தாவரம் காரணம் எனில் அவை யாவை என்பது அடுத்த வினா. ஏற்கெனவே அறிஞர் பெருமக்கள் சுட்டியபடி, காஞ்சி மரங்களே காஞ்சிக்குக் காரணம் என்பது மிகத் தெளிவு. காஞ்சி மரங்கள் நிறைந்த சோலையினை உருத்திரங் கண்ணனார் வருணிக்கின்றார்.

**வெயினுழை பறியாக் குயினுழை பொதும்பர்க்**
**குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங் கொடிப்**
**பாசிலைக் குருகின் புன்புறவரிப்பூக்**

**–பெரும். 374–376.**

இவரது இந்த வருணனை எளிதில் புறக்கணிக்கக் கூடியது அன்று. எனவே காஞ்சிக்குரிய காரணம் இப்பகுதியில் நிறைந்திருந்த காஞ்சி மரங்கள் தாம் என்பதை நாம் உறுதியாக முடிவு செய்யலாம். மேலும்

1. அக்காலத்தில் இயற்கைச் சார்புடன் பெயர்கள் சூட்டியத் தன்மை,
2. காஞ்சிமரம் தமிழகம் எங்கும் நிறைந்து காணப்பட்ட தன்மை,
3. அதன் பல பாகங்களையும் தமிழர் பயன் கொண்ட தன்மை,
4. காஞ்சி என்ற பெயர் கொண்ட ஊர்கள் இன்று வரையிலும் தமிழகத்தின் பல இடங்களிலும் காணப்படும் தன்மை

போன்ற பலகாரணங்களும் இக்கருத்திற்கு வலு அளிக்கின்றன.

கச்சி என்பதற்குச் சீந்தில் என்ற தாவரம் காரணம் என்பதைச் சுட்டினாலும்[34] காஞ்சி போன்ற செல்வாக்கைக் கச்சி என்ற பெயர் மக்கள் மத்தியில் பெற்றதாகத் தெரியவில்லை. எனினும் கச்சியின் பழமையும் அக்காலத்திய பெயரிடும் மரபும், கச்சு, கச்சை என்று ஆடையைக் குறித்துத் தமிழர் பயன்படுத்திய பிற சொற்களும் கச்சிக்கும் தாவரம் காரணமாக இருக்கலாம் என்பதை எண்ணச் செய்கின்றன.

இந்நிலையில் கட்சி என்ற பொருளில் கச்சியாயிற்று என்ற எண்ணம் மேலும் ஆய்விற்குரியது. மயில் வசிக்கும் பகுதி, காடு என்பன இயற்கைச் சார்புப் பெயர்களே. சோலைகள் சூழ்ந்த பகுதிகளில் மயில்கள் வசிப்பது இயல்பு. மயில் சார்ந்த ஊர்கள் தமிழகத்தில் காணப்படுகின்றமையும் உண்மை. இந்த ஊர்கள் அனைத்தும் மயில் சுட்டியே அழைக்கப்பட்டு வருகின்றன. இந்நிலையில் கச்சி என்ற பெயருக்கு மயில் காரணம் என்பது மீள் ஆய்விற்குரிய ஒன்று என்றே கருதுதல் இயலுகிறது.

**5. காஞ்சி, கச்சி ஒன்றா? வேறா?**

இவ்வாறு காஞ்சியின் பெயர்க் காரணத்தை அறிய முற்படும் ஆய்வில் காஞ்சி, கச்சி இரண்டு பெயர்களும் நம்முன் தென்படுகின்றன. இத்தகைய இருபெயர்களைக் காஞ்சி பெறக் காரணம் என்ன? இவற்றைப்பற்றி அறிஞர்கள் என்ன கருதுகின்றனர்? இவ்வாய்வு தரும் விளக்கம் என்ன? என்ற கோணத்தில் இப்பெயர்களை அணுகும்போது சில தெளிவுகள் கிடைக்கின்றன.

---

34. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-1, ப. 94.

"செங்கற்பட்டு மாவட்டத்தின் பழைய நகரம் கச்சி. கச்சி என்ற நகரமும் காஞ்சி என்ற நகரமும் ஒன்று என்றும் இரண்டும் வெவ்வேறான தனித் தனி நகரங்கள் என்றும் இருவேறு வகையான கருத்து உள்ளது".[35]

"சங்ககாலத்தில் கச்சி என வழங்கப் பெற்று, காலப்போக்கில் காஞ்சி என்ற பெயர் நிலைத்ததோ என்று எண்ணவும் இடமளிக்கிறது".[36]

"நாம் இன்று வழங்கிவரும் காஞ்சி நகரத்தின் பெயரை நம் முன்னோர் 'கச்சி' என்றும் அழைத்தனர் எனக் கருதுதல் வேண்டும்".[37]

"கச்சி என்று அழைக்கப்பட்ட காஞ்சி தொண்டை நாட்டின் தலைநகரமாகவும் பின்னர் பல்லவர்களின் தலைநகரமாகவும் இருந்தது".[38]

"வேங்கடத்தை அடுத்த காஞ்சி மண்டலம் தமிழ் வழங்கிய மண். தன் மொழிப்பெயராம் காஞ்சி கச்சி மாநகர்களை இருபெரும் தலைநகர்களாகக் கொண்டிருந்த பழம் பெருமை வாய்ந்தது".[39]

இச்சான்றோர் கருத்துகள் கச்சி என்று முதலில் வழங்கப்பெற்ற ஊர், பின்னர் காஞ்சியாயிற்று என்ற கருத்தையும், இரண்டும் ஒன்று என்ற கருத்தையும், இரண்டும் இரண்டு நகரங்கள் என்ற கருத்தையும் தருகின்றன. தவிர, காஞ்சியின் தமிழாக்கம்/மரூஉ கச்சி என்ற கருத்து அறிஞர்களிடம் காணப்படுவதும் இங்குக் கருதத்தக்கது.

" 'கச்சி' என்பது காஞ்சிபுரத்தின் மரூஉ ஆகும். காஞ்சி என்பது கஞ்சி என வடமொழியில் திரிந்து வழங்கிப்பின்னர் கஞ்சி என்பது கச்சி எனத்திரிந்தது என்பர்".[40]

---

35. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-1, ப. 94
36. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-1, ப. 97.
37. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 39.
38. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 36.
39. தமிழர் வரலாறு, I, ப. 234.
40. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில் ஓர் ஆய்வு, ப. 22.

வடமொழியில் காஞ்சி தென்மொழியில் கச்சியாயிற்று".[41]

இவ்வாறு கச்சி குறித்தும் காஞ்சி குறித்தும் காணப்படும் சிந்தனைகள் பல.[42] இவற்றுள் இந்தப்பெயராய்வு தரும் எண்ணங்கள் இந்த அறிஞர்களின் கருத்துகளுக்குத் தரும் விளக்கம் என்ன என்பதை இங்குக் காணலாம்.

பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர் கச்சியை விளக்கமாக நம்முன் காட்சிப்படுத்துகிறார். அங்குக் கச்சி குறித்த பலசெய்திகளை நாம் அறியமுடிகிறது. கச்சியை மூதூர் எனச் சுட்டுகிறார். கச்சி என்ற மூதூரின் அமைப்பைக் காட்டுகிறார். கச்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டதால் கச்சியோன் எனத் திரையனை அறிமுகம் செய்கிறார்.

காழோர் இகழ்பத நோக்கிக் கீழ
நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளம்
கடுஞ்சூன் மந்தி கவருங் காவிற்
களிறு கதனடக்கிய வெளிறில் கந்திற்
றிண்டேர் குழித்த குண்டு நெடுந்தெருவிற்
படை தொலைபறியா மைந்து மலிபெரும்புகழ்க்
கடைகால்யாத்த பல்குடி கெழீஇக்
கொடையுங்கோளும் வழங்குநர்த் தடுத்த
அடையாவாயின் மிளைசூழ் படப்பை
நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்
இழுமென் புள்ளின் ஈண்டு கிளைத் தொழுதிக்

---

41. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி 2, ப. 67.

42. பாண்டியர் தலை நகர்க்கு மதுரை, கூடல் என்ற இருபெயர்கள் இருக்கவும் பாண்டியர் புகழ்பாடும் புலவர் பலரும் கூடலுக்கு முதல் இடம் தந்து குறிப்பிடுவது போல் வேங்கடம் அடுத்த தொண்டை நாட்டுத் தலைநகர்க்குக் காஞ்சி, கச்சி என்ற இரண்டு பெயர்கள் இருக்கவும் அக்காஞ்சி நாடுபாடிய புலவர் பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர் காஞ்சியைக் குறிப்பிடாமல் கச்சியை மட்டும் குறிப்பிட்டுள்ளார் எனக் கொண்டால் அவ்வாறு தான் கொள்ள வேண்டும்- தமிழர் வரலாறு, I, ப. 535.

கொழுமென் சினையக் கோளியுள்ளும்
பழமீக் கூறும் பலாஅப்போலப்
புலவுக் கடலுடுத்த வானஞ் சூடிய
மலர்தலை யுலகத்துள்ளும் பலர் தொழ
விழவு மேம்பட்ட பழவிறன் மூதூர் –பெரும். 393–411

அடங்காத் தானையொடு உடன்று மேல்வந்த
வொன்னாத் தெவ்வர் உலைவிடத்தார்த்துக்
கச்சியோனே கைவண் தோன்றல் –பெரும். 418–420

கச்சியை இவ்வாறு விளக்கமாகத் தரும் புலவர் எந்த விடத்தும் கச்சியின் இன்னொரு பெயராகக் காஞ்சியைக் குறிப்பிடவில்லை. எனவே ஏன் என்ற கேள்வி எழுகிறது. அன்று கச்சியின் இன்னொரு பெயராகக் காஞ்சி இருந்ததா இல்லையா என்ற கேள்வி எழுகிறது. இந்நிலையில் 'காஞ்சி' என்ற பெயர் பற்றிய ஆய்வில் ஈடுபடும் போது 'காஞ்சி' பற்றியும் சங்க இலக்கியத்தில் செய்தி கிடைக்கிறது. எந்த ஊர் ? எங்கு இருந்தது என்பதைக் காணமுயலும் போது, கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனாரின் அறிமுகம் கிடைக்கிறது. கச்சிப்பேடு பற்றிச் சிந்திக்கும் போது, "கச்சிப்பேடு என்பது கச்சியின் புறப்பகுதி: கச்சி வேறு கச்சிப்பேடு வேறு" என்ற மா.இராசமாணிக்கனாரின் கருத்துத் தெரிய வருகிறது.[43]

இந்நிலையில் கச்சி, கச்சிப்பேடு, கச்சிப்பேட்டுக் காஞ்சி என்ற மூன்று பெயர்களையும் அணுகும்போது கச்சி என்பது ஓர் ஊர், இதன் புறப்பகுதி கச்சிப்பேடு, கச்சிப்பேட்டின் அருகில் இருந்த ஊர் காஞ்சி என இவற்றிக்குப் பொருள் விளக்கம்

---

43. திருவெஃகாக் கோயில் உள்ள இடம் முதற்பராந்தகன் காலத்தில் (கி.பி. 907-953) கச்சிப் பேடு என வழங்கப்பட்டது. கச்சிப்பேடு என்பது கச்சி நகரத்திற்குப் புறநகர் என்று பொருள்படும். இக்கச்சிப்பேடு பெரும் பாணாற்றுப் படைப் பாடப்பட்ட சங்க காலத்திலும் இருந்தது என்பதைக் கச்சிப் பேட்டு நன்னாகையார், கச்சிப்பேட்டு இளந்தச்சனார், கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார் என்னும் வழக்காறு கொண்டு நன்கு அறியலாம். இவற்றைக் கொண்டு கச்சிவேறு கச்சிப்பேடு வேறு என்பது அறியத் தகும்.

பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 140-141.

கிடைக்கின்றது; இச்செய்திகளின் மூலம் கச்சி, காஞ்சி இல்லை என்பதும் தெளிவுபடுகிறது. கச்சி என்ற ஊரும் இருந்தது; காஞ்சி என்ற ஊரும் இருந்தது. ஆயின் இரண்டும் ஒரே ஊரன்று. ஒரே ஊரைக் குறித்துக் கச்சி, காஞ்சி என்ற பெயர்கள் வழங்கப்படவில்லை. இரண்டும் அருகருகே இருந்த இரண்டு ஊர்கள் என்பது இங்குத் தெளிவுபடுகிறது.

மேலும் சங்க இலக்கியம் தரும் இவற்றின் வருணனைகள், குறிப்புகளின் வழி, கச்சியில் மன்னனும், கச்சியின் புறப்பகுதியிலும், காஞ்சியிலும் மக்களும் இருந்திருக்கின்றனர் என்பது தெரிகிறது. கச்சியில் மக்கள் வாழ்ந்துவந்தமை தெளிவாகாத நிலை அமைய, கச்சிப்பேட்டு நன்னாகையார், கச்சிப்பேட்டு இளந்தச்சனார், கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார், கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார் போன்ற புலவர்கள் பெயர்களினின்றும் கச்சிப்பேட்டில் மக்கள் வாழ்ந்தமைத் தெரிய வருகின்றது.

தவிர, காஞ்சி என்ற பெயர் சார்ந்த பிற புலவரும் ஊர்களும் காஞ்சிப்புலவனார், மதுரைக் காஞ்சிப் புலவர், காஞ்சியூர் போன்றனவற்றில் தெரியவருகின்றனர். இங்குச் சுட்டப்படும் 'காஞ்சி' பிற ஊர்களைக் குறிப்பன என வாதாடினாலும், கச்சிப் பேட்டுக் காஞ்சிக் கொற்றனாரில் உள்ள காஞ்சி, கச்சியை அடுத்து இருந்த ஊர் என்பதில் ஐயமில்லை. பல ஊர்கள் ஒரே பெயரில் வழங்கும்போது சிறந்த/தெரிந்த ஊரைச் சேர்த்துக் குறிப்பிடுதல் இன்றும் வழக்கில் காணப்படுகிறது. அன்றும் ஊர்ப்பெயர் சுட்டுவதற்கென இருந்ததோர் வழக்காக இதனைக் காண்கிறோம் (பிற சான்றுகள்: மதுரை ஈழம், இலங்கை ஈழம்).

பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர் கச்சியை வருணிக்கும்போது அங்கு இருந்த மன்னன் அரண்மனை, அங்குப் படைகள் காணப்பட்டமை, வாணிபம் சிறப்புற நடைபெற்ற பாங்கு, மக்கள் கூட்டம், தேரோடும் தெருக்கள், காவற்காடு போன்றவற்றைக் காட்டுகின்றாரே தவிர மக்கள் வாழ்ந்ததாகத் தெரிவிக்கவில்லை. ஆயின் புலவர்கள் வாழ்ந்த இடமாகக் கச்சிப்பேடும் காஞ்சியும் சுட்டப்படுகின்றன. எனவே மன்னன் தலைநகராகிய கச்சியில் வாழ, அருகாமையில் மக்கள் வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதும் காஞ்சியும் அதில் ஒன்று என்பதும்

புலப்படுகின்றன. கச்சிப்பேடு சார்த்தியும் கச்சிப் பேட்டுக் காஞ்சி சார்த்தியும் புலவர்கள் குறிப்பிடப்படும் நிலை இப்பகுதிகளில் கல்வி மேன்மையுற்றிருந்த தன்மையையும் தெளிவாக்குகிறது. எனவே தான் பதஞ்சலி தன் உரையில் கச்சியைச் சுட்டாது காஞ்சியைச் சுட்டுகின்றார். வடமொழிப்புலவன் காஞ்சியை நகரேக்ஷுகாஞ்சி என உரைக்கின்றான். எனவே இவையெல்லாம் கச்சி, காஞ்சி இரண்டும் தனித்தனி ஊர்கள். அடுத்தடுத்து இருந்த ஊர்கள் என்பதையே தெளிவாகக் காட்டுகின்றன.

இந்நிலையில் மாற்றத்தை மணிமேகலையில் காண்கின்றோம். மணிமேகலையில் கச்சியையும், காஞ்சியையும் எந்த வித வேறுபாடும் இன்றி, காஞ்சியைக் குறிப்பிட சாத்தனார் பயன்படுத்துகிறார். எனவே சங்க இலக்கியங்களையும், சாத்தனார் தரும் செய்திகளையும் மேலும் ஆராயும் போது அவை சில முடிவுகளை நாம் பெறத் துணையாகின்றன.

சங்க காலத்தில் தனித்தனியே காணப்பட்ட இந்த இரு ஊர்களும் அன்றே சிறப்புடன் திகழ்ந்த ஊர்கள். பின்னர் இரண்டும் ஒரே ஊராக இணைந்திருக்கின்றன. இந்த இணைவு எப்போது நிகழ்ந்தது என்பது தெளிவுறவில்லை. எனினும் மணிமேகலை காலத்திற்கு முன் என்பது தெரிகிறது. பல்லவர்கள் காஞ்சியில் இருந்து செப்பேடுகள் வெளியிட்ட செய்தியை முதற்பல்லவர் காலச் செப்பேடுகள் மூலம் அறிகிறோம். இந்தச் செய்திகள் மூலம் மேலும் சில எண்ணங்கள் நமக்குக் கிடைக்கின்றன.

கச்சி திரையன் தலைநகராக இருந்தது. காஞ்சி, கல்வி வளம் பெற்றத்தலமாக இருந்திருக்கிறது. ஆனால் வடநாட்டார் காஞ்சியையே குறிக்கின்றனர். கச்சி பற்றிய சிந்தனைகள் அவர்களிடம் இருந்ததாகத் தெரியவில்லை.

எனவே கச்சி தமிழகத்தில் சிறந்த மூதூராகவும், வாணிபத் தலமாகவும், மன்னன் தலைநகராகவும் திகழ்ந்திருப்பினும், கல்வியின் மிகு சிறப்பு காரணமாக வடநாட்டாரிடம் நன்கு அறிமுகமான ஊராகக் காஞ்சித் திகழ்ந்திருக்கிறது என்பதையும் பின்னர் பல்லவர்கள் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டதையும், செப்பேடுகளையும் இங்கு இருந்தே வெளியிட்டதையும் இணைத்து நோக்கலாம். பல்லவர்கள் யாரிடம் இருந்து காஞ்சியைப் பெற்றார்கள் என்பது தெரியவில்லை. பல்லவர்கள்

வருகையின்போது திரையன் ஆட்சி இருந்ததா அல்லது வேறுயாரின் தலைநகராகவாவது கச்சி இருந்ததா என்று நோக்கும்போதும் வரலாறு புலப்படவில்லை. எனவே கச்சி திரையனின் காலத்திற்குப் பின்னரும் தலைநகராக இருந்தது என்பதை உறுதியாகக் கூற இயலாத நிலையில், வடநாட்டில் இருந்து வந்த பல்லவர் காஞ்சியின் சிறப்புத் தெரிந்த நிலையில் அதனையே தம் தலைநகராகக் கொள்ளத் தொடங்கியிருக்கலாம். பல்லவரின் பிராகிருத மொழிச் செப்பேடுகளும் வடமொழிச் செப்பேடுகளும் கச்சி பற்றிய எந்த விதச் செய்தியையும் தரவில்லை. மேலும் பல்லவ மன்னர்களின் வரலாறு சொல்லிச் சொல்லும் வேலூர்ப்பாளையச் செப்பேடுகள் குமாரவிஷ்ணு காஞ்சியை வென்றமையைப் பற்றிக் கூறுமுன்பாக "ஸ்கந்த சிஷ்யன் தோன்றினான்; அவன் சத்தியசேனன் என்ற அரசனிடமிருந்து பிராம்மணர்களுக்கான கடிகையைக் கைப்பற்றினான்" (சுலோகம்:7) என்றும், சுலோகம் 3 "அவன் மகனுடைய மகனான (இரண்டாம்) நரசிம்மவர்மன் மகேந்திரனைப் போன்றவன். பிராம்மணர்களுடைய கடிகையை மறுபடியும் அமைத்தான்" என்றும் சுட்டிச் செல்கிறது.[44] எனவே காஞ்சியின் வரலாற்றில் 'கடிகை' (ஊர்ச்சபை, தமிழ்ப் பேரகராதி, ப. 668) )மிகவும் முக்கியத்துவம் பெற்றுத் திகழ்ந்திருக்கிறது தெரிகிறது. இந்நிலையில் 'பிராம்மணர்களுக்கான கடிகை' என்ற கூற்றும் (இவர்களுடைய செல்வாக்கு காஞ்சி அரசியலில் மேலோங்கி இருந்திருக்கலாம்) பல்லவர் இதனைக் கைப்பற்றியதும், புதிதாக அமைத்ததும் எண்ணத் தக்க செய்திகள். இந்நிலையிலேயே கடிகையைக் கைப்பற்றியதும், காஞ்சியில் அரசுபுரியத் தொடங்கியதும் ஒன்றுடன் ஒன்று நெருக்கமான தொடர்பு கொண்டவையாக, இங்குச் சிந்திக்கத் தக்க செய்திகளாக அமைகின்றன. எனவே கச்சி தலைநகராக, பல்லவர் வரும் போது இருந்திருக்கலாம், இல்லாதும் இருந்திருக்கலாம். ஆயின் பல்லவர் கடிகை இருந்த காஞ்சியிலேயே முடிசூடிக் கொண்டு ஆளத் தொடங்கியிருக்கின்றனர். எனவேதான் இவர்கள் இங்கு இருந்து செப்பேடும் வெளியிட்டுள்ளனர். இந்நிலையிலேயே காஞ்சி தலைநகராகச் சிறப்புறத் தொடங்கி, பின்னர் இதன் விரிவாக்கத்தில் கச்சியும் இதனுடன் இணைந்து மணிமேகலை காலத்தில் இரண்டும் ஒரே நகராகத் திகழத் தொடங்கியிருக்கிறது என்பது இங்கு வெளிப்படும் செய்தி.

---

44. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 259.

பொதுவாக, வாணிகத்தின் வளர்ச்சி, கல்வியின் வளர்ச்சி, மதங்களின் வளர்ச்சி, அரசியல் மாற்றம் காரணமாக, நகர்கள்/ ஊர்கள் அடையும் மாற்றங்கள் ஊர் வரலாற்றில் இயல்பாகக் காணக்கூடிய ஒன்று.

கச்சியும் காஞ்சியும் இத்தகைய பல வளர்ச்சிகளைக் கொண்டன. கண்டன. வணிகம் ஓங்கியிருந்த தன்மையைக் கச்சியில் உருத்திரங்கண்ணனார் காட்டுவார். காஞ்சியில் கல்வியின் மேம்பாட்டைப் புலவர்கள் இயம்புகின்றனர். பௌத்த மதத்துடன் பிற பல சமயங்களும் எழுச்சி பெற்றிருந்தமையை மணிமேகலை முதற்கொண்டு வரலாறுகள் தெளிவுபடுத்துகின்றன. பல ஆட்சியாளர், மாறி மாறி ஆட்சி புரிந்த பகுதிகள் இவை. எனவே இந்த மாற்றங்களும், வளர்ச்சிகளும் கச்சியிலும் காஞ்சியிலும் ஏற்பட்டநிலை காரணமாக இரண்டும் ஒன்றுடன் ஒன்று இணைந்தன; விரிவடைந்தன. எனவே தான் கச்சி, காஞ்சி இரண்டு பெயர்களாலும் இந்நகர் அழைக்கப்படத் தொடங்கிற்று என்பன இங்குப் புலப்படும் எண்ணங்கள்.

இந்நிலையில் இந்த ஆய்வு தந்த முடிவுகளாகச் சிலவற்றைக் கருதலாம்; சிலவற்றை மீளாய்வுக்குரியதாக்கலாம்.

1. கச்சி, காஞ்சி இரண்டும் தமிழ்ப்பெயர்கள்.

2. கச்சி, காஞ்சி இரண்டு பெயர்களும் இயற்கை காரணமாக இடப்பட்ட ஊர்ப் பெயர்கள்.

3. ஊரின் புறப்பகுதி பேடு என்று அழைக்கப்படும் வழக்கு அன்று இருந்தது. இதனையொட்டிக் கச்சியின் புறப்பகுதி, கச்சிப்பேடு என்று அழைக்கப்பட்டது.

4. பல ஊரைக் குறிக்க ஒரே பெயர் வழக்கில் இருக்கும் போது, குறிப்பிட்டதொரு ஊரைத் தனித்துக் குறிப்பிட, ஊருக்கு அருகாமையூரை இணைத்துச் சுட்டல் அன்றும் இருந்திருக்கிறது என்பது கச்சிப் பேட்டுக் காஞ்சி என்ற சொற்பயிற்சி காட்டும் உண்மை.

5. கச்சி ஒரு மூதூர்; காஞ்சி அருகிலிருந்த ஊர். கச்சி திரையனின் தலைநகர்; காஞ்சி மக்கள் வாழ்ந்த ஊர். கச்சி

வணிகத்தாலும் சிறப்புடன் திகழ்ந்தது; காஞ்சி புலமை வளர்ச்சியால் சிறப்புடன் திகழ்ந்தது. மூதூராகவும் தலைநகராகவும் முதலில் திகழ்ந்தது கச்சி. கல்விச் சிறப்பால் மேன்மையுற்றிருந்த ஊர் காஞ்சி. அரசியலும் அருகாமையும் சிறப்பும் இரண்டையும் ஒரே ஊராக இணைத்தன.

6. ஒரே ஊராக இணைந்த நிலையில் கச்சி, காஞ்சி என்ற இரண்டு பெயர்களாலும், சார்ந்த வடிவங்களாலும் வழங்கி வரத் தொடங்கியுள்ளது இவ்வூர்.

7. ஊர்களின் வளர்ச்சியில் அருகாமையில் இருக்கும், அடுத்திருக்கும் ஊர்களை இணைத்துக் கொள்ளல் என்னும் ஊரமைப்பு வரலாறு இதன் மூலம் தெளிவு பெறுகிறது.

## இயல் - 2

# அமைப்பு

குடியிருப்புகள் காலந்தோறும் அமைப்பில் மாற்றம் பெறுதல் என்பது அவற்றின் பொது இயல்பு. சிற்றூர் மூதூராக மாறும் போது இம்மாற்றங்கள் நிகழும்; திட்டமிடப்பட்டு ஊர்கள், நகரங்கள் அமைக்கப்பட்டாலும் மாற்றங்கள் நிகழும். இவற்றிற்குரிய காரணங்கள் பல. பண்டு தொட்டு இன்று வரையிலும் உள்ள பல குடியிருப்புகளின் வரலாறுகளின் வழி இதனை அறியலாம். காஞ்சியின் வரலாறும் இத்தகையதே.

காலந்தோறும் காஞ்சியின் வளர்ச்சி காரணமாக அந்நகர அமைப்பில் ஏற்பட்ட மாற்றங்கள் பல. இவை முறையாக வரலாற்றுப் பதிவு பெறவில்லை. எனினும் வரலாற்று மூலங்களில் அவ்வப்போது வெளிப்படும் காஞ்சி பற்றிய குறிப்புகள், வருணனைகள் காஞ்சி இவ்வாறெல்லாம் இருந்திருக்கிறது என்ற எண்ணத்தை ஓரளவுக்குத் தருகின்றன. இதன் ஊடே ஆய்வு மூலங்கள் தரும், குறிப்பாக இலக்கியங்கள் காட்டும் இக்காட்சிகள் அனைத்தும் உண்மையா என்ற கேள்வியும் எழுகிறது. ஆயின் காஞ்சியின் தொடர்ந்த, சிறந்த வரலாறு, காஞ்சியின் அமைப்பு, அதன் அமைப்பு மாற்றங்கள் குறித்துக் கிடைக்கும் செய்திகளின் நம்பகத் தன்மையை மிகுவிக்கின்றது. காஞ்சியின் பெயராய்வு தந்த முடிவுகளுக்கு ஏற்ப, காஞ்சி திட்டம் போட்டு உருவாக்கப்பெற்ற ஊரல்ல என்பதும் அருகருகேயிருந்த கச்சி, காஞ்சி என்ற இரண்டு ஊர்களும் இணைந்து நகராகிக் காலந்தோறும் அமைப்பிலும் மாற்றம் பெற்று வந்துள்ளது என்பதும் இந்த ஆய்விலும் விளக்கம் பெறுகின்றன.

முன்னுரையில் குறிப்பிட்டவாறு காஞ்சியின் அமைப்புக் குறித்து ஆராயும் போதும் கால நோக்கின் முக்கியத்துவம் தெளிவுபடுகிறது. ஏனெனில் காஞ்சியின் அமைப்புக் குறித்துக்

கிடைக்கும் செய்திகள் அனைத்தும் ஒரே காலத்தன அல்ல. காலந்தோறும் வரலாற்று மூலங்களில் பதிவாகியுள்ள செய்திகள் அந்தந்த காலத்தனவாகவும் அமையலாம்; முற்பட்ட காலத்தனவாகவும் அமையலாம். எனவே அனைத்துச் செய்திகளையும் தொகுத்து நோக்கி, அந்தந்தக் காலஞ் சார்ந்த பிற வரலாற்றுச் செய்திகளுடன் இணைத்து நோக்கி, ஆராய்ந்து தெளிவாக்கிக் கொண்டபின்னரே அச்செய்திகளை வரலாற்றுக்குத் துணையாகக் கொள்ள முடியும்.

இத்தகைய முறையில் சங்க இலக்கியங்களையும் இன்றைய காஞ்சியையும் நோக்கி, சங்க காலம் காட்டும் கச்சி மூதூர் எங்கு இருந்தது என்பதை அடையாளம் காட்டுகின்றார் டாக்டர் மா.இராசமாணிக்கனார்.[1] மிகச் சிறந்த ஆய்வு அணுகுமுறையாக இது அமைகிறது. இவரின் இந்தக் கருத்தினைக் கருதுகோளாகக் கொண்டு, வழி நடக்கும் போது பல புதிய சிந்தனைகளைப் பெறமுடிகிறது. இருப்பிடத்தை இவர் இவ்வாறு அடையாளம் காட்டுவது போன்று கச்சி மூதூரின் அமைப்பையும் இவ்வாறே அடையாளம் காண முயலலாம். இவ்வாறன்றிக் கிடைக்கும் செய்திகளையெல்லாம் காலம் கருதாது கொண்டால் காஞ்சியின் அன்றைய அமைப்புக் குறித்த தெளிவையோ, கச்சி பெற்ற மாற்றங்களையோ தெரிந்து கொள்ளல் என்பது இயலாது.[2]

---

1. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 145
2. The great city of Conjeeveram was planned on lines similar to those of Madurai and Vañji. Here also there was a deep moat round the city walls and the drainage (Periya-Tiru-v.25) of the city emptied itself it into this moat. In the outer city were wide open spaces set apart for training elephants and horses for the army (periya-Tiru-v.100). There were also on the outskirts of the city special quarters for the elephant trainers where they made ornaments for the tusks of elephant cords to hold elephants to the peg..... Several people who were engaged in making the bow and the mail armour had seperate quarters for them in this part of the city (Kanchi-Nk. V.22)... The car streets were wide and stately for the chariots to pass easily (Perum 397). The lotus and other flowering plants were reared in the tanks (Kanda-30). Red bricks were used in the building of the houses (Perum-405) - Town planning in Ancient Dekkan, pp.70-79.

இன்று தமிழ் இலக்கியங்களின் காலம் ஓரளவுக்குக் கணிக்கப்பட்டுள்ளது. இந்தக் காலவரிசையைக் கொண்டும் கிடைக்கும் பிற வரலாற்றுச் சான்றுகள் கொண்டும் காஞ்சியின் அமைப்பை, முழுவதுமாகத் துல்லியமாகக் காண இயலாவிட்டாலும் அன்றைய இதன் அமைப்பு எவ்வாறு எல்லாம் மாறிக் கொண்டே வந்துள்ளது என்பதை ஓரளவுக்குக் காணல் இயலக் கூடியதாகவே உள்ளது. இந்நிலையில் இந்த ஆய்வில் கி.பி.6-க்கு முன்னைய காஞ்சியின் அமைப்பு எவ்வாறு இருந்தது என்ற கேள்விக்குரிய விடை காண முயற்சிக்கலாம்.

இன்று சென்னை மாவட்டத்தை வடக்கிலும், விழுப்புரம் மாவட்டத்தைத் தெற்கிலும், வேலூர் மாவட்டத்தை மேற்கிலும் கிழக்கு எல்லையாக வங்காள விரிகுடா கடலையும் கொண்டுள்ளது காஞ்சிபுர மாவட்டம்.[3] காஞ்சிபுரம் நகராட்சிக்குட்பட்ட ஊர்களாக, சிவக்காஞ்சி, விஷ்ணுக்காஞ்சி, புத்தக் காஞ்சி, சைனக் காஞ்சி எனப்படும் பிள்ளையார் பாளையம், குற்றம் பாக்கம், திருக்காலி மேடு, அட்சன் பேட்டை, ரெட்டிபாளையம், தும்பவனம் அமைகின்றன.[4] இந்நகரம் சிவக்காஞ்சி, விஷ்ணுக் காஞ்சி, ஜினக் காஞ்சி, பௌத்தக் காஞ்சி என்ற நான்கு பிரிவுகளாக இருந்தது. சிவக் காஞ்சி இன்று பெரிய காஞ்சிபுரம் ஆகும். விஷ்ணுக் காஞ்சி இந்நாளில் சின்ன காஞ்சிபுரம் எனப்படுகிறது. இவையிரண்டும் காஞ்சிபுர நகராண்மைக்கழக எல்லைக்குட்பட்டவை. இந்த எல்லைக்கு வெளியே திருப்பருத்திக் குன்றம் என்ற சிற்றூரே சமணம் வளர்த்த ஜினக் காஞ்சியாகும். இன்றைய காமாட்சியம்மன் கோயிலைச் சுற்றிய பகுதியே பௌத்தக் காஞ்சியாக இருந்தது.[5] இன்றுள்ள காஞ்சிபுரம் பெரிய காஞ்சிபுரம், பிள்ளையார் பாளையம், அட்சன் பேட்டை, சிறிய காஞ்சிபுரம் எனப் பல பிரிவுகளாகப் பிரிந்துள்ளது.[6]

இன்றைய காஞ்சிக்காட்சி இது. இந்த விளக்கங்கள் காஞ்சியின் பிரிவுகளையும் இருப்பிடத்தையும் காட்டுகின்றன. சங்க காலத்தில் மூதூர்களாகக் காணப்பட்ட கச்சியும் காஞ்சியும் காலந்தோறும் சந்தித்த அரசியல் மாற்றங்களும் சமுதாய

---

3. காஞ்சிபுர மாவட்டம், ப. 1. 4. மேலது, ப. 226.

5. மேலது, ப. 136-137. 6. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 141.

மாற்றங்களும், அமைப்பு மாற்றங்களுக்கு வழிவகுத்த நிலையை இன்றைய அமைப்பில் காண்கிறோம். தவிர, காஞ்சியின் பகுதிகளாக இன்று காணப்படும் பகுதிகள் அனைத்தும் பண்டைக் காலம் தொட்டே காணப்படுவன தான். இருப்பினும் காஞ்சி என்ற மூதூரினுடன் காலந்தோறும் இணைந்த இணைப்புகளாகவே இவற்றைக் கொள்ளல் இயலுகிறது. எனவே அருகாமையில் இருந்த பகுதிகள் காலப்போக்கில் காஞ்சியுடன் இணைந்த பகுதிகள் என்ற நிலையில் காஞ்சியின் இன்றைய விரிவாக்கமும் புலப்படுகிறது.

இடைக்காலக் காஞ்சியின் அமைப்பை அக்காலப் புலவர்கள் நமக்கு அறிமுகப்படுத்துகின்றனர். இன்று காணும் காஞ்சியையும் இடைக்காலக் காஞ்சியையும் நோக்க, இடைக்காலத்திற்குப் பின் ஏற்பட்ட மாற்றங்கள் இன்றைய காஞ்சியின் இந்த அமைப்பிற்குக் காரணமாக இருந்திருத்தலை உணரக் கூடுகிறது. இடைக்காலத்திய காஞ்சியில்லை இன்று நாம் காணுகின்ற காஞ்சி. அன்று அகழி, கோட்டை, மதில், தனித்தனி இனத்தினருக்கென தனித்தனித் தெருக்கள் இருந்திருக்கின்றன. காஞ்சியின் அன்றைய நகரமைப்பைக் காட்சிப்படுத்துகின்றனர் இடைக்காலப் புலவர்கள்.

**தவம் விளைத்திடு காஞ்சியைத் தன்னிடத்திருத்தி**
**நலம் விளைத்திடும் பெருமைபூண்டது தொண்டைநாடு**

என, காஞ்சிபுராண ஆசிரியர் தொண்டைநாட்டில் காஞ்சியின் இருப்பிடம் சுட்டுகிறார். பின்னர் நகரச் சிறப்பு உரைக்கிறார். புறநகர்ச்சோலை (6-10), யானைக் கூடம் (11-15), குதிரைப் பந்தி (16-20), வீரரிருக்கை (21), தொழில் செய்வோர் இருக்கை (22-23), இடைநகர் (24-27), அகழி (28-30), மதில் (34-48), அகநகர் பரத்தையர் வீதி (48-57), கடைவீதி (58-62), மற்றைய வீதிகள் (63-100), வேள்விச் சாலை (106), மற்றையோர் இருக்கை (107), கழகம் (108), சைவமடம் (109) திருக்கோயில் (110), திருமதில் (111), திருக்கோபுரம் (112-115), கொடி (116), தூபி (117), மண்டபம் (118), வேள்விச்சாலை (119), திருக்கச்சி ஏகம்பம் (120) என, நகரின் அமைப்பு காட்டப்படுகிறது. பெரியபுராணத்தில் சேக்கிழாரும் காஞ்சியை வருணிக்கும் போது முதலில் தொண்டைநாட்டுச் சிறப்புணர்த்தி, பின்னர் காஞ்சியின் தோற்றம் உரைக்கிறார்.

**ஆய நானிலத் தமைதியிற் தத்தமக்கடுத்த**
**மேய செய்தொழில் வேறு பல் குலங்களின் விளங்கித்**

தீயவென்பன கனவினும் நினைவிலாச்சிந்தைத்
தூயமாந்தர் வாழ் தொண்டை நாட்டியல்பு
சொல்வரைத்தோ —திருக்குறிப்பு. 47

என, தொண்டைநாட்டின் சிறப்பு சொல்லும் சேக்கிழார்

இவ்வளந்தரு பெருந்திரு நாட்டிடையென்றும்
மெய்வளந் திரு சிறப்பினாலு கெலாம் வியப்ப
எவ்வுலகங்களுமுள்ள தென்று யாவரும் ஏத்தும்
கை விளங்கிய நிலையது கச்சி மாநகரம்
—திருக்குறிப்பு. 48

என, கச்சியின் அமைப்புச் சொல்லத் தொடங்குகிறார்.

மாகடலும் போலும் அலர்க் கிடங்கு மாதோ
—திருக்குறிப்பு. 87

ஆங்கு வளர் எயிலினுடன் விளங்கும் வாயில்
—திருக்குறிப்பு. 88

மாறு பெற லருங்கனக மாடம் நீடு மணிமறுகும்
நெடுந்தெரு
ஆறு பயில் ஆவண வீதிகளும் —திருக்குறிப்பு. 89

பாகமருங்கு இருபுடையும் உயர்ந்து நீண்ட
படரொளி மாளிகை நிரைகள் பயில்மென் கூந்தல்
தோகையர் தம் குழாம் அலையத் —திருக்குறிப்பு. 90

காஞ்சி புராணம் விளக்கமாகக் கூறும் காஞ்சியின் அமைப்பைச் சேக்கிழார் சுருக்கமாகத் தருகிறார். ஒரு பெருநகரம் என்னென்ன வசதிகளைக் கொண்டிலங்குமோ அந்த வசதிகளையெல்லாம் கொண்டு காஞ்சி இலங்கியதை இக்காட்சிகள் காட்டுகின்றன. காஞ்சியின் சிறப்பு காரணமாகப் பலதரப்பட்ட மக்கள் இங்கு வாழ்ந்த தன்மை, அதன் காரணமாகத் தேவைப்பட்ட பாதுகாப்பு நகரின் இவ்வமைப்பிற்குக் காரணமாக இருந்திருக்கக் கூடும் என்பதை இங்கு எண்ணலாம்.

இந்நிலையில் தனிப்பாடல் ஒன்று காஞ்சியை மயில் போன்றிருந்தது என்று சுட்டுவதும்[7] இங்கு ஆராயத்தக்கது.

---

7. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 41.

**ஏரியிரண்டும் சிறகா எயில் வயிறா**
**காடுடைய பீலி கடிகாவா—நீர்வண்ணன்**
**அத்தியூர் வாயா அணிமயிலே போன்றதே**
**பொற்றேரான் கச்சிப் பொலிவு**

என்பது அப்பாடல். இதனைச் சோமலெ, "காஞ்சியின் எயில் நெடுந் தொலைவிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தோகை மயிலைப் போன்றிருந்தது. நகரின் இருபுறமும் இருந்த ஏரிகள் மயிலின் சிறகு போன்றும் அடர்த்தியான காடு மயிலின் தோகை போன்றும் கோட்டை மதிற்சுவர் மயிலின் வயிறு போலவும் சின்னக் காஞ்சிபுரம் அதன் தலை போன்றும் காட்சி அளித்தன. இதனால் காஞ்சியைப் புலவர் தோகை மயில் எனப் புனைந் துரைத்துள்ளார்" என்கிறார்.[8] புனைந்துரை என்ற சோமலெயின் கருத்து இங்கு நோக்கத் தக்கது. தவிர, காஞ்சியில் காணப்படும் ஏரி, கோட்டை, சோலை, அத்தியூர் என்ற நான்கு பகுதிகளை மட்டும் சுட்டி, காஞ்சியின் அமைப்பை மயில் போன்றிருக்கிறது என ஆசிரியர் சொல்லுகிறார். இந்த நான்கு பகுதிகளும் தோகை மயில் போன்று காட்சி தருவதாகக் காட்டும் புலவரின் வருணனை இந்த நான்கு பகுதிகளைத் தவிர பிற பகுதிகளைக் காட்டவில்லை. முழுமையாக எல்லாப் பகுதிகளையும் சுட்டினால்தான் ஊர் அமைப்பு முழுமைபெறும் என்ற நிலையில், புலவரின், இப்பாடல் காஞ்சி மயில் போன்று திட்டமிடப்பட்டு அமைக்கப்பட்ட ஊர் என்பதை எண்ண இடம் தரவில்லை. எனவே இதனைப் புலவரின் கற்பனையெனவே கொள்ளல் பொருந்தும்.

இந்நிலையில் இடைக்காலத்திலேயே காஞ்சி, சேக்கிழார் போன்ற புலவர்களின் கருத்துப்படி, ஒழுங்கான ஓர் அமைப்புடன் திகழ்ந்திருக்கிறது எனினும் இத்தகைய சிறப்பான அமைப்பினை இப்புலவர்கள் காலத்திற்கு முன்னரேயே காஞ்சி பெறத் தொடங்கியிருந்தது என்று கருதுதலுக்கும் வரலாறு சான்று பகர்கிறது. சோழர் ஆட்சிக்கு முன்னைய பல்லவர் ஆட்சி காலத்தில் காஞ்சி பெற்ற சிறப்பும், சோழர் காலத்திய அதன் தொடர்ச்சியுமே காஞ்சியின் இத்தகைய நகர அமைப்புச் சிறப்புக்குக் காரணமாக இருந்திருக்கிறது என்பதில் எந்த வித ஐயமும் இல்லை. தவிர, இந்த அமைப்பும் காலந்தோறும்

---

8. காஞ்சிபுரம் மலர், ப. 104.

மாறிக்கொண்டே வந்ததொரு அமைப்பு என்பதையும், சேக்கிழார், காஞ்சிபுராண ஆசிரியர் காலங்களில் இருந்த காஞ்சியையே அவர்தம் பாடல்கள் காட்டுகின்றன என்பதையும், திரு. நாகசாமியின் கூற்றால் உணர்ந்து கொள்ள முடிகிறது. "பல்லவர்களது சிறந்த தலைநகராய்த் திகழ்ந்த இந்நகர் பல முறை சாளுக்கியர்களோடு நிகழ்ந்த போர்களில் அழிவுற்று மீண்டும் மீண்டும் புதிதாக எழுப்பப் பெற்றது. இரண்டாம் நரசிம்மவர்மன் ஆன இராஜசிம்மன் காலத்தில் காஞ்சி புதிதாக நிர்மாணிக்கப் பட்டது. அவனது பட்டப்பெயர்களான அதிமானன், ஏகவீரன், ரணஜயன், வாமனன் ஆகிய பெயர்களால் பல பகுதிகள் அமைக்கப்பட்டன. கி.பி 725இல் அமைந்த இவை, சுமார் 250 ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி975இல் சிறப்பாகத் திகழ்ந்தன என உத்தமச் சோழனின் செப்பேடு ஒன்றிலிருந்து அறிகின்றோம். அதற்கு மற்றொரு காரணம் இராஜசிம்மன் நிர்மாணித்த காஞ்சியை இரண்டாம் விக்ரமாதித்தன் என்னும் சாளுக்கிய மன்னன் கைப்பற்றிய போதும் அந்நகரை அழிக்காமல் உள்ளே நுழைந்தான் என அவனது செப்பேடு கூறுகிறது"[9] என்னும் கருத்து இங்குக் கருதத்தக்கது. இவர் கூற்றிலிருந்து தெரியவரும் குறிப்பிட்ட இந்தப் பெயர்கள் தொடர்பான பகுதிகள் பற்றிய செய்திகள் எதுவும் தெரியவரவில்லை எனினும் காஞ்சியின் அரசியல் இந்த நகர் அமைப்புக்கும் மாற்றங்களுக்கும் காரணமாக இருந்துள்ளது என்பது மட்டும் தெளிவாகப் புலப்படுகிறது.

தேவாரப்பாக்களும் காஞ்சியில் காணப்பட்டக் காட்சிகளைக் காட்டுகின்றன.

> மாலைவெண்மதி தோயும் மாமதிற் கச்சி மாநகர்
> —பதி. 133.4
>
> தேர் ஊரும் நெடுவீதிச் செழும் கச்சிமாநகர்
> —பதி.323.2
>
> பைம்பொழிற் கச்சி —பதி. 133.2
> நீள் மறுகின் கலிக்கச்சி —பதி. 323.8
> மணிமாட மாமதிற் கச்சி மாநகருள் —பதி. 133.6

இவ்வருணனைகள் கச்சியின் மாடம், பொழில், மதில் இவற்றையே பெரும்பாலும் காட்டுகின்றன. தேவாரப்பாக்கள்

9. மேலது, ப. 102.

பக்திப்பாக்கள்; இறையைப் பாடஎழுந்த பாக்கள். எனவே காஞ்சியில் இயற்கையின் அரவணைப்பில் எழுந்தருளியிருந்த இறையை, தலத்தைப் பாடும் நிலையில் இங்குக் காஞ்சியின் பிறபகுதிகளின் வருணனைகளை எதிர்பார்த்தல் என்பது எந்த அளவிற்கு ஏற்புடையதாக இருக்கும் என்பது சிந்தித்தற்குரியது. எனினும் இவர்கள் பாக்களில் இடம்பெறும் இந்த மாடம், மதில், பொழில் காஞ்சியின் சிறப்பினைக் காட்டவல்லன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு காஞ்சியின் அமைப்பினை இடைக்கால இலக்கியங்கள் தருகின்றன. தவிர கி.பி. 6ஆம் நூற்றாண்டில் காஞ்சிபுரம் வந்த சீன யாத்திரிகனான யுவான்சுவாங் குறிப்பிடும் செய்தியையும் இங்கு மிக முக்கியமானதொரு சான்றாகக் கொள்ளலாம்.

"நிலம் செழிப்பானது. நல்ல விளைவு தருவது. நாடு வெப்பமானது. மக்கள் அஞ்சா நெஞ்சினர். உண்மைக்கு உறைவிடமானவர். கற்றவர்களையும் உயர்ந்த கொள்கைகளையும் மதிப்பவர். நாட்டில் 100 சங்கிராமங்கள் அல்லது பௌத்த மடங்கள் இருக்கின்றன. சைவ, வைணவ, சமணக் கோயில்கள் 80 இருக்கின்றன. திகம்பரசமணர் பலர் திராவிட நாட்டில் இருக்கின்றனர். பதினாயிரம் பௌத்தத் துறவிகள் இருக்கின்றனர். புத்தர் காஞ்சிக்கு வந்து பலரையும் பௌத்தராக்கியதாக இந்நாட்டில் கூறப்படுகிறது. அசோகர் திராவிட நாட்டில் பலதூபிகளை அமைத்தார். அவற்றுள் சில காஞ்சியைச் சுற்றிலும் பழுதுற்ற நிலையில் உள்ளன. காஞ்சி ஆறு கல் (மைல்) சுற்றளவு உள்ளது. அது கடற்கரை நோக்கி 20 கல் (மைல்) விரிந்துள்ள நகரம்" என்று எழுதுகிறார்.[10] காஞ்சியைப்பற்றி இலக்கியங்கள் விளக்கமாகச் சொல்ல இவர் சுருக்கமாகக் காஞ்சியின் பரப்பை நம்முன் காட்சிப்படுத்துவது சிறப்பானது. எனவே இலக்கியத் தரவுகள் காட்டும் செய்திகள் இவர் மூலம் உறுதிப்படுத்தப் படுகின்றதை இங்கு எண்ணலாம்.

இவ்வாறு காஞ்சி இடைக்காலத்திலேயே மிகச் சிறந்ததொரு அமைப்பினைக் கொண்டு திகழ்ந்ததை இலக்கியங்கள் சுட்டுவதைக் கண்டோம். இச்சிறப்பு கி.பி.-6க்கு முன்னரேயே காணப்பட்டிருக்கிறது என்பதைத் தேவாரப்பாக்கள்

10. கோயிற் களஞ்சியம், முன்னுரை.

மூலமும், யுவான் சுவாங் குறிப்பு மூலமும் புரிந்த கொண்ட நிலையில், இந்த அளவிற்கு விரிவும் சிறப்பும் பொருந்திய நகரமைப்பு எப்போது தோற்றம் பெற்றது? அன்றைய வரலாற்று மூலங்கள் கச்சி/ காஞ்சியை எவ்வாறு காட்டுகின்றன? முதலில் இது எவ்வாறு காணப்பட்டது? இக்கால கட்டங்களில் இது அமைப்பில் மாற்றம் பெற்றதா? எனில் எவ்வாறு? போன்றவற்றைக் காண, இந்தக் காலப் பகுதிசார்ந்த வரலாற்று மூலங்களை அணுகலாம்.

சங்கப் பாக்கள் மூலம் காஞ்சி ஊர் பற்றித்தெரியவரினும் ஊரின் அமைப்பு எதுவும் தெரியவரவில்லை. ஆயின் கச்சி மூதூரினைப் பெரும்பாணாற்றுப்படையில் புலவர் சிறப்பாகக் காட்சிப்படுத்துகிறார்.

கிடைக்கும் சான்றுகளில் முதலில் கச்சியை, அதன் அமைப்பை நம்முன் வருணிப்பது பெரும்பாணாற்றுப்படையே.

காழோர் இகழ்பதம்நோக்கிக் கீழ
நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளம்
கடுஞ்சூல் மந்தி கவருங்காவிற்
களிறு கதனடக்கிய வெளிறில் கந்தின்
திண்டேர்க் குழித்த குண்டு நெடுந்தெருவின்
படை தொலைபறியா மைந்து மலி பெரும்புகழ்க்
கடைகால் யாத்த பல்குடி கெழீஇக்
கொடையும் கோளும் வழங்குநர்த் தடுத்த
அடையாவாயில் மிளைசூழ்படப்பை
நீனிறவுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின் —393–405

என, கச்சி மூதூரினுள் காணப்படும் காட்சிகளை/கச்சியின் பகுதிகளை விவரிக்கிறார் பெரும்பாணாற்றுப்படை ஆசிரியர் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

கச்சியின் தொடக்கத்தில் சோலை காணப்படுகிறது. சோலையினுள் யானைகள், யானைகட்டும் தறிகள், யானையின் உணவைக் கவரும் மந்தி, திண்டேர் ஓடியதால் குழிந்து

காணப்படும் தெருக்கள், வலிமை பொருந்திய படைவீரர்கள், கடைத் தெருக்கள், வணிகம் நடைபெறும் தன்மை, அதனால் மக்கள் கூட்டமாகக் காணப்படும் தன்மை, அடையாத வாயில், காவற் காடாகச் சூழ்ந்து காணப்படும் சோலை, தாமரைப்பொகுட்டிற் காண்வரத் தோன்றும் நகர் காணப்படுகின்றன.

கச்சியில் காணப்படும் இக்காட்சிகள் அனைத்தும் இயற்கையின் அரவணைப்பில் கச்சி மூதூர் காணப்பட்ட தன்மையைக் காட்சிப்படுத்துகின்றன. அரசன் இருப்பிடம் காரணமாகவும், வணிபம் மிகுந்து நடைபெற்றதன் காரணமாகவும் பாதுகாப்பிற்காகப் படைவீரர்களுடன், காவற்காடாகச் சோலைகள் காணப்பட்டமை இங்குத் தெளிவாக விளக்கம் பெறுகிறது. இயல்பாக வளர்ச்சியுற்ற ஊர் இது என்பதை இவ்வருணனை தருகிறது. இங்குச் சோலை, தெருக்கள், கடைத் தெருக்கள், அடையாத வாயில், நகர் இருக்கின்றன. இந்த வருணனையுள் புலவர் சுட்டும் செய்திகள் அங்குக் காணப்பட்ட பகுதிகளைத் தெளிவு படுத்துகின்றனவே தவிர, இவை எங்கெங்கு எப்படி எப்படி இருந்தன என்பதைக் காட்டுமாறு இல்லை. ஆயின் இப்பகுதியில், புலவர் சுட்டும் நகர் என்பதற்குப் பொருள் கொள்ளலில் ஏற்பட்ட மாற்றம் கச்சியைத் திட்டமிடப்பட்டு உருவாக்கப் பெற்ற ஊராக, தாமரைப் பூவடிவம் உடைய ஊராக எண்ணச் செய்து விட்டது.

கச்சியின் பகுதிகளைச்சுட்டிய இப்பாடலடிகளைத் தொடர்ந்து,

> **இழுமென் புள்ளினீண்டு கிளைத் தொழுதிக்**
> **கொழுமென் சினைய கோளியுள்ளும்**
> **பழமீக் கூறும் பலாஅப் போல**
> **புலவுக் கடலுடுத்த வானம் சூடிய**
> **மலர் தலையுலகத்துள்ளும் பலர் தொழ**
> **விழவு மேம்பட்டபழவிறற் மூதூர்** –406–411

என, மூதூராகிய கச்சியின் பெரும் புகழைப்புலவர் வருணிக்கிறார். இவ்வருணனையின் மூலம் புலவர் மிகத் தெளிவாகக் கச்சி மூதூரினுள் காணப்படும் பகுதியாக நகரினைக் காட்டுகிறார். எனவே இங்கு மூதூர் வேறு, நகர் வேறு என்பது தெளிவாகிறது. ஆயின் பிற்காலத்தில் உரையாசிரியர்கள், நகர் என்பதற்குக்

கொண்ட பொருள் இந்த வேறுபாட்டையுணர ஏதுவாக அமையவில்லை. நகர் என்பதற்கு அன்று வழங்கிய பொருட்களுள், இந்தச் சூழலில் புலவர் எண்ணியுரைக்கும் பொருள் எது, எதனைக்குறிக்கப் புலவர் நகரைச் சுட்டுகிறார் என்பதைத் தெளிவாக விளங்கிக் கொள்ளாத நிலையிலும், மூதூரையும் நகரையும் வேறுபடுத்திக் காட்டும் தன்மையை உணராத நிலையிலும் இந்த அடிகளுக்குப் பொருள் பிறழ உணரப்பட்டது. நகரையும் மூதூரையும் ஒன்றெனக் கொண்டனர். எனவே கச்சி, திட்டமிடப்பட்டு உருவாக்கம் பெற்ற நகர் எனக் கருதினர். நகருக்குப் புலவர் சுட்டிய உவமையையும் கச்சிக்கு எனக் கருதினர்.

"சங்கக் காலத்துத் தலைநகரங்கள் பெரும்பாலும் தாமரைப் போலும் அமைப்புடையனவாகத் திகழ்ந்தன எனலாம். பரிபாடலில் மதுரை மாநகரின் அமைப்பும் பெரும்பாணாற்றுப் படையில் காஞ்சியின் அமைப்பும் இவ்வாறு தான் சுட்டப்பட்டுள்ளன".[11]

"காஞ்சி மாநகரம் தேரோடும் திருவீதிகளைக் கொண்டது. வீரக் குடிமக்கள் பெரும் புகழ் விளைத்து வாழும் குடியிருப்புகள் நிலவின. கொடைக் குணத்தால் அடையா வாயிலும் அரண் சிறப்பும் அமைந்தது. நான்முகனை ஈன்ற திருமாலின் உந்தித் தாமரை போன்ற அமைப்பினையுடையது காஞ்சி. தாமரை மலரில் காணப்படும் இதழ்களின் வரிசையினைப் போல காஞ்சிமாநகரின் வீதிகளின் வரிசை விளங்கியது. தாமரை மலரின் நடுவே திகழும் பொகுட்டினைப்போல காஞ்சி மாநகரின் நடுநாயகமாக மன்னனின் கோயில் விளங்கியது. செங்கற்களால் கட்டப்பட்ட பெரிய மாளிகைகள் திகழ்ந்தன. பலவகை ஓசைகளையும் எழுப்பிப் பல்வேறு பறவைத் தொகுதிகள் தேடிச் செல்லும் பழுத்த ஆலமரத்தைப் போல பலதிசை மக்களும் நாடிச் செல்லும் நகரமாகக் காஞ்சி விளங்கியது என்று அறிகிறோம்."[12]

"கச்சிமாநகரம் தாமரைமலர் போன்ற அமைப்புடையது. அதனைச் சுற்றிலும் அகழி இருந்தது. அகழியைச் சுற்றிக் காவற்காடு இருந்தது".[13]

---

11. காஞ்சிபுரம் மலர், பக். 69-70. 12. மேலது,
13. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 135.

"அதனைக் கடந்தவுடன் [illegible]காடு தெரியும். அதற்கு அப்பால் கச்சி மாநகரத்துக் கோட்டைமதில் அமைந்திருக்கும் (பெ.ஆ.படை. அடி. 371-405)"[14] போன்ற கருத்துகள் இதனால் கிளைத்தவை.

ஓர் இலக்கியத்தை விளங்கிக் கொள்ள முனையும் போது அதில் காணப்படும் சொற்கள் என்ன பொருளில் கையாளப் பட்டிருக்கக் கூடுமோ அப்பொருளிலேயே விளக்கம் காண முற்பட வேண்டும். ஒருசொல் பல பொருளுடன் திகழும் போது அந்தப்பொருட்களில் எந்தப் பொருளைக் கருதி அச்சொல்லைப் புலவன் கையாண்டிருப்பான் என்பதையெல்லாம் ஆராய்ந்தே பொருளை முடிவு செய்ய வேண்டும். அவ்வாறன்றி, பிற்காலப் பொருள் கொண்டு பழங்காலச் சொல்லை அணுகும் போது பொருள்மாறும். அதனால் வரலாறும் மாறும். இங்கும் அதே நிலையே. எனவே இரண்டு செய்திகள் இங்குக் குறிப்பிடத் தக்கன.

1. ஒரு சொல்லின் பொருளைக் கொள்ளும் போது அங்கும் காலம் முக்கியமாகக் கருதப்பட வேண்டும், ஏனெனில் சொல் எல்லாக் காலத்தும் ஒரே பொருளைத் தருவன அல்ல. காலத்துக்குக் காலம் பொருள் மாறுபடும் சொற்கள் தமிழில் மிகுதியாக உண்டு. இதனைப் போன்றே சூழல் முக்கியமாகக் கருதப்படவேண்டும். இதனையே வ.சுப. மாணிக்கனாரும் தெளிவாகச் சொல்லுவார்.[15]

2. ஓர் ஊர் போன்று இன்னொரு ஊர் இருப்பதில்லை. எனவே மதுரை தாமரைப் பூவடிவில் இருந்ததைக் காட்டி இதனையும் அதனோடு இணைத்து நோக்குவது பொருத்தமானது அன்று. சான்றுகள் மூலமாகத் தான் ஒவ்வொரு ஊரின் அமைப்பையும்

---

14. மேலது, ப. 137.

15. ஒரு நூலின் கருத்தையோ பாட்டின் பொருளையோ காண்பதற்குப் பல அறிவுக் கூறுகள் வேண்டும். இது இன்னகாலத்துத் தோன்றிய நூல் என்ற கால அறிவும் இக்காலத்து இச் சொல்லுக்கு இப்பொருள் என்ற சொல்லறிவும் இன்ன காலத்து இருந்த பழக்க வழக்கங்கள் இவை என்ற சமுதாய அறிவும் இத் தொடர் ஓடிக் கிடக்கும் முறை இது என்ற நடை அறிவும் இன்ன பிறவும் இருந்தால்தான் பொருளை முரணின்றிக் காணமுடியும் - சிந்தனைக்களங்கள், ப. 313

முடிவு செய்ய வேண்டும். கச்சியையும் இவ்வாறே அணுகவேண்டும்.

இந்நிலையில் கச்சி மூதூர் அமைப்பை மீண்டும் காணலாம்.

> நீனிற வுருவின் நெடியோன் கொப்பூழ்த்
> நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்
> தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்
> சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின் - 402-405

என்பது நகர் இடம் பெறும் பகுதி. இதற்கு உரை எழுதும் நச்சினார்க்கினியர் நகர் என்பதற்குப் புறப்படைவீடு எனப் பொருள் எழுதுகின்றார்.

> "செங்கல்லாற் செய்யப்பட்டு உயர்ந்த புறப்படைவீட்டைச்
> சூழ்ந்த மதிலினையும்" - ப. 251

இவரையொட்டிக் கழக உரையாசிரியரும் புறப்படை வீடு என உரைக்கின்றார்.

> "செங்கல்லாற் செய்யப்பட்டு உயர்ந்த புறப்படை
> வீட்டைச் சூழ்ந்த மதிலினையும்" - ப. 106

எனினும் இவரது அகல உரையில் இவர் வீடு எனவும் கருதியது தெரிகிறது.

> "காண்வர - காணுதல் உண்டாக; அழகுண்டாக என்றவாறு.
> சுடுமண்-செங்கல்-பண்டைக் காலத்தே செங்கல்லாற்
> வீடியற்றும்
> வழக்கமுண்மையை இதனானும் சுடுமண் ஓங்கிய நெடுநிலை
> மனை (மணி 3-127)
> சுடுமண் நெடுநிலை (புற.வெ.113) என வருவனவற்றானும்
> உணர்க" - ப. 108

புறப்படை வீடு என்பது பழந்தமிழில் காணப்படாத ஒருசொல். தமிழ்ப் பேரகராதி புறப்படைவீடு என்பதற்குப் புறஞ்சேரி என்றும் புறஞ்சேரிக்கு, நகர்க்குப் புறம்பே மக்கள் வாழும் பிரதேசம் என்றும் பொருள் உரைக்கிறது (ப. 2808).

இந்த ஆற்றுப்படை இலக்கியத்தின் நோக்கம், புலவர் இதனைப் பாடிச் செல்லும் முறைமை, திரையனின் இருப்பிடத்தைச் சொல்லும் முறைமை போன்றன, தமிழ்ப்பேரகராதி புறப்படை வீடு என்பதற்குத் தரும்

பொருட்களுக்கு ஏற்புடையதாக இல்லை. படைவீடு என்பதற்குப் பாசறை, இராசதானி, ஆயுதசாலை எனவும் பொருட்கள் தமிழ்ப் பேரகராதியில் காணப்படுகின்றன (ப. 2448). இவற்றுள் இராசதானி என்ற பொருளை இதற்குக் கொண்டிருக்கலாமோ இவர் எனினும் தலைநகரம் என்பது மூதூருக்குப் பொருந்துமே அல்லாது இங்குப் புலவர் குறிப்பிடும் நகருக்குப் பொருந்துமாறில்லை. எனவே நச்சினார்க்கினியர் நகர் என்பதற்குப் புறப்படை வீடு என்று எவ்வாறு கொண்டார் என்பது தெளிவு பெறவில்லை.

எனவே புலவர் மூதூரின் பகுதியாகக் காட்டும் நகர் என்பது என்ன பொருளில் அன்று, அங்குக் கையாளப்பட்டுள்ளது என்பதைக் காண முற்படும் போது பழந்தமிழில் நகர் என்பதற்குரிய பொருள்கள் இங்குச் சிந்திக்கத்தக்கனவாகின்றன. நகர் என்ற சொல் இன்றும் நம்மிடம் பயின்று வரும் ஒரு சொல். பெயர்ச் சொல்லாகவும் வினைச் சொல்லாகவும் வழங்கிவரும் ஒரு சொல். பெயர்ச் சொல் நிலையில் இது இன்று பேரூர் என்ற பொருளுடன் ஊர்ப்பெயர்ப் பொதுக் கூறாகவும் திகழ்கிறது. ஆயின் பழந்தமிழில் நகருக்கு இப்பொருட்கள் இல்லை. அங்கு நகர் என்பது மக்கள் வாழும் இல்லம், அரண்மனை, கோயில் போன்றவற்றைக் குறித்தது. சங்க காலத்திற்குப் பின்னர் இது பேரூரைக் குறிக்கத் தொடங்கிற்று[16] என்ற நிலையில் இந்த இடத்தில் இது என்ன பொருளில் ஆளப்படுகிறது என நோக்க, திரையனின் அரண்மனையைக் குறித்து அமைவது தெளிவுறுகிறது.

நகர் என்ற சொல்லின் வேர்ச் சொல் நகு என்பதாகும். இதற்கு விளங்குதல் என, பொருள் உரைப்பார் தேவநேயப் பாவாணர்.[17] எனவே பழந்தமிழில் மக்கள் வாழ்ந்த இல்லங்கள், அரண்மனைகள், கோயில்கள் குறிப்பதற்குப் பிறபல சொற்கள் இருந்தன எனினும் பிற உறைவிடங்களில் இருந்து மேம்பட்ட இவற்றின் சிறப்பு, விளங்கித் தோன்றும் தன்மை, பொலிவு காரணமாக இவற்றைத் தனித்துக் காட்ட நகர் என்ற சொல் பயன்பட்டுள்ளது எனல் பொருந்தும். இந்த அடிப்படையிலேயே திரையன் அரண்மனையும் நகர் என்று சுட்டப்படுகிறது. இங்கு மட்டுமல்லாது, தொடர்ந்தும் திரையனின் அரண்மனை,

---

16. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள், ப. 182-186.
17. பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப. 3.

தொய்யா வெறுக்கையொடு துவன்றுபு குழீஇச்
செவ்விபார்க்கும் செழுநகர் முற்றம் –பெரும். 434–5

எனவும்,

. . . . . . . . . . . . . . . . . . . . . . . மாடத்
திறையுறை புறவின் செங்கால் சேவ
லின்றுயிலிரியும் பொன்றுஞ்சு வியனகர்
– பெரும். 437–439

எனவும் நகர் என்று புலவரால் சுட்டப்படுகின்றது. எனவே நச்சினார்க்கினியர் புறப்படைவீடு என மன்னன் அரண்மனையை எண்ணிச் சொல்லியிருக்கலாமோ என்ற கோணத்தில் பார்த்தாலும், புறப்படைவீடு என்ற பொருள் இந்த இலக்கியப் பகுதியைத் தெளிவாக விளங்கிக் கொள்ளத் துணையாக வில்லை என்பதே இங்கு நாம் கருதவேண்டியதாகிறது. மேலும் இத்தெளிவின்மை கருத்துச் சிக்கல் எழவும் வாய்ப்பு அளித்து விட்டிருக்கிறது. மேலும் நச்சினார்க்கினியர் புறப்படை வீடு என்று உரைக்கிறாரே தவிர இங்குச்சுட்டப்பட்ட உவமை எதற்கு என்றும் விளக்கமாகத் தரவில்லை. முதலில், ''பல இதழ்களையுடைய தாமரையினது கொட்டைபோல அழகு விளங்கத் தோன்றி" எனவும் "செங்கல்லாற் செய்யப்பட்டு உயர்ந்த புறப்படை வீட்டைச் சூழ்ந்த மதிலினையும்" எனவும் தனித்தனியே எழுதுகின்றார் இவர். பின்னர், தொகுத்து எழுதும் போது "'படப்பையினையும் (401) காவினையும் (395) வரைப்பினையும் (405) அடையா வாயிலினையும் (401) தெருவினையும் (397) பலாஅப் போல விழவு மேம்பட்ட மூதூர் என்க" என்றும் எழுதுகிறார் (ப.252).

இவரது கருத்துப்படி, படப்பை, கா, வரைப்பு, அடையா வாயில், தெரு, கடை, படை எல்லாம் மூதூரில் காணப்படுகின்றன. ஆயின் இவர் நகரினைச் சுட்டவில்லை. வரைப்பு சுட்டுகிறார்.

எனவே காண்வரத் தோன்றி, பலாஅப்போல விழவு மேம்பட்ட மூதூர் என்று தொகுத்து எழுதும் போது தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றுவது மூதூர் என்ற கருத்துப் பெறப்படுகிறதே அன்றி நகர் இல்லை. எனவே இங்கும் தெளிவின்மையே அமைகிறது.

கழக உரையாசிரியரும் (ப.107) உ.வே.சாவும் (ப.204) மூதூருக்குத் தாமரைப்பூவினை உவமிக்கும் பிற இலக்கியச்

சான்றுகளைச் சொல்லி இங்கும் கச்சி மூதூர் தாமரைப் பூவிற்கு உவமிக்கப்படுகிறது என்று எழுதுகின்றனர். இக்கருத்து, காஞ்சி பற்றி எழுதிய, ஆய்வு செய்த அறிஞர்களிடமும் படிந்து தொடர்ந்து கச்சி நகர் தாமரைப் பூவடிவினது என்று எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் தன்மையைப் பெற்றுள்ளது. இந்நிலையில் கச்சிக் காட்சியை மீண்டும் காணலாம்.

**காழோர் இகழ் பத நோக்கி தொடங்கி, வழங்குநர்த்தடுத்த அடையாவாயில், மிளைசூழ் படப்பை** சொல்லி, அடுத்து

> **நீனிற உருவின் நெடியோன் கொப்பூழ்**
> **நான்முக ஒருவற் பயந்த பல்லிதழ்த்**
> **தாமரைப் பொகுட்டிற் காண்வரத் தோன்றிச்**
> **சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின் – 402–405**

உடன் இக்காட்சிகளை முடித்துக் கொண்டபுலவர் பின்னர், கச்சியின் புகழ்கூறத் தொடங்குகிறார். வரைப்பின் உடன் கச்சி மூதூரில் காணப்படும் காட்சிகள் முடிந்து விட்டன. இதில் சோலை முதல் மிளை சூழ் படப்பை, வரை முதலில் சொன்ன புலவர் இறுதியில் இம்மூதூரினுள் காணப்படும் திரையனின் அரண்மனையின் பாதுகாப்பு, அதன் பொலிவு சொல்லுமுகமாகத் தாமரையினது கொட்டைபோல அழகு விளங்கத் தோன்றிக் காணப்படும் திரையனின் அரண்மனையைச் சூழ்ந்து காணப்படும் செங்கல் சுவராகிய மதிலின் சிவப்பு நிறம் காரணமாக அது தாமரை இதழ் போன்று காட்சியளிக்கிறது என்று கூறுகிறார். எனவே புலவர் சொல்லும் பல்லிதழ்த் தாமரைப் பொகுட்டுத் திரையனின் அரண்மனைக்கும் சூழ்ந்து காணப்படும் செங்கல் சுவருக்கு இதழ்களும் உவமையாக இங்கு அமைகிறதே தவிர, தாமரைப் பூவிற்கு மூதூர் உவமை என்பது வலிந்து பெறப்பட்டதாகவே அமைகிறது.

நகர் அரண்மனை என்று தெளிவாகச் சொல்லப்படாத காரணத்தாலும் கச்சி மூதூர் நகர் எனக் கொள்ளப்பட்ட காரணத்தாலும் இந்த உவமை கச்சிக்குக் கொள்ளப் பெற்றது. கச்சிமாநகர் தாமரைப் பூவடிவினதாக இருந்தது என்ற முரண் சிந்தனைக்கு வழி வகுத்தது. கச்சி தாமரைப் பூவடிவினதாக இல்லை என்று கருதியவர்கள் உண்டு.[18] ஆயின் இவர்கள் விளக்கம் அளித்துள்ளனரா என்பது தெரியவில்லை.

---

18. சங்க இலக்கியத்தில் சில செய்திகள், ப. 154.

இந்நிலையில் வரலாற்றில் முதன்முதலில் நாம் காணக் கூடிய கச்சியின் அமைப்பு உருத்திரங் கண்ணனார் காட்டும் இந்த இயல்பான, இயற்கையான அமைப்பே ஆகும்.

கச்சியை மூதூராக, மன்னன் தலைநகராக, வணிபம் நடை பெற்ற ஊராக, படை வீரர்கள் நிரம்பிய ஊராகக் காட்டினாலும், காஞ்சி இதனைத் தம்முள் இணைத்துக் கொள்ளுமுன்னர் இருந்த பகுதி இது என்பது இந்த ஊரின் அளவைப் புரிந்து கொள்ள வைக்கிறது. இந்த இடத்தில் மா.இராசமாணிக்கனார் வெகு சிறப்பாக ஆராய்ந்து கூறியிருக்கும் கச்சியின் அன்றைய இருப்பிடம் பற்றிய சிந்தனையும் குறிப்பிடத் தக்கது. இவர், "கச்சியைப் பற்றிப் பெரும்பாணன் சொன்ன விவரங்களையும் காஞ்சி நகரப்படத்தின் உதவியால் மேலே கூறப்பட்ட கச்சிப் பேட்டைச் சேர்ந்த கோவில்கள் உள்ள இடங்களையும் நினைவிற் கொண்டு பார்த்தால் பெரும்பாணன் காலத்துக் கச்சிமாநகரம் ஏகாம்பரேஸ்வரர் கோயில், கச்சபேசர் கோயில், உலகளந்த பெருமாள் கோவில் ஆகிய கோவில்களுக்குக் கிழக்கிலும் யதோத்தகாரி கோவில் உள்ள பகுதிக்கும் திருக்காலி மேட்டுக்கு வடக்கிலும் அமைந்திருத்தல் வேண்டுமென்று கருதுவது பொருத்தமானதாகும்" என்கிறார்.[19]

இவரது கருத்திலும் அன்றைய கச்சியின் இருப்பிடம் புலப்படுகிறது. கச்சி ஒரு சிறு ஊராகக் காணப்பட்டிருக்கிறது என்பதும் தெரிகிறது. மேலும் சோலைகள் காணப்பட்ட இயற்கைச் சூழலுடன், சோலைகளே காவற்காடாக அமைந்திருந்ததே தவிர, கோட்டை, அகழி எதுவும் அங்கு இல்லை. அரண்மனையைச் சுற்றி, செங்கல் மதில் காணப்பட்டதே தவிர ஊரைச் சுற்றியன்று. எனவே பண்டைத் தமிழரின் வாழ்வியலுக்கு ஏற்ப, கச்சி மன்னன் இருப்பிடமாக, வாணிகச் சிறப்புடனும், சமயச் சிறப்புடனும் சிறந்து விளங்கிய நிலையிலும் அது தம் இயற்கை அமைப்பை விட்டு விலகாத நிலையிலேயே, செயற்கைக்கு இடங்கொடாத நிலையிலேயே அன்று காணப்பட்டது என்பதும் தெளிவு.

இந்த அமைப்பு மாறி, மூதூராக இருந்த கச்சி, பின்னர் நகராக, மாநகராக வளர்ச்சியுற்றுக் காணப்பட்டதை, இவ்வளர்ச்சியைக் காஞ்சியுடனான அதன் இணைவில்

---

19. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 142.

அடைந்ததை, மணிமேகலை காட்டுகிறது. மணிமேகலையிலும் சாத்தனார் கச்சியின் அமைப்பை விளக்குவதை நோக்கமாகக் கொள்ளவில்லை எனினும் கதைப் போக்கிலும், வருணித்துச் செல்லும் போக்கிலும், சொல்லாட்சிகளின் மூலமாகவும் மூதூர் மாநகராக மாற்றம் பெற்றதைப் புரிந்து கொள்ளல் இயலுகிறது. ஏற்கெனவே பெயராய்வில் சங்க காலத்திற்குப் பின்னர் மணிமேகலைக் காலத்திற்கு முன்னர் நிகழ்ந்தது இம்மாற்றம் என்பது தெளிவானது. இந்த இடைப்பட்ட கால வரலாறு தெளிவாகத் தெரியவில்லை எனினும் பல்லவர்களின் ஆட்சியின் தொடக்கம் இங்கே தொடங்கியதைப் பல்லவர் வரலாற்றில் காண்கிறோம். காஞ்சியிலிருந்து முதற்பல்லவர்கள் வெளியிட்ட செப்பேடுகள் காஞ்சியிலிருந்து பல்லவர்கள் ஆட்சி செய்ததைத் தெரிவிக்கின்றன. ஆயின் இவர்கள் காஞ்சியை மாற்றி அமைத்தனரா இல்லையா என்பது குறித்துச் செய்திகள் எதும் கிடைக்கவில்லை. இருப்பினும் காஞ்சியின் விரிவாக்கத்திற்கு இவர்கள் காரணமாக இல்லை என்றும் உறுதியாகக் கூற இயலாது. இந்நிலையில் மணிமேகலையில் நாம் காண்பது காஞ்சி, கச்சி ஊர்களின் இணைவில் ஒன்றாக உருவாகிய மாநகர்; இரண்டு பெயர்களாலும் வழங்கப்பட்ட பேரூர்; விரிவு பெற்ற பெருநகர். சாத்தனார் மணிமேகலை வஞ்சியிலிருந்து கச்சிக்கு வரும் நிலையில் இந்நகர் பற்றிய செய்திகளைத் தருகின்றார்.

ஆங்கவன் தானும் நின்னறத்திற் கேதுப்
பூங்கொடி கச்சி மாநகராதலின்
மற்றும் மாநகர் மாதவன் பெயர்நாள்

—மணி. 28: 151-153

பொன்னெயிற் காஞ்சி நாடுகவினழிந்து
மன்னுயிர் மடிய மழை வளம் கரத்தலின்

—மணி. 28: 156-157

மேலும் பண்டு காணப்படாத மதில் சிறப்பும் அகநகர் நடுநகர் என்ற சொல்லாட்சிகளும் மன்னன் அமைத்ததாகச் சுட்டப்படும் கோயில், பொய்கை, பொழில்களும் இந்நகரின் விரிந்த பரப்புக்குச் சான்றுகளாகின்றன.

பொன்னெயிற் காஞ்சி நாடு கவினழிந்து — மணி. 28:156
நடுநகர் எல்லை நண்ணினள் இழிந்து — மணி. 28:171
அன்னாள் இந்த அகநகர் புகுந்த
பின்னாள் நிகழும் பேரறம் பலவால்

*கார்வறங் கூரினும் நீர்வறங் கூராது*
*பாரகவீதியிற் பண்டையோர் இழைத்த*
*கோமுகி என்னும் கொழுநீர் இலஞ்சியொடு*
*மாமணிபல்லவம் வந்த தீங்கெனப்*
*பொய்கையும் பொழிலும் புனைமின் என்றறைந்தத்*
*–மணி. 28:198–204*

இங்கு நகர் விரிவாக இருந்தது என்பது தெரிவதில் விரிவாக்கம் பெற்றிருக்கிறது என்பதும் தெளிவாக விளங்குகிறது. இருப்பினும் இக்காட்சிகள் கச்சி/காஞ்சியின் அமைப்பைத் தெளிவாக்கத் துணைபுரிவதாகக் கூறல் இயலாது என்பதையும் நாம் இங்கு எண்ண வேண்டியதாக அமைகிறது.

இத்தகைய விரிவு பெற்ற நகர் பாதுகாப்புடன் தான் இருந்திருக்க வேண்டும் என்பதையுறுதிப்படுத்துமுகமாக எயில் பற்றியும் செய்தி அங்கு உண்டு.

*பொன்னெயிற் காஞ்சிநாடு –மணி. 28: 156*
*பொற்கொடி மூதூர் புரிசை வலங்கொண்டு*
*–மணி. 28: 170*

இங்குப் பொன்னெயில் என்பதில் 'பொன்' என்பது சிறப்பான என்ற பொருளைக் குறித்து அமைந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

மழைவளம் கரந்ததால் நாடு கவினழிந்த நிலையைக் குறிப்பிடும் இடத்திலும் பொன்னெயில் குறிப்பிடப்படுகிறது.

*பொன்னெயிற் காஞ்சி நாடுகவினழிந்து*
*மன்னுயிர் மடிய மழைவளம் கரத்தலின்*
*–மணி. 28: 156–157*

எனவே சோலைகளைக் காவற்காடாகக் கொண்டு திகழ்ந்தது கச்சி. இம்மூதூர் காஞ்சியுடன் இணைந்து விரிவு பெற்றமை காரணமாகவும், மிகு வளர்ச்சி காரணமாகவும், பாதுகாப்புக் கருதிய நிலையில், சோலைகள் காவலாக இருந்தமையை மாற்றி, பின்னர் இங்குச் சிறந்த மதில், பொன்னெயில் கட்டப்பட்டிருக்கிறது எனக் கொள்ளலாம். இம்மதில் இங்கு மட்டுமல்லாது தேவாரம் போன்ற பிற்கால இலக்கியங்களிலும் பேசப்பட இதன் சிறப்பே காரணம் என்பதையும் ஊகிக்கலாம்.

அகநகர், புறநகர் என்ற அமைப்புகளும் பாதுகாப்புக் கருதி அமைக்கப்பட்டனவாகவே தோன்றுகின்றன.

பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங் கொண்டு
நடுநகர் எல்லை நண்ணினள் —மணி. 28:170-171

என்பதில் அமையும் நடுநகர் அகநகர் ஆக இருக்கலாம். மணிமேகலை காஞ்சியினுள் புகுந்தமையைக் காட்டும் சாத்தனாரின் இக்கூற்றில் இன்னொரு உண்மையும் மறைந்து கிடப்பதாகத் தோன்றுகிறது.

பொன்னெயிற் காஞ்சி என்ற சொல்லைப் பொதுவாகக் காஞ்சிக்குக் கூறிய ஆசிரியர் மணிமேகலை நகரினுள் செல்லுவதைக் குறிப்பிடும் போது புரிசையை வலம் வந்து நடுநகர் எல்லை நண்ணினள் என்கிறார். எனவே புரிசை நடுநகராகிய அகநகரைச் சுற்றிக் காணப்பட்ட இன்னொரு மதிலாக இருக்கலாமோ என்ற எண்ணம் தோன்றுகிறது.

இந்த அகநகரில் மன்னன் இருப்பதாகக் காட்டப்படுவதும் பாதுகாப்பு நோக்கிலான உள் மதிலின் இருப்பை எண்ணச் செய்கிறது. மேலும் அகநகர் என்ற சொல்லாட்சி, புறநகர் ஒன்று இருந்திருக்கிறது என்ற எண்ணத்தையும் தருகிறது. இத்தகைய விரிவான நகராகக் காஞ்சி/கச்சி காட்டப்படும் தன்மையில் சில செய்திகள் தெளிவு படுகின்றன.

சங்ககாலத்திற்குப் பின்னர் மணிமேகலை காலத்திற்குள் இவ்வூர் விரிவாக்கம் பெற்றுள்ளது என்பதற்கு இவையெல்லாம் உறுதியான சான்றுகள். எனவே பெயராய்வில் கண்டதற்கிணங்க, பல்லவர் காலத்திலேயே காஞ்சி தலைநகராகி, இந்த இணைப்பும் நடைபெற்று, பெருநகராகத் திகழத் தொடங்கியிருக்கலாம் என்பது இங்குத் தெளிவுபடுகிறது. தவிர இந்த ஊர் மணிமேகலை காலத்திற்கு முன்னரேயே மிக அழகாக நிர்மாணிக்கப்பட்டு இருந்திருக்கிறது என்பதற்கும் சாத்தனாரின் கச்சி பற்றிய வருணனை சான்றாக அமைகிறது.

பொன்னெயிற் காஞ்சி நாடு கவின் அழிந்து
—மணி. 28:156

எனக் காட்டுவதில்,

தேவர் கோமான் காவல் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னகர் வறிதாப் புல்லென்று ஆயது

–மணி. 28:166–168

எனக் காட்டுவதில்,

நன்னாடெல்லாம் அலத்தற்காலையாகியது

–மணி. 28:190–191

என்பதில் இதன் சிறப்பு தெளிவுபடுகிறது. மூதூர் நகராகக் காட்சி படுத்தப்படுவதில் இதன் விரிவாக்கமும் பெருவளனும் புலப்படுகின்றன. எனினும் கச்சி காஞ்சி பற்றிய இச்செய்திகள் மூதூர்களாக இருந்து மாநகராக விரிவாக்கம் பெற்றதில் பெற்ற சில அமைப்பு மாற்றங்களைச் சுட்டுகின்றனவே தவிர, தெளிவான அமைப்பு குறித்த சிந்தனைகளைத் தரவில்லை. மேலும் வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கும் போது இது குறித்து விளக்கம் பெறலாம் என்பதுவே இந்நகரின் அமைப்பு குறித்து இங்குக் கிடைக்கும் முடிவு.

இயல் - 3

# ஆட்சியாளர்களும், ஆட்சிமுறையும்

காஞ்சி கச்சி இணைந்தன. கச்சி எனவும் காஞ்சி எனவும் அழைக்கப்பட்ட ஒரு மாநகர் உருவாயிற்று என்ற வரலாற்றை முன் இயல்கள் விரிவாகத் தந்தன. கச்சியை வரலாற்றில் முதன் முதலாகக் காணும் போதே இது தலைநகர் என்ற பெருமையையும் தகுதியையும் பெற்றுச் சிறந்த ஊராகக் காட்சி தருகிறது எனினும் இது அக்காலத்திலேயே தலைநகர் என்ற தகுதியைப் பெற்றது எவ்வாறு என்ற வரலாற்றுத் தெளிவு நமக்குக் கிடைக்கவில்லை. அதே நேரத்தில் காஞ்சி பல்லவர்களால் தலைநகராகக் கொள்ளப்பட்டதும் அதனுடன் கச்சி இணைந்ததும் ஒரளவுக்குத் தெளிவான வரலாறு. இவ்வாறு இந்த மூதூர்கள் நகர்களாக வளர்ந்த வளர்ச்சிக்கும் இவற்றின் சிறப்புக்கும் இவற்றைத் தலைநகர்களாகக் கொண்டு ஆண்ட தலைவர்களும் ஒரு காரணமாக இருந்திருக்க வேண்டும் என்பது உறுதி. இந்நிலையில் இந்த இயல் இந்நகர வரலாற்றில் இதனைத் தலைநகராகக் கொண்டு ஆண்டோரை ஆராயப் புகுகிறது.

பிற்காலப் பல்லவர் காலத்தில் காஞ்சி தலைநகராகத் திகழ்ந்து பெரும்புகழ் பெற்ற வரலாறு தமிழக வரலாற்றில் தெளிவான ஒன்று. ஆட்சியாளர்கள் யார்? யாருக்குப் பின் யார் அரசேற்றனர்? போன்றனவற்றில் தெளிவான அந்த வரலாற்றை வரலாற்று அறிஞர்கள் நமக்குத் தந்துள்ளனர். ஆயின் கி.பி. 6-க்கு முன்னைய வரலாற்றை நோக்க, கச்சி முதலில் யாரால் தலைநகராகக் கொள்ளப்பட்டது? தொடர்ந்து யார் யாரால் இது ஆளப்பட்டு வந்தது? இதன் தலைநகர் என்ற சிறப்பு, குறையக் காரணம் என்ன? காஞ்சியை ஏன் பல்லவர் தலை நகராகக் கொண்டனர்? பல்லவர்களுள் முதலில் யார் இதனைத்

தலைநகராகக் கொண்டார்? தொடர்ந்து யார் யாரால் இது ஆளப்பட்டது போன்ற வரலாறுகள் முழுமையாகவும், தொடர்ச்சியாகவும் நமக்குக் கிடைக்கவில்லை. அன்றைய தமிழ் இலக்கியங்களில் கச்சி, காஞ்சி குறித்த செய்திகள் கிடைக்கின்றன; அக்காலம் சார்ந்த பல்லவர் செப்பேடுகள் கிடைக்கின்றன; எனினும் போதுமான அளவில் செய்திகளும் விளக்கங்களும் இன்மையால் / கிடைக்காமையால் / கிடைத்த செய்திகளிலும் தெளிவின்மையால் கச்சியை, காஞ்சியை ஆட்சி செய்தோர் குறித்துக் கருத்து மாறுபாடுகள் மலிந்து காணப்படுகின்றன. மேலும் தமிழகத்தின் வடபகுதியில் இதன் இருப்பிடம் காரணமாக, பிற பகுதியினர் தொடர்பு இங்குக் காணப்பட்டதையும் அறிஞர்கள் எடுத்தியம்புகின்றனர். எனினும் சான்றுகள் இன்மை, கிடைக்கும் சான்றுகளில் தெளிவின்மை இவ்வரலாற்றிலும் பல்வேறுபட்ட கருத்து மாறுபாடுகள் எழுந்தமைக்குரிய காரணங்களாகும்.

இந்நிலையில் இந்த இயலில் இதுவரையிலும் இவ்வரலாறு குறித்த அறிஞர்தம் சிந்தனைகளுடன், கிடைக்கும் வரலாற்று மூலங்களையும் அணுகி, கச்சியை, காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட தலைவர்களின் வரலாறு காணும் முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. கிடைக்கும் சில செய்திகள் மூலம் ஆட்சிமுறை பற்றிய சில எண்ணங்களையும் புலப்படுத்த விழைகிறது இவ்வியல்.

## 1. ஆட்சியாளர்கள்

பண்டைத் தமிழகம் சேர, சோழ, பாண்டியர் என்னும் முப்பெரு வேந்தர்களாலும் பல்வேறு சிற்றரசர்களாலும் ஆளப்பட்டு வந்ததைத் தமிழகத்தின் வரலாறு தெரிவிக்கிறது. இவர்களால் ஆளப்பட்டு வந்த தமிழகத்தின் எல்லையைத் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம்,

> வடவேங்கடம் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ் கூறு நல்லுலகம் 1–3

என உரைக்கிறது. அன்றைய தமிழகத்தின் வடஎல்லையாக வேங்கடம் இருந்ததை இவ்வடிகள் தெரிவிக்கின்றன. சிற்றரசர்கள் பலர் இந்த வேங்கடம் சார்ந்த தமிழகத்தின் வடபகுதிகளை ஆண்டு வந்துள்ளனர். பேரரசர்கள் ஆண்ட சேர, சோழ,

பாண்டிய நாட்டுப் பகுதிகளினின்றும் இதன் தொலைவு இதனைத் தொன்று தொட்டுச் சிற்றரசர்களும், வேற்றரசர்களும் ஆள ஒரு காரணமாக இருந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

வடதமிழகப் பகுதிகளை, தமிழகத்தின் எல்லைப் பகுதிகளை ஆண்ட சிற்றரசர்களாகச் சங்க இலக்கியப்பாக்கள் சிலரைக் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.

**புன்றலை மடப்பிடி யினையக்கன்று தந்து**
**குன்றக நல்லூர் மன்றத்துப் பிணிக்கும்**
**கல்லிழியருவி வேங்கடங்கிழவோன்**
**செல்வுழி யெழாஅ நல்லேர் முதியன்**
**ஆதனுங்கன் போல நீயும்**
**பசித்த வொக்கற் பழங்கண் வீட**
**வீறுசானன்கல நல்குமதி பெரும** –புறம். 389: 9–15

என்பது ஆதனுங்கன் வேங்கடம் ஆண்டதைப் புலப்படுத்தும் பாடல்.

**கல்லா விளையர் பெருமகன் புல்லி**
**வியன்றலை நன்னாட்டு வேங்கடம்** –அகம். 83: 9–10

**புடையலங்கழற்கால் புல்லிகுன்றத்து** –அகம். 295: 13

**கழல் புனை திருந்தடிக் கள்வர் கோமான்**
**மழபுலம் வணக்கிய மாவண்புல்லி**
**விழவுடை விழுச்சீர் வேங்கடம் பெறினும்**
–அகம். 61: 11–13

**நிரை பல குழீஇ நெடுமொழிப் புல்லி**
**தேன்றூங்கு உயர் வரை நன்னாட்டும்பர்**
**வேங்கடம்** –அகம். 393: 18–20

என்பன புல்லி வேங்கடம் ஆண்டதைத் தெரிவிக்கும் பாடலடிகள்.

**ஒலி வெள்ளருவி வேங்கடநாடன்**
**உறுவரும் சிறுவரும் ஊழ்மாறுய்க்கும்**
**அறத்துறை அம்பியின் மான மறப்பின்**
**றிருங்கோளீராப்பூட்கை**
**கரும்பனூரன் காதன் மகனே** –புறம். 381: 22–26

என்பது கரும்பனூரன் பற்றியது.

வினை நவில் யானை விறற் போர்த் தொண்டையர்
இனமழைத் தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு
ஓங்கு வெள்ளருவி வேங்கடத்தும்பர் –அகம். 213: 1–3

வென்வேற்றிரையன் வேங்கடநெடுவரை
நன்னாட்பூத்த நாகிள வேங்கை –அகம்.85: 9–10

என்பன தொண்டையர் திரையர் சார்ந்தன. அகம் 325ஆம் பாட்டு பாணனைக் குறிப்பிடுகிறது. இவன் நாடும் வடக்கில் இருந்ததனை இது தெரிவிக்கின்றது.

எல்லாம் பெரும்பிறிதாக வடாஅது
நல்வேற் பாணன் நன்னாட் டுள்ளதை
–அகம் 325:16–17

இப்பகுதியை ஆண்ட குறுநில மன்னர்கள் இவ்வாறு தெரியவர, இப்பகுதியில் வாழ்ந்த புலவர் பெருமக்களையும் சங்கப்பாக்கள் மூலமாக அறிந்து கொள்கின்றோம். வேங்கடம் பற்றிப் பெரும்பாலான பாடல்கள் பாடிய புலவர்களாக மாமூலனார், கல்லாடனார் தெரிய வருகின்றனர். கல்லாடனார் பாடல் காட்டும் குறிப்பு இவர் வேங்கடப்பகுதியைச் சார்ந்தவர் என்பதை எண்ணச் செய்கிறது.

அரியலார் கையர் உண்டினிது உவக்கும்
வேங்கட வரைப்பின் வடபுலம் பசித்தென
ஈங்கு வந்திறுத்த என் இரும் பேரொக்கல்
தீர்கை விடுக்கும் பண்பில முதுகுடி
நன. . . . .வினவலின்
முன்னும் வந்தோன் மருங்கிலனென்னும்
அளியனாகலிற்பொருநன் இவனென
நின்னுணர்ந்தறியுநர் என்னுணர்ந்து கூறக்
காண்கு வந்திசிற் பெரும –புறம். 391: 6–14

என, பொறையாற்றுக் கிழவனை நாடிப்பாடுகின்ற தன்மையில் வேங்கடத்திலிருந்து தன் சுற்றம் சூழ வறுமை காரணமாகச் சென்றமையைச் சுட்டும் போது இது அவரது நிலையைக் காட்டுவதாகக் கொள்ளலாம். மாமூலனார் பாடிய பாடல்களும் பல (புல்லி பற்றியவை அகம். 61, 211, 265, 311, 393, நற்றிணை 14, மொழிபெயர் தேயம் பற்றியவை அகம். 295, 375, எருமை பற்றியது அகம். 115, கட்டி நன்னாடு பற்றியது குறுந். 11), கரும்பனூர்

கிழானைப் பாடிய நன்னாகனார் (புறம். 381, 384), திரையனை ஒரு பாடலில் குறிப்பிடும் காட்டூர் கிழார் மகனார் கண்ணனார் போன்றோரையும் இப்பகுதியினராக எண்ணலாம். மேலும் தன்னுடைய 'சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை'யில் ந.சஞ்சீவியும் தொண்டை நாட்டுப் புலவர்களைத் தொகுத்துரைக்கிறார்.

1. இளந்திரையன் தொண்டைமான், நற். 94, 99, 106: புறம். 185.
2. கச்சிப்பேட்டு இளந்தச்சனார், நற். 266.
3. கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார், குறுந். 213, 316.
4. கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார், நற். 144, 213.
5. கந்தரத்தனார், நற். 238, 306; குறுந். 155, 213; அகம். 13, 95, 193.
6. கள்ளில் ஆத்திரையனார், குறுந். 293; புறம். 175, 389.
7. தாமப்பல் கண்ணனார், புறம். 43.
8. பாரதம் பாடிய பெருந்தேவனார், கடவுள் வாழ்த்துப் பாடல்கள், அகம்., ஐங்., குறுந்., நற்.
9. பெருங்கௌசிகனார், நற். 44, 139.

இவ்வாறு சங்கப் பாக்கள் மூலம் வேங்கடம் வரையிலான வடதமிழகப் பகுதிகள் தெரியவருகின்றன. அதே சமயத்தில் இப்பகுதி மக்களின் வாழ்வியலையும் அவர்கள் வாழ்ந்த ஊர்கள் அவற்றின் பெயர்கள் பற்றியெல்லாம் கூடத் தெரியவருகின்றோம். இம்மக்களின் வாழ்வியற் கூறுகள் அனைத்தும் அன்றைய தமிழகத்தின் பிறபகுதி மக்களின் வாழ்வியலை ஒத்தே காணப்படுகின்றமையும் இங்குக் கருதத்தக்கது. எனவே தொல்காப்பியம் சுட்டுவதற்கிணங்க, தமிழகப் பகுதியாகவும் தமிழ்மக்கள் வாழ்ந்து வந்த பகுதியாகவும் வேங்கடம் வரையிலுமான பகுதிகள் இருந்துவந்ததை உறுதிப்படுத்தத்தக்க சான்றுகளாக இச்செய்திகள் அனைத்தையும் கொள்ளலாம்.

மேலும்,

> பனிபடு சோலை வேங்கடத்து உம்பர்
> மொழி பெயர் தேஎத்தராயினும் –அகம். 211: 7–8

> புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து
> நடையருங் கானம் விலங்கி நோன்சிலைத்

> தொடையமை பகழித் துவன்று நிலை வடுகர்
> பிழியார் மகிழர் கலிசிறந்தார்க்கும்
> மொழிபெயர் தேஎம் இறந்தனர் ஆயினும்
> –அகம். 295: 13–17

என்பன வேங்கடம் தாண்டிப் பிறமொழி பேசும் மக்கள் இருந்ததை உறுதிச் செய்யும் பாடல்கள். இவையும் இங்கு இணைத்து நோக்கத் தக்கன.

இத்தகைய வேங்கடம் வரையிலான அன்றைய தமிழகத்தின் பொது வரலாற்றில் காஞ்சியின் வரலாறும் இணைந்து பிணைந்து கிடப்பது தெளிவான ஒன்று. எனவே காஞ்சியும் தொன்று தொட்டுத் தமிழர் வாழ்ந்த பகுதியாக, தமிழர்களால் ஆளப்பட்டு வந்த பகுதியாக, தமிழகத்தின் பகுதியாக இருந்திருக்கிறது என்பது இங்குத் தெளிவுபடும் ஓர் உண்மை.

### 1.1 அருவாளர்

இவ்வாறு பழந்தமிழகத்தின் வடபகுதியை ஆட்சி செய்தோராக, வரலாற்றில் தெரியவரும் குறு நில மன்னர்களாகச் சங்க இலக்கியம் காட்டுபவர்களைக் கண்டோம். இவர்களுள் திரையர் குறித்த செய்திகள் ஓரளவிற்குக் கிடைக்கின்றன. பிறர் பற்றி நோக்கும்போது, அவர்கள் பெயர்கள், வேங்கடம் சார்ந்த பகுதிகளை ஆண்டு வந்த தன்மை போன்றன கிடைக்கின்றனவே தவிர, கச்சிக்கும், காஞ்சிக்கும் இவர்க்கும் தொடர்பு ஏதும் இருந்ததாகச் செய்தி எதுவும் கிடைக்கவில்லை. எனினும் இவர்களுள்ளும் அருவாளர் பற்றிய செய்திகள் சிறிது வேறுபடுகின்றன. ஒன்றிரண்டு செய்திகளே இவர்கள் தொடர்பாகக் கிடைத்தாலும் கிடைக்கும் செய்திகளின் தன்மை பலகாலம் இவர்கள் இப்பகுதியை முழுமையாக ஆண்டிருக்கக் கூடும் என்ற எண்ணத்தைத் தருகின்றன. செல்வாக்குப் பெற்ற ஓர் இனமாக இவர்கள் இருந்திருக்கக் கூடும் என்ற எண்ணத்தையும் இவை தருகின்றன. கொடுந்தமிழ் நிலம் பன்னிரண்டு என்பதைக் குறிக்கும் பாடலொன்றை இங்கு காணலாம்.[1]

> தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா, வேண், பூழி
> பன்றி அருவா அதன் வடக்கு– நன்றாய

---

1. நன்னூல் விருத்தியுரை, ப. 327.

*சீதம் மலாடு புனல்நாடு செந்தமிழ் சேர்*
*ஏதம் இல் பன்னிரு நாட்டு எண் (யா.கா. 57 உரை)*

இப்பாடலில் அருவா எனவும் அதன் வடக்கு (அருவாவடதலை நாடு என்பர்) எனவும் தமிழகத்தின் வடபகுதி குறிப்பிடப்படுகிறது. இப்பாடலை நோக்கும் போது அந்தந்த நிலங்களுக்கும் அவற்றிற்குரிய பெயர்களுக்கும் உள்ள தொடர்பு விளங்குகின்றமை போன்று அருவாநாடு என்ற பெயரும் அருவாளர் செல்வாக்கைத் தெளிவாகக் காட்டுகின்றமை புலப் படுகிறது. இந்த அருவாளரின் தொன்மை பட்டினப்பாலையில் 'தொல்லருவாளர்' (275) என வரும் சொல்லாட்சி மூலம் தெளிவு பெறுகிறது.

"அருவா நாட்டின் எல்லை காலந்தோறும் பெருகியும் சுருங்கியும் வேறுபடலாயிற்று. நன்னூலின் முதல் உரை ஆசிரியரான மயிலை நாதர் அருவா (அருவான் நாடு என்பது அவர் பாடம்) நாட்டைக் கொள்ளிடத்திற்கு வடக்கேயுள்ள தென்னாற்காடு மாவட்ட வடபகுதியைக் குறிப்பதாகக் கருதுகிறார். அதே ஆசிரியர் அருவா வடதலை நாடாகச் செங்கல்பட்டு மாவட்டப் பகுதியைக் குறிப்பிட்டுள்ளார். பேராசிரியர் பிடி. சீனிவாச ஐயங்கார் சோழநாட்டிற்கும் அருவா வடதலை நாட்டிற்கும் இடைப்பகுதியில் இருந்ததே அருவாநாடு என்கிறார். அவரும் தற்காலத்திய செங்கல்பட்டு மாவட்டத்தையே அருவா வடதலை நாடாகக் கொள்ளுகிறார். கல்வெட்டுச் சான்றுகளின் அடிப்படையில் சிதம்பரம் கடலூர் விருத்தாசலம் வட்டங்களும் விழுப்புரத்தின் தென்பகுதியும் அருவாநாட்டில் அடங்கியிருந்தன என்று டாக்டர் மா. இராச மாணிக்கனார் கணித்துள்ளார்".[2]

எனவே, தொண்டையர்/திரையர் செல்வாக்குக்கு முன்னர் அருவாளர் என்ற ஓர் இனத்தார் இப்பகுதி முழுமையும் ஆண்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது. மேலும், அருவாளர் வழங்கிய மொழியை அரவம் என்று சுட்டும் வழக்கினையும் இணைத்து நோக்கலாம். மேலும் "உருத்திரங்கண்ணனார் தாம்பாடிய 500 அடிகளையுடைய பெரும்பாணாற்றுப்படையுள்

---

2. தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் அரசியல், பக். 480,481.

ஓரிடத்தும் தொண்டைநாடு என்னும் பெயரைக் கூறவில்லை. பட்டினப் பாலையில் அருவாளர் (அருவா நாட்டினர்) என்று குறித்துள்ளார். தாலமி (கி.பி. 150) அந்த நாட்டினரை 'அரௌவரினாய்' (Arouarinoi) என்று கூறியுள்ளார். தெலுங்கர் இன்றும் தமிழரை 'அரவவாரு' என்றே கூறுகின்றனர். 'அருவா நாட்டினர்' என்பது இதன் பொருள். இதிலிருந்து தமிழ் மொழி தெலுங்கில் அரவம் எனப்பட்டது" என மா. இராசமாணிக்கனார் எழுதுகிறார்.[3] மயிலை சீனி வேங்கடசாமி, "அகத்தியருடன் வந்த அருவாளர் தொண்டைநாட்டில் குடியேறினார்கள். அவர்கள் குடியேறிய பிறகு தொண்டை நாட்டிற்கு அருவாநாடு என்று பெயர் உண்டாயிற்று. அருவாளரும் அக்காலத்தில் சமண மதத்தவராக இருந்தனர்" போன்ற செய்திகளைச் சொல்லும் தன்மையில்[4] அருவாளர் இப்பகுதியில் வாழ்ந்தமையை உறுதிப்படுத்துகிறார். இவர் அருவாளர் வடக்கிலிருந்து குடியேறியவர்கள் என்ற கருத்தினை ஏற்பவராகத் தெரிகிறது.

"அரவம் என்பதற்குரிய பல பொருள்களில் ஒலி, நாகம் என்பனவும் உண்டு. ஒலி என்ற பொருளில் தமிழ் அரவம் என்று வழங்கப்பட்டதா அல்லது நாகம் சார்புடையதா என்று நோக்கும் போது பிற்பட்டதற்குச் சிறப்பு மிகுகிறது. இப்பகுதிக்கும் நாகர்க்கும் தொடர்பு மிகுதியாக அமைகிறது. நாகர் வணக்கம் கொண்டவர்கள் அருவாளர்கள் என்ற நிலையில் அவர்கள் பேசிய மொழி அரவம் என்று வழங்கப்பட்டு அவர்கள் வாழ்ந்த பகுதி அருவா நாடு என்று சுட்டப்பட்டிருக்கலாம் என்பது ஓர் எண்ணம். சென்னை மாநகரப் பகுதி ஊர்ப்பெயர்கள் வழிக் காணக் கிடைக்கும் தொன்மையான ஊர்கள் மயிலாப்பூர், திருவான்மியூர், திருஒற்றியூர் போன்றன. மயிலாப்பூர் என்ற ஊர் மயில் காரணமாகப் பெயர் பெற்றது என்பது உறுதியானது. பிற இரண்டு ஊர்ப்பெயர்களின் ஆய்வு உறுதியான முடிவைத் தரவில்லை எனினும் இவை தரும் ஒரு காரணமாக அமைவது புற்று என்பது. புற்று காரணமாக, வான், ஒற்று என்ற புற்றின் பிற பெயர்கள் காரணமாக, இப்பெயர்கள் இவ்வூர்களுக்கு அமைந்திருக்கலாம் என்ற ஓர் எண்ணத்தை இப்பெயர்கள் தருகின்றன. இந்நிலை இரண்டையும் ஒப்பிட்டு எண்ணும்

3. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 291.
4. மயிலை சீனி வேங்கடசாமி, தமிழுக்கு வழங்கிய கொடை, ப.108; சங்க கால வரலாற்று ஆய்வுகள் II, ப. 79.

சிந்தனைக்கு நம்மை இட்டுச் செல்கிறது. .எனவே புற்றுகளின் மிகுதி நாகர் வணக்கத்தையும் மிகுதிப்படுத்தலுக்குரியதொரு காரணமாகக் கருதலாம். இப்பெயர்கள் தவிர, கோடம்பாக்கம் என்ற பெயரும் ஆய்வதற்குரியது. இப்பெயரின் தொன்மையும் பெயர்க் காரணமும் கூடத்தெளிவில்லை. இருப்பினும் கோடகன் என்ற பெயர் நாகத்திற்குரியது என்பதும் பாக்கம் என்ற ஊர்ப்பெயர்ப் பொதுக் கூறு பழமையான தொண்டைமண்டலப் பொதுக் கூறுகளில் ஒன்று என்பதும் இங்கு எண்ணத்தக்கது".[5]

"தொண்டை நாட்டின் தென்பகுதியில் ஒய்மான் நாடு என்னும் சிறுநாடு உள்ளது. தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள திண்டிவனம் வட்டமே பழைய ஒய்மான் நாடு என்பர். . . ஒய்மான் நாட்டினை ஒய்மான் நல்லியாதன் ஒய்மான் வில்லியாதன் என்னும் இரு அரசர்கள் ஒய்மான் நல்லியக் கோடனுக்கு முன்னர் இப்பகுதியை ஆட்சி புரிந்தனர். இந்த ஒவியக் குடி நாகர் இனத்தைச் சேர்ந்ததாகத் தோன்றுகிறது".[6]

இவ்வாறு தமிழகத்தின் வடபகுதிக்கும் அருவாளர்க்கும் இருந்த தொடர்பு பற்றிய பல செய்திகள் தெரிய வருகின்றன. இவை அருவாளர் ஆட்சியினுள் கச்சி, காஞ்சி இருந்தன என்பதைத் தெளிவு படுத்தினாலும், கச்சி அருவாளரின் தலைநகராக இருந்ததா இல்லையா என்ற கேள்விக்கு விடை கிடைக்கவில்லை. ஆயின் அன்றைய கச்சி பற்றிய சில சிந்தனைகள் கச்சியைத் தலைநகராகக் கொண்டு இவர்கள் ஆட்சி செய்திருக்கலாமோ என்ற எண்ணத்தைத் தருகின்றன.

திரையராகிய தொண்டையர் வேங்கடம் வரையிலும் பரவியிருந்தனர். இவர்களின் தலைநகராகக் கச்சி இருந்தது. கச்சி முதன் முதலில் நமக்கு அறிமுகமாகும் நிலையிலேயே மூதூராகவும் அதே நேரத்தில் தலை நகராகவும் காட்சி தருகிறது. இது திரையனின் தலைநகரமாகவே அறிமுகமாகிறது எனினும் திரையனால் அல்லது திரையர் இனத்தாரால் தலைநகராக உருவானதாக எங்கும் சான்றில்லை. எனவே பெரும் பாணாற்றுப்படை சுட்டும் திரையனுக்கு முன் அவன் இனம் சார்ந்த முன்னோன் ஒருவனால் இது தலைநகராகக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். இல்லையேல் திரையர்க்கு

---

5. சென்னை 1639-க்கு முன் பின், பக். 142, 143.
6. தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் அரசியல், பக். 477,478.

முன்னர் அருவாளர் ஆட்சியிலேயே இது தலைநகராகி, பின்னர் திரையனால் பெறப்பட்டிருக்க வேண்டும். எனினும் இதுவும் மேலும் ஆய்விற்குரிய ஓர் எண்ணமே. தன்னுடைய 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்' நூலில் வி. கனகசபையும் கச்சியை அருவாளர் தலைநகர் எனச் சுட்டுகின்றார்.[7] எனவே அருவாளர் குறித்தும் அவரது ஆட்சி குறித்தும் சான்றுகள் மேலும் கிடைக்கும் நிலையிலேயே அருவாளரின் கச்சி தொடர்பு குறித்த வரலாறும் தெளிவு பெறும்.

## 1.2 திரையர்

அருவாளர்க்குப்பின் இப்பகுதியில் செல்வாக்குப் பெற்ற இனத்தினராகத் தெரியவருபவர் திரையர். தொல்லருவாளர் என்ற குறிப்பும், அருவா நாடு என்ற பெயராட்சியின் பழமையும், பெரும்பாணாற்றுப்படை சுட்டும் திரையனுக்குச் சமகாலத்தினனான கரிகாலன் தொல்லருவாளரை அடக்கினான் என்ற செய்தியும், திரையனுக்குப் பின் அருவாளர் இப்பகுதியை ஆண்டதாகக் குறிப்பின்மையும், பின்னர் தொண்டை மண்டலம் என்று வழங்கப்பட்ட பெயராட்சியும் அருவாளர்க்குப் பின் செல்வாக்குப் பெற்ற இனத்தினர் திரையர் என்ற எண்ணத்திற்கு அரணாக அமைகின்றன. இத்தகைய திரையரின் வரலாற்றில் திரையன் என்ற மன்னன் கச்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்தான் என்பது அன்றைய கச்சியின் வரலாற்றில் தெளிவாகத் தெரியும் ஓர் உண்மை. கச்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர்கள் வரலாற்றில், முதலாவதாக, தெளிவானதாகத் தெரியவருவது இவன் வரலாறே. பத்துப்பாட்டுள் ஒன்றான பெரும்பாணாற்றுப்படை இதனைத் தெளிவாகத் தருகிறது.

கடியலூர் உருத்திரங் கண்ணனாரால் பாடப்பட்டது இந்த ஆற்றுப்படை நூல். திரையன் சிறப்பை விளக்கப்பாடப்பட்டதா? இல்லை, ஆற்றுப்படை இலக்கணத்திற்கு இலக்கியமாகப் பாடப்பட்டதா? என்ற கேள்விகளுக்கு விளக்கம் இங்குக் கிடைக்கவில்லை. புலவர் இப்பாடலில் வறுமையுற்றுக் காணப்படும் பெரும்பாணன் ஒருவனை, பரிசில் பெற்று வரும் பாணன் ஒருவன், திரையனிடம் பரிசில்பெற ஆற்றுப்படுத்துவதாகப் பாடலை யாத்துள்ளார். எனவே திரையன் இருக்குமிடத்திற்குச்

---

7. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், ப. 53.

செல்லும் வழியின் சிறப்பை, அவன் மூதூர் சிறப்பை, அங்கு அவன் இருக்குமிடத்தை, அதன் சிறப்பை, அதன் அமைப்பை, அவன் விருந்தோம்பும் பண்பையெல்லாம் தன் பாடலில் வெளிப்படுத்துகின்றார். இந்த இலக்கியப் படைப்பில் நமக்குக் கிடைக்கிறது திரையனின் வரலாறு; திரையனின் வீரம், கொடைப்பண்பு; தலைநகராகக் கச்சி திகழ்ந்த வரலாறு. இவ்வருணனை கச்சியின் பண்டைய வரலாற்றில் தெளிவாகத் தெரியும் ஒரு சிறு வெளிச்சம்.

இப்புலவருடைய நோக்கம் அன்றைய அரசியலையோ, நாட்டு வரலாற்றையோ எழுதுவதல்ல. பாணனுக்குத் திரையனின் இருப்பிடத்திற்குரிய வழி சொல்ல வேண்டும். வழியை விளக்கும் நிலையில் அக்கால மக்களின் வாழ்வியலை விளக்குகிறார். திரையனின் விருந்தோம்பும் பண்பைச் சொல்லப் புகும் தன்மையில் திரையனின் வரலாறு சார்ந்த சில செய்திகளும் விளக்கம் பெறுகின்றன. இச் செய்திகளில் கலந்து காணப்படும் வரலாற்றுக் கூறுகளே இங்கு நம் ஆய்வுக்குத் துணையாக அமைகின்றன. இவ்வாறு பெரும்பாணாற்றுப்படை தரும் திரையன் பற்றிய வரலாற்றுச் செய்திகளாக,

> ***கச்சியோன்*** –420
> *எனத் திரையன் சுட்டப்படும் தன்மை;*

> ***இரு நிலம் கடந்த திருமறுமார்பின்***
> ***முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்***
> ***திரைதரு மரபின் உரவோன் உம்பல்***
> ***மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கு***
> ***முரசுமுழங்கு தானை மூவருள்ளு***
> ***மிலங்கு நீர்ப்பரப்பின் வளைமீக் கூறும்***
> ***வலம்புரியன்ன வசை நீங்கு சிறப்பி***
> ***னல்லது கடிந்த அறம்புரிச் செங்கோற்***
> ***பல்வேற் றிரையன்*** –29–37

என இவனது மரபு, புகழ், செங்கோலாட்சி விளக்கப்படுகின்றமை;

> ***கேளவன் நிலையே கெடுகநின் அவலம்*** –38

என, அவனது ஆட்சியில் அவனை நாடிச் செல்லும் வழிகளும் துன்பம் தராதவை எனக் கூறத் தொடங்கி, வழிகள் சொல்லத் தொடங்குகின்றமை; இந்த வழிகளின் விவரிப்பில் இவர் சுட்டும்

ஊர்கள், மக்கள் வாழ்வியல், வணிகம், பாதுகாப்பு போன்ற அன்றைய தமிழகத்தின் வடபகுதிகளை நம் கண்முன் கொண்டு வருகின்றமை அமைகின்றன.

தவிர, கச்சியில் இவனைக் காணக் குழுமியிருக்கும் மக்களையும் திரையன்பரிசில் வழங்கும் அழகையும் வருணிக்கும் புலவர் இவனை,

> **உரவு வாட்டடக்கைக்**
> **கொண்டியுண்டித் தொண்டையோர் மருக**
> **மள்ளர் மள்ள மறவர் மறவ**
> **செல்வர் செல்வ செருமேம்படுந** —453–456

எனவும் காட்சிப்படுத்துகிறார். திரையராகிய தொண்டையோரின் வீரம் புலப்படுத்தப்படும் இவ்வடிகளில் திரையனுக்கு முன்னமேயே அவன் முன்னோர் பலர் இருந்தமையும் தெளிவுபடுகிறது.

இறுதியில்

> **செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்**
> **களிறுதரு விறகின் வேட்டு**
> **வொளிறிலங்கருவிய மலைகிழவோனே** —497–500

என, இவன் வேங்கடமலைக்குரியவன் என்பதும் காட்சிப் படுத்தப்படுகிறது.

இப்பாடலினின்றும் கச்சியை ஆண்ட திரையன் என்ற அரசன் பற்றித் தெரியவரும் செய்திகளாக,

1. திரையன் என்பது அரசனுடைய பெயர்
2. கச்சி இவனது தலைநகராக இருந்தது
3. தொண்டையோர் வழித் தோன்றல் இவன்
4. திரைதருமரபின் உரவோன் வழி வந்தவன்
5. புலவரைப் போற்றிக் காக்கும் புரவலன்
6. சேர, சோழ, பாண்டிய மன்னர் மூவரிலும் சிறந்தவன்
7. செங்கோல் ஆட்சி புரிந்தவன்
8. வேங்கடமலை வரையிலும் கச்சியிலிருந்து ஆண்டவன்

போன்றன அமைகின்றன.

பல்வேற் திரையனாகிய இவனைத் தவிர வென்வேற்றிரையன் என்றும் பொலம்பூண் திரையன் என்றும் திரையர் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுவதை நோக்க, இந்த அடைகள் உணர்த்துவது இந்தத் திரையனையா? அல்லது பிற திரையர்களையா? என்ற கேள்விகள் எழினும் விடை கிடைக்கவில்லை.

திரையன் என்ற பெயர் கொண்ட மன்னர் / மன்னர்கள் குறித்த செய்திகள் இவ்வாறு அமைய, நற்றிணையில் இளந்திரையனார் என்ற புலவர், இருபாடல்கள் பாடிய ஒருபுலவர் தெரிய வருகின்றார். தலைமகன் சிறைப்புறமாகத் தோழி தலைவிக்குரைத்தல் (நற்.94), தோழி பருவமன்று என்று வற்புறுத்தியது (நற்99) என்று அகப்பொருட்களைக் கொண்டு அமையும் அவர்பாடிய பாடல்கள் மூலம் திரையர் பற்றியோ இளந்திரையனார் பற்றியோ எதும் தெரியவில்லை.[8] ஆயின் இளந்திரையனார் என்ற புலவர் இருந்திருக்கிறார் என்பது புலப்படுகிறது. திரையனுக்கும் இளந்திரையனுக்கும் தொடர்பு

---

8. நோயலைக் கலங்கிய மதனழி பொழுதில்
காமஞ் செப்பல் ஆண்மகற்கு அமையும்
யானென் பெண்மை தட்ப நுண்ணிதில் தாங்கிக்
கைவல் கம்மியன் கவின் பெறகழாஅ
மண்ணாப் பசுமுத்து ஏய்ப்பக் குவியிணர்ப்
புன்னை அரும்பிய புலவுநீர்ச் சேர்ப்பன்
என்ன மகன்கொல் தோழி தன் வயின்
ஆர்வமுடையராகி
மார்பணங்கு உறுவோரை அறியாதோனே — நற். 94.

நீரற வறந்த நிரம்பா நீளிடைத்
துகில் விரித்து அன்ன வெயிலவிர் உருப்பின்
அஞ்சுவரப் பளிக்கும் வெஞ்சுரம் இறந்தோர்
தாம்வரத் தெளித்த பருவங் காண்வர
இதுவோ என்றிசின் மடந்தை மதியின்று
மறந்து கடல் முகந்த கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பெயல்
காரென்று அயர்ந்த உள்ளமொடு தேர்வில
பிடவுங் கொன்றையுங் கோடலும்
மடவ வாகலின் மலர்ந்தன பலவே — நற். 99

இருந்திருக்கலாம் என்ற உணர்வைத் தொண்டைமான் இளந்திரையன் என்ற இன்னொரு புலவர் பாடிய பாடல்கள் தருகின்றன. இவற்றுள் ஒரு பாடல் நற்றிணை 106ஆம் பாடல்.[9] தலைவன் தேர்ப்பாகனிடம் பேசுவதாக அமையும் பாடல் இது. இன்னொரு பாடல் புறம் 185 ஆம் பாடல். பொதுவாக அரசன் சிறப்பைச் சொல்லும் பாடல் இது.[10]

திரையன், இளந்திரையன், தொண்டைமான் இளந்திரையன் என்ற வேறுபட்ட பெயர்கள் மூலம் இவர்கள் தொடர்ந்து ஆட்சி செய்த வெவ்வேறு அரசர்களாக இருத்தல் கூடும் என்று எண்ண இடமுண்டு. தவிர, பல மன்னர்கள் புலவர்களாகவும் இருந்திருந்த நிலையைச் சங்கச் செய்யுட்களில் காண்கின்றோம். இந்நிலையில் இங்குத் தெரிய வரும் தொண்டைமான் இளந்திரையனும் அரசனாகவும் அதே நேரத்தில் புலவனாகவும் திகழ்ந்திருக்கலாம் என்பதற்கும் வாய்ப்பு இருக்கிறது.

திரையர் தொண்டையர் ஒரே இனத்தினர் என்பது இங்குத் தெளிவுபடும் ஒரு செய்தி. தொண்டையோர் மருக என்று இவன் குறிப்பிடப்படுவதும் தொண்டைமான் இளந்திரையன் என்ற பெயரும் நோக்கத் தக்கன. மேலும் அகம் 213 ஆம்பாடல் தொண்டையரின் வேங்கடம் காட்டுகிறது.

---

9. அறிதலும் அறிதியோ பாக பெருங்கடல்
எறிதிரை கொழீஇய எக்கர் வெறிகொள
ஆடுவரி அலவன் ஓடுவயின் ஆற்றாது
அசைஇயுள் ஒழிந்த வசைதீர் குறுமகட்கு
உயலினென் சென்றியான் உள்நோய் உரைப்ப
மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள் நறுமலர்
ஞாழல் அஞ்சினைத் தாழிணர்க் கொழுதி
முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்
அறிவஞர் உறுவி ஆய்மட நிலையே நற். 106

10. கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்
காவற் சாகாடு கைப்போன் மாணின்
ஊறின்றாகி யாறினது படுமே
உய்த்த றேற்றானாயின் வைகலும்
பகைக் கூள்ளற் பட்டு
மிகப் பஃறீ நோய் தலைத் தலை தருமே புறம். 185.

> **வினை நவில் யானை விறற்போர்த் தொண்டையோர்**
> **இன மழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு**
> **ஓங்கு வெள்ளருவி வேங்கடத் தும்பர் –1–3**

குறுந்தொகை 260 ஆம் பாடல் 'தொண்டையர் வழையமல் அடுக்கம்' என வேங்கடத்தைக் காட்டுகிறது. புறம் 95ஆம் பாடல் 'அவன், தூதுவிடத் தொண்டைமானுழைச் சென்ற ஔவைக்கு அவன் படைக்கலக் கொட்டில் காட்ட அவர் பாடியது' என்று அமைகிறது.

எனவே தொண்டையர் பலர் இருந்ததை இப்பாடல்களும் காட்டுகின்றன எனக் கொள்ளலாம். வீரமிக்கவன், வீரமற்றவன், புலமையுடையவன் எனப் பலதரப்பட்டோரைப் புலப்படுத்தும் இப்பாடல்கள் மூலம் கச்சியை வீரமுள்ள திரையன் தலைநகராகக் கொண்டு ஆண்டமை போன்று பின்னர் வீரமற்றவனும் ஆள, கச்சி பிறர் கைக்குச் செல்ல வாய்ப்பு ஏற்பட்டிருக்கலாம்; இந்நிலையில் கச்சியின் தலைநகர் என்ற சிறப்பும் மறையத் தொடங்கியிருக்கலாம் என்ற சிந்தனைகள் இங்குப் பெறப்படுகின்றன.

இந்நிலையில் அருவாளர்க்குப் பின் இப்பகுதி முழுவதையும் ஆட்சி புரிந்த ஓர் இனம் திரையர் இனம் / தொண்டையர் இனம் என்பது மேற்சுட்டப்பட்ட செய்திகள் வழித் தெளிவாக விளங்குகிறது. எனினும் இத்திரையர்கள் எவ்வாறு கச்சியை ஆளத் தொடங்கினர்? இவர்கள் தமிழரா? திரை தரு மரபு என்று இவர்கள் குறிப்பிடப்படக் காரணம் என்ன? இச் சொல்லுக்குரிய பொருள் என்ன? தவிர, திரையர் தொண்டையர் என்று அழைக்கப்படக் காரணம் என்ன? என்ற பல கேள்விகள் முடிவுகாண வேண்டிய கேள்விகளாகவே இன்னமும் காணக் கிடக்கின்றன.

திரையன் திரைதரு மரபு சார்ந்தவன் என்கிறது பெரும் பாணாற்றுப்படை. உருத்திரங் கண்ணனார்,

> **இருநிலங்கடந்த திருதருமார்பின்**
> **முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்**
> **திரை தரு மரபின் உரவோன் உம்பல் –29–31**

என, திரையனை அறிமுகம் செய்கிறார். இதற்கு உரை எழுதும் நச்சினார்க்கினியர், "பெரிய நிலத்தை அளந்த திருவாகிய மறுவை

யணிந்த மார்பினையுடைய கடல் போலும் நிறத்தையுடையவன் பின்னிடத்தோனாகிய சோழன் குடியிற் பிறந்தோன் அக்கடலின் திரை கொண்டு ஏறவிட்ட மரபாற் பல வேற்படையினையுடைய திரையனென்னும் பெயரையுடையவன் என்றதனால் நாகப் பட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தாற் நாகலோகத்தே சென்று நாககன்னியைப் புணர்ந்த காலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என் செய்வேன் என்ற பொழுது தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாக்கிக் கொடுப்பல் என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரைதருதலின் திரையன் என்னும் பெயர் பெற்ற கதை கூறினார்" என்று இதற்கு விளக்கம் தருகிறார்.[11]

'கதை கூறினார்' என்று இயம்பும் தன்மையில் நச்சினார்க்கினியர் தனக்கு முன்பே மக்களிடம் காணப்பட்ட ஒரு கதையைத் தான் கூறுகிறார் என்பது இங்குத் தெளிவாகப் புலப்படுகிறது.

எனவே இவர், இச் செய்தியை நம்பியுரைத்தார் எனக் கொள்ள இயலவில்லை. இவருடைய விளக்கத்தின் மூலமாக நமக்கு உறுதிப்படும் ஒரு கருத்து, திரை தருதலின் திரையன் என்பது தொடர்பாக ஒரு கதை மக்களிடம் அவருக்கு முன்னரேயே வழங்கி வந்துள்ளது என்பதுதான். எனவே இக்கதையையும் பாடலையும் மீண்டும் நோக்கலாம்.

> **முந்நீர் வண்ணன் பிறங்கடை அந்நீர்த்**
> **திரை தரு மரபின் திரையன்**

என்ற பாடலடிகளில் சோழன் என்ற குறிப்பில்லை. இந்த அடிக்குத் திரைதரு மரபு சார்ந்த உரவோனின் வழி வந்தவன் என்பதே நேரடிப் பொருள். திருமாலின் வழி வந்த சோழன்குடி என சோழர் குடி எவ்வாறு இணைந்தது என்பதும் கேள்விக்குரியது. எனவே திரையனின் மரபாகிய திரைதருமரபு குறித்து மேலும் ஆராயவேண்டும். இந்நிலையில் பெரும்பாணாற்றுப்படைக்கு நச்சினார்க்கினியரின் உரையைத் தொடர்ந்து காணப்படும் வெண்பா ஒன்று இங்குச் சுட்டத்தக்கது.

> **கங்குலு நண்பகலுந் துஞ்சா வியல்பிற்றாய்**
> **மங்குல்சூழ் மாக்கடலார்ப்பதூஉம்–வெஞ்சினவேற்**

---

11. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக். 213, 214.

*கான் பயந்த கண்ணிக் கடுமான்திரையனை*
*யான் பயந்தே னென்னும் செருக்கு*[12]

இந்த வெண்பாவும் கடல் தந்தவன் என்று மட்டுமே திரையனைச் சுட்டுகின்றதே தவிர, திருமால் தொடர்போ சோழன் தொடர்போ இங்குச் சுட்டப்படவில்லை. எனவே திரையனுக்கும் கடலுக்கும் ஏதோ ஓர் தொடர்பு இருந்திருக்கிறது என்பதை மட்டும் இப்பாடல் தரும் கருத்தாகக் கொள்ளலாம்.

பெரும்பாணாற்றுப்படைக்குப் பின்னர் எழுந்த பெருங்காப்பியமான மணிமேகலையில் இக்கதைத் தொடர்பான மற்றுமோர் வடிவம் கிடைக்கிறது.

*நாகநாடு நடுக்கின்று ஆள்பவன்*
*வாகை வேலோன் வளைவணன் தேவி*
*வாசமயிலை வயிற்றுட் டோன்றிய*
*பீலிவளை யென்போள் பிறந்த வந்நாள்*
*இரவி குலத்தொருவன் இணை முலைதோயக்*
*கருவொடு வருமெனக் கணியெடுத்துரைத்தனன்*
*ஆங்கப் புதல்வன் வரூஉ மல்லது*
*பூங்கொடி வாராள் புலம்பல் இது கேள்*
*தீவகச் சாந்தி செய்யா நாளுன்*
*காவன் மாநகர் கடல்வயிறு புகூஉம்*
*மணிமேகலை தன்வாய்மொழி யாலது*
*தணியாது இந்திர சாபம் உண்டாகலின்*
*ஆங்குப்பதி அழிதலும் ஈங்குப் பதிகெடுதலும்*
*வேந்தரை அட்டோய் மெய்யெனக் கொண்டிக்*
*காசின் மாநகர் கடல்வயிறு புகாமல்*
*வாசவன் விழாக்கோள் மறவேல்* —மணி.24:54-69

*மடவரல் நல்லாய் நின்றன் மாநகர்*
*கடல்வயிறு புக்கது காரணங் கேளாய்*
*நாகநன்னாடு ஆள்வோன் தன்மகள்*
*பீலிவளை என்பாள் பெண்டிரின் மிக்கோள்*
*பனிப்பகை வானவன் வழியிற் றோன்றிய*
*புனிற்றிளங் குழவியொடு பூங்கொடிப் பொருந்தியித்*
*தீவகம் வலஞ்செய்து தேவர் கோனிட்ட*

---

*12. மேலது, ப. 262.*

மாபெரும் பீடிகை வலங் கொண்டேத்துழிக்
கம்பளச் செட்டி கலம்வந்திறுப்ப
அங்கவன் பாற்சென்று அவன் திறமறிந்து
கொற்றவன் மகனிவன் கொள்கெனக் கொடுத்தலும்
பெற்றவுவகையன் பெருமகிழ்வெய்திப்
பழுதில் காட்சிப் பைந்தொடி புதல்வனைத்
தொழுதனன் வாங்கித் துறைபிறக்கொழியக்
கலங்கொண்டு பெயர்ந்த வன்றே காரிருள்
இலங்கு நீர் அடைகரைஅக்கலங்கெட்டது
கெடுகலமாக்கள் புதல்வனைக் கெடுத்தது
வடிவேற்கிள்ளி மன்னனுக்கு உரைப்ப
மன்னவன் மகனுக்கு உற்றது பொறாஅன்
நன்மணி யிழந்த நாகம் போன்று
கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி
வானவன் விழாக் கோள் மாநகரொழிந்தது
மணிமேகலா தெய்வம் மற்றது பொறாஅள்
அணிநகர் தன்னை அலைகடல் கொள்கென
விட்டனள் சாபம் பட்டதிதுவால்
கடவுண் மாநகர் கடல்கொளப் பெயர்ந்த
வடிவேற் றடக்கை வானவன் போல
விரிதிரைவந்து வியனகர் விழுங்க
ஒருதனி போயினன் உலக மன்னவன்

—மணி. 25: 176—204

வென்வேற் கிள்ளிக்கு நாகநாடாள்வோன்
தன் மகள் பீலிவளை தான்பயந்த
புனிற்றிளங் குழவியைத் தீவகம் பொருந்தித்
தனிக்கலக் கம்பளச் செட்டிக் கைத்தரலும்
வணங்கிக் கொண்டவன் வங்கமேற்றிக்
கொணர்ந்திடு மந்நாள் கூரிருளியாமத்
தடைகரைக் கணித்தா வம்பி கெடுதலும்

—மணி. 29: 3—9

இக்கதையின் ஒரு பகுதியாக வரும் சோழர் நாக இளவரசி மணம் சோழர் வரலாற்றில் பிற்கால இலக்கியங்களிலும் பயிற்சி பெறுகிறதைத் தருகிறார் மா. இராசமாணிக்கனார்.[13]

13. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 284,285.

*தளவழிக்குநகை வேல்விழி பிலத்தின் வழியே*
*தனி நடந்துரகர் தங்கண்மணி கொண்ட அவனும்*
*–கலிங்.கண்ணி. 195*

*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . ஆங்குப்*
*பிலமதனிற் புக்குத் தன் பேரொளியாற் நாகர்*
*குலமகளைக் கைப்பிடித்த கோ –விக்கிரமச். 9–10*
*பணம் புணர்ந்த மோலியான் கோமகளைப்பண்டு*
*மணம் புணர்ந்த கிள்ளி வளவன் –குலோத். 19*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . தரையின்*
*பெருமகளைத் தீவேட்டபின்னரும் சேடன்*
*திருமகளைக் கல்யாணம் செய்தோன் –இராசராச. 16*

இந்நிலையில் நச்சினார்க்கினியர் கூறும் கதை, மணிமேகலை இரண்டும் சோழன் நாக இளவரசி மணம், பிறந்த குழந்தை பற்றிய செய்திகளில் ஒன்றுபடுகின்றனவே தவிர, பிற பல செய்திகளில் மாறுபடுகின்றன. திரையனைத்திருமால் பின்னிடத்தோன், திரைதருமரபின் உரவோன் உம்பல் என்று மட்டும் உருத்திரங்கண்ணனார் தருகின்றார். நச்சினார்க்கினியர் திருமாலின் பின்னிடத்தோனாகிய சோழன் குடியிற் பிறந்தோன், நாகப்பட்டினத்துச் சோழன் என, கதைகள் இருப்பதாகக் காட்டுவார். மணிமேகலை சூரிய குலத்தோனாகிய சோழன் என, நெடுமுடிக்கிள்ளி, வடிவேற் கிள்ளி, வென்வேற் கிள்ளி என அச்சோழன் பெயர்களையும் தருகிறது. திருமாலின் மரபு என்பதும் மாற்றம் பெறுகிறது. சூரியகுலம் எனச் சுட்டப்படுகிறது. கதையில் நாககன்னிகை, காப்பியத்தில் பீலிவளை என்ற பெயரால் சுட்டப்படுகிறாள். கதையில் புதல்வன் உயிரோடு இருக்கிறான். அவனே திரையன் மரபு முதல்வன் எனச் சுட்டப்படுகின்றான். ஆயின் காப்பியத்தில் குழந்தை இறந்து விடுகிறது. இத்தகைய பல வேறுபாடுகள் காணப்படும் நிலையில், இரண்டு கதைகளுமே பொருத்தமில்லாத நிலையில், முரண்படும் நிலையில், இச்செய்திகளும் ஐயத்திற்குரியனவாகின்றன. பெரும்பாணாற்றுப் படையின் காலமுதன்மையில், 'திரைதருமரபின்' என்ற தொடரின் பொருளைப் புரிந்து கொள்ள முனைந்ததில் ஏற்பட்ட இடர்ப்பாடே இந்தக் கதைகளின் பிறப்புக்குக் காரணமாக அமையலாமோ என்ற எண்ணம் எழுகிறது அல்லது ஏற்கெனவே வழங்கி வந்த இந்தக் கதை பின்னர் புலவர்களாலும் உரையாசிரியர்களாலும் பலவிதமாகக் கொள்ளப்பட்டிருக்கலாம்.

'மணிமேகலையில் அரசர்கள்' என்ற தம் கட்டுரையில், சுப.இராமநாதன் இச்செய்திகளை வரலாறாகக் கொள்ளல் கூடாது என்கிறார்.

"இப்பாட்டில் வரும் சில அடிகள் (பெரும்பாண் 30-37) இத்திரையனுடைய பிறப்பினைக் கூறுகின்றவையாக அப்பாட்டின் உரையாசிரியர் நச்சினார்க்கினியர் குறிப்பிடுகின்றார். உரையாசிரியர் கூறும் நிகழ்ச்சியும் சாத்தனார் கூறும் நிகழ்ச்சியும் ஒன்றெனக்கொள்வர். கதையின் நிகழ்ச்சிகளில் சிறிய வேறுபாடு காணப்படுகிறது. உரையில் நாகநாட்டரசன், நாககன்னிகை ஆகியோருடைய பெயர்கள் கூறப் பெறவில்லை. மேகலையில் பீலிவளையின் மகன் பெயர்கூறப் பெறவில்லை. இதுபோன்ற வேறுபாடு இருப்பினும் சோழன் ஒருவன் நாக கன்னிகையை மணந்ததும் அவள் பிரிந்து சென்றதும் குழந்தை பிறந்ததும் பின்னர் அக்குழந்தை சோணாடு வந்ததும் பொது செய்திகள். இருவரும் ஒரு காதலனையே குறிப் பிடுகிறார்களென்றால் இளந்திரையன் ஆட்சியில் இருந்த பொழுது செழிப்புடன் இருந்ததாக உருத்திரங்கண்ணனார் கூற, திரையன் சிறுவனாயிருந்த பொழுதே அவன் காரணமாகப்புகார் அழிந்ததாகச் சாத்தனார் கூறுவது முரணான செய்தியாகும்.

இளந்திரையன் காலத்தில் புகார் இருந்தது என்பதில் ஐயமில்லை. ஏனென்றால் பட்டினப்பாலையின் ஆசிரியரும் பெரும்பாணாற்றுப் படையின் ஆசிரியரும் ஒருவராவார். புகார் நகரம் சிறந்த காலத்தில் வாழ்ந்த இளந்திரையனும் அதன் அழிவுக் காலத்தில் வாழ்ந்த பீலிவளையின் மகனும் வேறாவார் என்று கொள்ளவேண்டும். மேலும் பீலிவளையின் மகனும் பெரும்பாணாற்றுப் படையின் தலைவனும் ஒருவன் எனக் கொண்டால் சங்க காலத்திற்கு வந்துவிடும், பீலிவளை மகனுடைய காலம். கதை நிகழ்ந்த காலத்து வாழ்ந்ததாகக் கருதப்படும் சாத்தனாரும் சங்க காலத்துப் புலவராவார். மேகலையும் சங்ககால நூலாகும். யாவரும் மேகலையினைப் பிற்காலச் சான்றோர் நூலென்றே கூறுகின்றனர். பெரும்பாணாற்றுப்படைத் தலைவனையும் பீலிவளையின் மகனையும் வேறாகக் கொண்டால் இரண்டு கதைகளிலும் உள்ள நிகழ்ச்சி ஒற்றுமைக்கு விளக்கம் கொடுக்க வேண்டி வரும்.

இனி, காரியாறு என்னுமிடத்தில் நடைபெற்ற ஒரு சண்டையினைப் பற்றி மேகலை கூறுகின்றது (மேகலை 19: 119-127).

இவைகளுக்கு ந.மு. வேங்கடசாமிநாட்டார் அவர்கள், 'கிள்ளிவளவன் பகைவனாகிய காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளியையும் அவனுக்கு வந்தெதிர்ந்த சேர பாண்டியர்களையும் தன் தம்பியாகிய நலங்கிள்ளியால் காரியாறு என்னும் ஆற்றின் பாங்கர் வென்றனனென்க' என்று உரைக் குறிப்பு எழுதியுள்ளார்கள். உரையாசிரியர் கூறுகின்ற நலங்கிள்ளி நெடுங்கிள்ளி யென்போரெல்லாம் சங்க காலத்தில் வாழ்ந்தவர்கள். அக்காலத்தில் வாழ்ந்தவர்களை மேகலையில் தொடர்பு படுத்தினால் இந்நூலைச் சங்ககால நூலாகக் கொள்ள நேரிடும். இந்நூல் பிற்காலச் சான்றோர் செய்யுள் என எல்லோரும் குறிப்பிடுகின்ற கருத்தோடு மாறுபட்டதாகும். அங்ஙனம் கொள்வது சங்க கால அரசர்கள் சண்டையாகக் கொள்ள வேண்டும். அக்காலத்து இம்மூன்று குடியினரும் போர் செய்யும் சூழ்நிலையிருந்ததா என்ற ஐயம் எழுகின்றது. அதனால் சாத்தனார் முற்காலத்தில் வாழ்ந்த அரசர்களையும் அவர்கள் பற்றிய செய்திகளையும் தன் நூலில் குறிப்பிட்டிருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. . . . மேற்கூறிய சிலவற்றால் மேகலையில் வரும் அரசர்கள் பெயர்கள் வருகின்றமை கொண்டு அந்நூலுக்கு வரலாற்று முதன்மை கொடுக்கக் கூடாது என்பதும் பெறப்படலாம்"[14]

மா.இராசமாணிக்கனாரும் இக்கதைக்கும் திரையர்க்கும் தொடர்பு இல்லை என்கிறார்.[15] எனவே இச்செய்திகள் அனைத்தையும் ஆராயும்போது, சில எண்ணங்கள் புலப்படுகின்றன.

மரபு கூறும்போது இறைவனோடும் சூரிய சந்திரர்களோடும் தொடர்புபடுத்துவது தமிழரிடம் காணப்படும் ஓர் இயல்பு. சோழரின் மரபு சிவனோடும்[16] சூரியனோடும் திருமாலோடும் தொடர்புபடுத்தப்படுகிறது. இவ்வாறு மரபு கூறுவது பெருமை கருதியே தவிர, வரலாறன்று என்று கொள்ளும் நிலையிலேயே பெரும்பாணாற்றுப்படை கூறும் முந்நீர்வண்ணன் பிறங்கடை அந்நீர்த்திரைதருமரபின் உரவோன் என்ற அடிகளையும் எண்ணல் வேண்டும்.

---

14. மணிமேகலைச் சிந்தனைகள், ப. 36

15. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 284.

16. சங்க காலச் சோழ வேந்தர்கள், ப. xxiv.

புகார் அழிவு என்பதும் இயற்கை நிகழ்வில் கடலருகில் உள்ள ஊர்களுக்கு ஏற்படுவது போன்ற சிறுபகுதி அழிவு தானே தவிர, பிற அன்று. கடல் உள் வாங்கிக் கொள்ளலும், ஊர்கள் கடலுக்குள் செல்லலும் கடல் கொள்ளல், கடல்கோள் என்ற பெயர்களால் வழங்கப்படுதல் உண்டு. தவிர, பூம்புகார் 7ஆம் நூற்றாண்டில் இருந்தது என்ற செய்தியும் இங்கு இணைத்து நோக்கத்தக்கது.[17] எனவே இக்கதையை நோக்க, சோழர் வரலாற்றில் சோழன் ஒருவனுக்கும் ஒரு நாகர் மகளுக்கும் இடையே நிகழ்ந்த ஒரு மண உறவு உண்மையாக நிகழ்ந்த ஒருநிகழ்வாகலாம். இதுவே பின்னர் பல இடைச் செருகல்களுடன் இக்கதையாக வழங்கப்படத் தொடங்கியிருக்கலாம் என்று தோன்றுகிறது. மேலும் இந்தப் புனைவையும் சங்க காலத்திற்குப் பின்னர், மணிமேகலை காலத்திற்கு முன்னர் அல்லது அவர்கள் காலத்தில் எழுந்த ஒரு புனைவாகவே கருதுதல் இயலுகிறது. ஏனெனில் பெரும்பாணாற்றுப்படையில் அல்லது சங்க காலப்பாக்களில் சோழர் குறித்துப் பல செய்திகள் காணப்படுகின்றன எனினும் இச்செய்தி பற்றி அங்குக் குறிப்புகள் எதுவும் காணப்படவில்லை. தவிர, சோழ நாட்டு மன்னன், பூம்புகார் அழிவு போன்றவற்றிற்கும் திரையர் கச்சியில் அல்லது தொண்டைநாட்டில் ஆட்சி செய்தமைக்கும் பொருத்தமும் காண இயலவில்லை. எனவே திரையர் மரபிற்கு அளிக்கப்படும் இக்காரணம் கற்பனையாக இருத்தலுக்கே வாய்ப்பு மிகுதியாக அமைகிறதே தவிர வரலாற்றுக்குப் பொருத்தமாக இல்லை.

திரையர் குறித்த இக்கதையை மறுக்கும் வரலாற்றாசிரியர்கள் கடியலூர் உருத்திரங்கண்ணனார் சுட்டும் இந்தத் திரைதரு மரபிற்கு வேறு காரணங்கள் காட்டுகின்றனர். ரா.இராகவையங்கார் முன்னர்ச்சுட்டிய கதையை மறுத்தாலும் இவர் சுட்டும் இன்னொரு காரணமும் இன்னொரு புராணச் சார்பாகத் தான் அமைகிறதே தவிர இதுவும் வரலாற்று உண்மையாகத் தெரியவில்லை.

"இதனால் அந்நீர்த் திரைதரு மரபு என்பது கடலலை தரப்பட்ட குலம் என்பதாகும். இவ்வாறு ஓர் குலம் இந்நாவலந் தீவில் வழங்கப்படுதல் 'அப்ஸரஸ்' (கடலான் உண்டாக்கப்பட்ட

---

17. சோழர் வரலாறு, ப. 105.

தேவ கணிகையர் என்பது பொருள்) குலவழக்கால் அறியலாம். இவருண்டான வரலாறு வான்மீகம் பாலகாண்டம் 46ஆம் ஸர்க்கத்து 34 முதல் 37 வரையில் உள்ள சுலோகங்களிற் காண்க. இத்திரைதரு மரபின் உரவோன் என்றது இப்பல்லவ சாசனங்கள் பலவற்றில் தங்குல மன்னன் வரிசையிற் காணப்பட்ட துரோணனையும் அவ்வழியில் அசுவத்தாமன் மகனாகிய பல்லவனையும் குறிப்பது என்று துணியப்படுவது'' என்று எழுதுகிறார்.[18]

மா. இராசமாணிக்கனார் கடல்தரு மரபு என்பதற்குக் கலிங்க மரபு என விளக்கம் அளிக்கிறார்.

"கி.மு. 176-163இல் வாழ்ந்த காரவேலனின் கல்வெட்டு ஹாதி கும்பா கல்வெட்டு குறிப்பிடும் செய்தியான 'தனக்குமுன்பு 113 ஆண்டுகள் வரை இருந்து வந்த தமிழரசர் கூட்டணி தனது நாட்டிற்குத் தீமையாயிருந்தமையின் அதனை அழித்தான்' என்ற செய்தியினைக் கொண்டு காரவேலன் ஆட்சியில் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்றியதன் விளைவாக, காரவேலன் தொண்டை நாட்டை ஆளக் கலிங்க வீரர் அல்லது ஒருவனை அனுப்பியிருக்கலாம். அவன் கடல்வழியே தன் பரிவாரங்களுடன் வந்திருத்தல் கூடும். அவ்வனம் திரை வழி வந்தவன் திரையன் என்று பெயர் பெற்றிருக்கலாம். இவ்வாறு திரைதர வந்த உரவோன் வழித் தோன்றலே பெரும்பாணாற்றுப்படைக்குரிய திரையனாதல் கூடும். முதலில் பவத்திரியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டபின்னர் காஞ்சி அவரின் தலைநகராயிருத்தல் கூடும்" என, பல கருத்துக்களைக் கூறி இறுதியில், "திரையர் கலிங்கராயிருத்தல் வேண்டும் என்பது எனது கருத்தன்று. அவர்கள் கலிங்கராய் இருக்கலாம் என்னும் அளவே நான் கூறுவது. திரையர் என்பவர் திரை தர வந்தவர் என்று பெரும்பாணாற்றுப்படை தெளிவாகக் கூறியுள்ளது. கலிங்கர் திரை கடலோடி நாடு கண்டு குடியேறியவர்; இலங்கையிலும் மலேசியாவிலும் ஆட்சியை நிறுவியவர். மேலும் காரவேலன் தமிழரசரை வென்றான் என்பது வெளிப்படை. திரையர் தமிழர் தாம் என்று உறுதி கூறச் சான்றில்லை. இவை அனைத்தையும் சேர்த்துக் காண்கையில் திரையர் கடல்வழியாக வந்த கலிங்கராகலாம் என்று கருத இடமுண்டாகிறது. திரையர்

---

18. பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், பக். 18,19.

இன்னவர் என்பதற்குரிய சான்றுகள் கிடைக்கும் வரையில் திரையர் என்ற தொண்டைமான்கள் காரவேலர் காலத்தில் திரைவழி வந்த கலிங்கராகலாம் என்று கொள்வது ஒருவாறு பொருத்தமாகும்"[19] என்று முடிவு செய்கிறார்.

ரா.இராகவையங்காரின் கருத்து மற்றொரு புராணச் சார்புடன் அமைகிறது என்ற நிலையில் அதனை விடுத்து, மா. இராசமாணிக்கனாரின் கருத்தைக் காணும்போது அதுவும் பல கேள்விகளுக்குரியதாகவே அமைகிறது.

மா.இராசமாணிக்கனார் கருத்திற்கு இணங்க, திரையன் காரவேலன் அனுப்பியவனாக இருக்கலாம் என்பது உண்மையெனில் அவன் பெயர் ஏன் எங்கும் குறிப்பிடப் படவில்லை. 'கலிங்கத்தில் உள்ள சிங்கபுரத்தை அமைத்தவன் சிம்மபாகு என்பவன். அவன் மகன் தன் வீரருடன் கடல்வழிச் சென்று இலங்கையில் அரசினை அமைத்தான். அவனே விஜயபாகு என்பவன். அவனே இன்றுள்ள சிங்களவர் குலமுதல்வன் என்று இலங்கை வரலாறு இயம்புகிறது. தருமாசோகன் என்ற அரசகுமாரன் முப்பதாயிரவருடன் நரவாடியிலிருந்து குடியிருப்புக்கேற்ற நாட்டை நோக்கிக் கடல்வழி வந்தான்; கிருஷ்ணையாற்றங்கரையில் நாக அரசனைச் சந்தித்தான். அங்கு ஒரு சைத்தியம் கட்டுவித்தான்[20] என மா.இராசமாணிக்கனார் சுட்டும் பிறர், பெயர் சுட்டிக் குறிப்பிடப்பட, ஏன் கலிங்க நாட்டிலிருந்து இங்கு வந்தவனுக்குப் பெயர் இல்லை அல்லது பெயர் குறிப்பிடப்படவில்லை என்பது ஒரு கேள்வி.

காரவேலன் அனுப்பியவன் எனினும் அன்று இத்திரையர், தொண்டையர் குறித்துச் சுட்டப்படும் பல பாடல்களில் எவையேனும் ஒன்றிலாவது அவர்தம் வரலாறு குறித்து எந்த ஒரு குறிப்பேனும் கிடைக்க வில்லையே அதற்கு என்ன காரணம்? அவர்களின் ஏதாவது ஒரு எச்சம் தமிழ் மண்ணில் கலந்திருக்குமே எந்த ஒன்றுமே தெரியவில்லையே ஏன்? என்பது இன்னொரு கேள்வி.

திரையர் தமிழர் தாம் என்று உறுதி கூறச் சான்றில்லை என்கிறார் இவர்.[21] ஆயின் தமிழர் இல்லை எனக் கூறுவதற்குரிய

---

19. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 306-11.
20. மேலது, ப. 309. 21. மேலது, ப. 311.

சான்று என்ன? என்ற கேள்வி எழும் அதே நேரத்தில் இவர்கள் பற்றிய பல செய்திகள் இவர்கள் தமிழர் என்று கூறுவதற்கே சான்றாக அமைவதை இவர்தம் வரலாறு காட்டுகிறது.

திரை என்பது தமிழ்ச் சொல். சங்கப்பாக்களில் மிகுந்த பயிற்சி பெற்ற ஒரு சொல். மக்களிடம் வழக்கில் இச்சொல் காணப்பட்டமையைப் பல பயிற்சிகள் தெளிவாகக் காட்டுகின்றன. தொண்டை என்பதும் தமிழ்ச் சொல். தாவரச் சொல். தவிர, திரையர் தமிழ் மண்ணை ஆண்டு வந்த நிலை, பல புலவர்களாலும் பாடப்பட்ட நிலை, தமிழ்ப்பா இயற்றும் அளவிற்கு, தமிழ் மரபிற்கு ஏற்ப பாக்கள் புனையும் அளவிற்குப் புலமை பெற்றிருந்த நிலை, தமிழ் நாட்டின் பிற மன்னர்கள் போன்று புரவலராகத் திகழ்ந்த நிலை, புலவர்களை ஆதரித்த நிலை போன்றன இவர்களைத் தமிழராகக்காட்டுகின்றதே தவிர, பிறநாட்டினர் என்று சுட்டுவதற்குச் சான்றாக இல்லை. எனவே கலிங்கர் என்ற சிந்தனையும் வலிவு பெறாத நிலையில் திரையர் யார் என்பது குறித்து மேலும் ஆராயப்புகலாம்.

பிடி. சீனிவாச ஐயங்கார், 'காஞ்சிபுரம் தமிழ் அரசர்களால் ஆளப்படவில்லை ஆரிய ராஜாக்களால் தான் ஆளப்பட்டு வந்தது' என்பதைக் கச்சியின் வரலாற்றில் இயம்பும் போது திரையன் பற்றியும் கூறுகிறார். இந்த அரசனை அவர் அரசனாகவே கருதவில்லை என்ற கருத்தில் இளந்திரையன், எந்தப் போர்க்கள வெற்றியாலும் புகழ் பெற்றவனல்லன்; அவன் வீரம் மிகைப்படுத்தப்பட்ட வெறும் புகழ் உரைகளாகக் கூறப்பட்டுள்ளனவேயல்லாது குறிப்பிட்ட போர்க்களத்தில் பெற்ற எந்த ஒரு வெற்றியோ, பிறநாடுகளைக் கைக் கொண்ட எந்த ஒரு வெற்றியோ அவனுக்கு உரியதாகக் கூறப்படவில்லை. இளந்திரையன் காஞ்சி நாட்டை ஆண்டு கொண்டிருந்த காலம் எவ்வித வரலாற்று முக்கியத்துவமும் வாய்ந்ததாகத் தெரியவில்லை" என்று எழுதுகிறார்.[22] காஞ்சிபுரம் தமிழ் அரசர்களால் ஆளப்படவில்லை என்று முதலில் சொன்ன பிடி. சீனிவாச ஐயங்கார் பின்னர் திரையன் ஆண்டதை ஒத்துக்கொள்கிறார். தவிர, இவன் தமிழ் மன்னன் என்பதும் இவர் கருத்தில் தெளிவுபடுகிறது. மேலும் திரையன் பற்றிய கதையையும் மணிமேகலை கதையையும் நம்புதற்கியலாதன எனக் கூறும் இவர்

---

22. தமிழர் வரலாறு II, பக். 102, 103.

திரையன் மரபாக," 'திரையன்' என்ற சொல் 'கடல்' 'அலை' எனப்பொருள் படும் 'திரை' என்ற சொல்லில் இருந்து மட்டுமே பெறப்படுமாகவே,. . . 'ஒரு கடலோடி'; 'கடற்கரை நிலத்தைச் சேர்ந்த இனத்தவன்' அவ்வினத் தலைவன் என்று மட்டுமே பொருள்படும். திரையர் என்பார் பெரும்பாலும் இன்று செங்கல்பட்டு பகுதியில் பண்டு வாழ்ந்திருந்த பழங்குடியினராவார்" என்பார்.[23]

டி.வி. மகாலிங்கம், கருத்தும் கடல் சார்பானதுதான்.[24] இவருடைய கருத்தும், பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்தும் திரையர், தமிழர் என்பதில் ஒன்றுபடுகின்றன. இக்கருத்தே அன்றைய சூழலுக்கும் பொருத்தமானதாக அமைகிறது. திரையர் கடல் சார்ந்த ஓர் இனத்தினர் என்பது இயல்பாகப் பொருந்துகிறது. திரை தரு மரபின் உரவோன் உம்பல் என்பதற்குப் பொருள் கொள்ளும் போது, கடல் சார்ந்த ஓர் இனத்தாரின் வலிமை வாய்ந்த ஒருவனின் வழி வந்தவர் திரையர் இனத்தினர் என்பது தெளிவாக விளங்குகிறது. தமிழகத்தில் மக்கள் தாம் வசித்த நிலத்திற்கு ஏற்ப பெயர் பெறும் தன்மையைப் பண்டைய மக்களின் வரலாற்றில் காண்கிறோம். இவ்வாறு கடல் சார்ந்த பகுதிகளில் வசித்த மக்கள், கடல் சார்ந்த வாழ்க்கையை மேற்கொண்ட மக்கள் பரதவர், செம்படவர், மீனவர் எனப்பல பெயர்களைக் கொண்டு திகழ்ந்தமையும் திகழ்கின்றமையும் இன்று வரையிலும் காணக்கூடிய ஒன்று. இவர்கள் கொண்டிருந்த இன்னொரு பெயரே திரையர் என்பதுவாகும்.[25]

---

23. மேலது, பக். 104,105.

24. "The name Tiraiyan may be taken to mean a seaman, one belonging to a maritime tribe etc. The explanation of Naccinarkkiniyar that Ilantiraiyan was an illegitimate son of a Chola king and a Naga princess is patently absurd. Nor it is possible to believe that he was connected with the . . . Ilantiraiyan as suggested by his very name and the Perumpanarruppatai was evidently a patron of Tamil and could not have a pallava at any rate" - Kanchipuram in the early South Indian history, p. 16.

25. திரையர் பரதவர் செம்படவர் மீனவர்
கடலர் திமிலர் சலவர் நுளையர் வலையர்
(பிங்கல நிகண்டு 1 அவனிவகை).

எனவே இவற்றையெல்லாம் கொண்டு நோக்க, அருவாளர்க்குப் பின் தொண்டை நாட்டைச் சிறப்புடன் ஆண்ட ஓர் இனத்தினர் திரையர்; தொண்டையர் என்றும் அழைக்கப்பட்ட இனத்தினர் என்பதும், இவர்கள் தம் கடல் சார் தொழில் காரணமாக இப்பெயர் பெற்றனர் என்பதுமே பொருத்தமாக அமைகின்றன என்பன இங்குத் தெளிவு பெறும் கருத்துகள்.

திரையர் தொண்டையர் எனவும் வழங்கப்பட்டனர் என்பது சங்கப்பாக்கள் புலப்படுத்தும் செய்தி. பெரும் பாணாற்றுப்படையும் திரையனைத் 'தொண்டையோர் மருக' எனச் சுட்டுகிறது. இந்தத் தொண்டையோர் மருக என்ற சொல்லாட்சியும் தொண்டையோர் வழித் தோன்றல் என்ற இதற்குரிய பொருளும், தொண்டைமான் இளந்திரையன் என, திரையன் ஒருவன் குறிப்பிடப்படுவதும், வேங்கடத்தின் உரிமையாளர்களாக இருவரும் காட்டப்படுதலும் போன்ற பலசான்றுகள் இதனையுறுதிப்படுத்துகின்றன. எனவே அருவாளார்க்குப்பின் இப்பகுதியில் செல்வாக்குப் பெற்ற திரையர்களின் இன்னொரு பெயரான தொண்டையர் பெயரால் இப்பகுதி அழைக்கப்படத் தொடங்கியது என்பது இந்தச் செய்திகளின் மூலம் தெரியவரும் உண்மை. இந்தப்பெயரை இப்பகுதி எப்போது பெற்றது என்பது பற்றி ஆராயும்போது சோழநாட்டுக்கு வடக்கேயுள்ள பகுதியைத் தொண்டை நாடு என்று குறிப்பிடுவது தேவாரகாலம் முதற் கொண்டு இருந்து வரும் மரபுஎன்னும் அறிஞர்கள் கருத்திற்கிணங்க, திரையர்க்குப்பின் தான் இதற்கு இப்பெயர் வழங்கப்பட்டது என்பதை, 'தமிழ் நாட்டு வரலாறு-சங்ககாலம் அரசியல்' நூலும் தெளிவுபடுத்துகிறது.

"பத்துப்பாட்டில் பெரும்பாணாற்றுப் படையைப் பாடியவர் உருத்திரங் கண்ணனார். அவர் தொண்டையர் குலத்தலைவனான தொண்டைமானைப் பற்றி நயமிகு சொற் சித்திரம் தீட்டியுள்ளார். அப்பாட்டில் தொண்டை நாடு என்னும் பெயரை அவர் குறிப்பிடவே இல்லை. அவர் பத்துப்பாட்டில் பட்டினப்பாலை என்னும் மற்றொரு பாட்டையும் பாடியுள்ளார். அதிலும் இப்பெயரை அவர் யாண்டும் வழங்கவில்லை. இந்தப் பகுதியில் ஆதிக்கம் பெற்று விளங்கிய அருவாளரைத் தொல்லருவாளர் தொழில்கேட்ப என, பட்டினப்பாலையில்

அவர் சுட்டுகிறார். தாலமி இந்நாட்டினைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது 'அருவர்னாய்' என்று சுட்டியுள்ளார். இதற்கு அருவா நாட்டைச் சேர்ந்த மக்கள் என்பது பொருளாகும். தாலமியின் நிலவியல் நூல் கி.பி. 140 அளவில் தொகுக்கப் பட்டதாகும்."[26]

இந்நிலையில் திரையர்க்குப் பின்னரேயே இது தொண்டை மண்டலம் என குறிப்பிடப்படத் தொடங்கியுள்ளது தெரிகிறது. தொண்டை மண்டலம் தொண்டையர் தொடர்பானது என்பது தெளிவாக அமையினும் இப்பெயர் தொடர்பாகவும் அறிஞர்களிடம் வேறுபட்ட கருத்துகள் காணப்படுகின்றன.

"நெடுங்காலத்திற்கு முன் தொண்டைநாடு குறும்பர் நிலம் என்று பெயர் பெற்றிருந்தது. குறும்பர் தம் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டு அங்குக் காலம் கழித்தனர். அவர்களே தங்கள் நாட்டை 24 கோட்டங்களாக வகுத்தனர். காவிரிப்பூம் பட்டினத்து வணிகருடன் கடல் வாணிபம் நடத்தினர். பிற்காலத்தில் ஆ தொண்டை சக்கரவர்த்தி என்பவர் இக்குறும்பரை வென்று குறும்பர் நாட்டைக் கவர்ந்து அதற்குத் தொண்டை மண்டலம் எனப் பெயரிட்டனன் என்று செவிவழிச் செய்தி கூறுகின்றது" என்பது ஓர் விளக்கம்[27] "ஆனால் தமிழ் நூல்கள் கரிகாற் சோழன் அந்நாட்டைக் கைப்பற்றினான் என்றும் பின்னர் தொண்டைக் கொடியால் சுற்றப்பட்டுக் கடல் வழியே வந்த நாகர்மகள் மகனான இளந்திரையன் ஆண்டதால் தொண்டை மண்டலம் எனப்பெயர் பெற்றது என்றும் கூறுகின்றன"[28]

திரையன் நாகர் மகள் தொடர்பான கதையே கற்பனை என்ற நிலையில் இது சார்ந்த கருத்துகளின் உண்மைத்தன்மையும் ஆராயத்தக்கதே. எனினும் இங்கு ஓர் உண்மை புலப்படுகிறது. ஆ தொண்ட சக்கரவர்த்தி தொண்டை மண்டலம் என்று பெயரிட்டான்; தொண்டைக் கொடியால் சுற்றப்பட்டு வந்த திரையன் காரணம் என்பன ஏற்க இயலாத காரணங்கள் எனினும்

---

26. தமிழ் நாட்டு வரலாறு, சங்ககாலம் அரசியல், ப. 480.

27. பல்லவர் வரலாறு, பக். 4,5. 28. பல்லவர் வரலாறு, ப. 5.

திரையராகிய தொண்டையர் காரணமாக இப்பெயர் பெற்றது என்ற அடிக்கருத்தே இவ்வாறு பல புனைந்துரைகளாக உருவெடுத்திருக்கின்றன என்று கருதுதலுக்கு இச் செய்திகள் வாய்ப்பளிக்கின்றன. இந்நிலையில் திரையர் தொண்டையர் என அழைக்கப்பட்டதற்குரிய காரணம் எதுவாக இருக்கக் கூடும் என்பதை நோக்கலாம்.

பி.டி.சீனிவாச ஐயங்கார் "தொண்டையர் என்ற சொல் தொண்டை என்ற ஒரு செடிப் பெயரிலிருந்து பெறப்பட்டதாம். ஆகவே தொண்டையர் என்பார் தொண்டைக் கொடியைத் தங்கள் நிகழ்ச்சியின் போது அதை அடையாள மாலையாக அணியும் அரச இனத்தினர் அல்லது பழங்குடியினரைக் குறிப்பதாகும். தொண்டையர் திரையர் என்ற இரண்டுமே ஒரே இனத்தினரைக் குறிக்க வழங்கப்படுதலின் திரையர் என்ற இனத்தவர் தங்கள் சின்னமாகத் தொண்டையைக் கொண்டார் எனக் கொள்ளலாம்" என்பர்.[29]

'பத்துப்பாட்டு ஆராய்ச்சி'யில் மா.இராசமாணிக்கனாரும் தொண்டை மலர் தான் காரணம் என்பதைத் தெளிவுபடுத்துகிறார்.[30] "தொண்டைக் கொடி மிக்கிருந்த நாடு தொண்டைநாடு எனப்பட்டது. இந்நாட்டை ஆளத் தொடங்கிய மன்னரும் இந்நாட்டிற் சிறந்து விளங்கிய தொண்டை மலர்களால் ஆகிய மாலையை அணியத் தொடங்கினர் என்னலாம். இங்ஙனமே தொண்டை நாட்டை ஆளத் தொடங்கிய திரையர் தொண்டை மாலையைத் தமக்குரிய அடையாள மாலையாகக் கொண்டிருக்கலாம். அதனாலே தான் திரையர்க்குப்பின்பு அந்நாட்டையாண்ட பல்லவரும் தொண்டை மலர் மாலையைத் தம் அடையாள மாலையாக அணிந்து வந்தனர் என்னலாம்."

எனவே இவையனைத்தையும் கருத்தில் கொண்டு நோக்க, தொண்டை என்ற கொடியின் அல்லது மலரின் பெயர் அதன் மிகுதி பற்றி ஒரு நாட்டைக் குறித்தது. பின்னர் அந்நாட்டை ஆண்டவரைக் குறித்தது. பின்பு அந்நாட்டுக் குடிமக்களையும் குறிக்கலாயிற்று என்பதை விடவும் திரையரின் அடையாள மாலையாகத் திகழ்ந்தது தொண்டை மாலை. இதனால் அவர்கள்

29. தமிழர் வரலாறு II, ப. 105.

30. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 290-292.

தொண்டையர் எனப்பட்டனர். தொண்டையர் ஆட்சி காரணமாகத் தொண்டை மண்டலம் என்ற பெயர் பெற்றது என்ற காரணம் இயல்பாகப் பொருந்தக் கூடிய ஒன்றாக அமைகிறதைக் கருதிப்பார்க்கலாம்.

அருவாளர்க்குப்பின்னர் இப்பகுதியைச் செல்வாக்குடன் ஆண்டவர் திரையர் என்ற இனத்தார். இவர்கள் குறுநில மன்னர்கள். அக்காலத்து மரபுப்படி, பேரரசர், சிற்றரசருக்கு என சில விதிமுறைகள் இருந்தன.

பேரரசர்கள்

> **படையும் கொடியும் குடையும் முரசும்**
> **நடைநவில் புரவியும் களிறும் தேரும்**
> **தாரும் முடியும் நேர்வன பிறவும்**
> **தெரிவு கொள் செங்கோல் அரசர்க்குரிய –தொல். 1571**

என்ற மரபு கொண்டு விளங்க,

> **வில்லும் வேலும் கழலும் கண்ணியும்**
> **தாரும் மாலையும் தேரும் வாளும்**
> **மன்பெறு மரபின் ஏனோர்க்குமுரிய –தொல். 1583**

என்ற நிலையில் சிற்றரசர்க்குத் தார் இருந்தது தெரிகிறது. மேலும் அன்று,

> **போந்தை வேம்பே ஆர் என வரூஉம்**
> **மாபெருந் தானையர் மலைந்த பூவும்**
> **–தொல். 1006. 4–5**

என மூவேந்தர் பூ சுட்டப்பட்டது. சிற்றரசர்களுக்குரியபூ சுட்டப்படவில்லை. எனினும் தார் அணியும் மரபுடன் திகழ்ந்த இவர்க்கென்றும் தனிப்பூக்களை இவர்கள் கொண்டிருந்திருப்பர் என்பது இங்குப் பெறப்படுகிறது. இந்நிலையில் திரையர்களும், பிற சிற்றரசர் அணிந்த பூக்களைப் போன்று, தம் பகுதியில் கிடைத்த மிகுதி அல்லது சிறப்புடைய மலரான தொண்டைமலரைத் தமக்குரிய தாராகக் கொண்டனர் எனக் கொள்ள இடமுண்டு. இவ்வாறு இவர்கள் தொண்டை மலர் அணியும் தன்மையால் இவர்கள் தொண்டையர் எனவழங்கப்பட்டனர். இதன் தொடர்ச்சி காரணமாக, பின்னர் இப்பகுதியை ஆண்ட பல்லவரும் இத்தொண்டை மாலையை அணியத் தொடங்க, 'தொண்டை யந்தார் வேந்தர்' என்று

குறிப்பிடப்பட்டனர்; இதுவே தொண்டை மண்டலம் என்ற பெயருக்கும் காரணமாயிற்று எனச் சொல்லலாம்.

இவ்வாறு திரையர் எனவும் தொண்டையர் எனவும் வழங்கப்பட்ட திரையர்களின் ஆட்சி காலம் பற்றியும், ஆட்சி முறைபற்றியும் தெளிவாகத் தெரியவில்லை. ஆயினும், உருத்திரங்கண்ணனார் காட்டும் திரையன் மக்களைப் பேணிய விதம், தம்மை நாடியோரை வரவேற்று ஓம்பிய விதம், அவனது வீரம், அவன் நாட்டில் பல சமயங்களும் காணப்பட்ட விதம், கச்சி மூதூர் புகழுடன் காணப்பட்ட விதம் அனைத்தும் திரையரின் நல்லாட்சியைப் புலப்படுத்துவனவாகவே உள்ளன.

### 1. 3. சோழர்கள்

"நமக்குக் கிடைத்துள்ள சங்கச் செய்யுட்களைக் கொண்டு சோழர் அரச மரபினர் எனக் கூறலாமேயன்றி 'இவர்க்குப் பின் இவர் பட்டம் பெற்றனர்' என்று, தக்க சான்றுகளுடன் கூறத் தக்க வழியில்லை. சங்கச் செய்யுட்களைப் பல பட ஆராய்ந்து அரசர் முறைவைப்பை அரும்பாடு பட்டு அமைக்க முயன்ற பலர் செய்துள்ள பிழைகள் பல ஆகும். ஆதலின் முடியாத இந்த வேலையை மேற்கொண்டு இடர் உறாமல் நன்றாகத் தெரிந்தவரைப் பற்றி மட்டும் விளக்கமாகக் கூறி, பிறரைச் சங்கச் செய்யுட்கள் கூறுமாறு கூறிச் 'சங்ககாலச்சோழர் வரலாற்றை' ஒருவாறு எழுதி முடித்த நாட்டார் அவர்களும் பேராசிரியர் நீல கண்ட சாஸ்திரியார் அவர்களும் நமது பாராட்டுக்குரியாரே ஆவர். தக்க சான்றுகள் கிடைக்கும் வரை இப்பேரறிஞர் கொண்டுள்ள முறையே சிறந்ததாகும் என்பது சாத்திரீய ஆராய்ச்சி உணர்வுடையார்க்கு ஒப்ப முடிந்த ஒன்றாகும்" என மா. இராசமாணிக்கனார் தம் 'சோழர் வரலாறு' நூலில் உரைக்கிறார்.[31] சங்க காலச் சோழர்களின் வரலாற்றைத் தெளிவாக அறிந்து கொள்ள முனைந்த நிலையில், மா. இராசமாணிக்கனார் இவ்வாறு கூறுதல், சோழர் வரலாற்றில் காணப்படும் தெளிவின்மையைத் தெளிவாக்கும். சங்கச் சோழர் காஞ்சித் தொடர்பும் இதனுள் அடங்கும். அன்றைய காஞ்சி வரலாற்றில் சோழர்களின் இடம் என்ற வரலாற்று ஆய்வுக்கு, கரிகாலன் காஞ்சி தொடர்பான செய்திகளும், மணிமேகலையில் சுட்டப்படும் சோழர் குறிப்பும், முத்தொள்ளாயிரம் பாடல்

---

31. சோழர் வரலாறு, பக். 22,23.

ஒன்றும், பல்லவர் செப்பேடு தரும் சோழர் பற்றிய குறிப்புமே அடிப்படையாக அமைகின்றன. எனினும் இந்த வரலாறுகளும் ஐயத்திற்கு அப்பாற்பட்டனவாக இல்லை. பல கேள்விகளை எழுப்புவனவாகவே இவையுள்ளன. காஞ்சியுடன் அன்று சோழ அரசர்க்குத் தொடர்பு இருந்திருக்கிறது என்ற ஒரே ஓர் உண்மையைத் தவிர, அவர்கள் ஆட்சி, ஆட்சிபுரிந்த தன்மை என்பன குறித்து எந்த ஒரு தெளிவையுமே பெறமுடியவில்லை. எனினும் கிடைக்கும் செய்திகளினின்றும் உண்மை காண விழைதல் என்பது ஆய்வாளரின் கடமை என்ற நிலையில், இது குறித்து அறிஞர் இதுவரை வெளியிட்ட செய்திகளின் மேனின்று அன்றைய காஞ்சிக்கும் சோழர்க்கும் இருந்த தொடர்பு காணும் முயற்சி இங்கு மேற்கொள்ளப்படுகிறது.

### 1.3.1 கரிகாலன்

"சங்க கால இலக்கியத்தின் துணை கொண்டே அக்காலத் தமிழரசர்களின் வரலாற்றை ஆய்ந்து காண வேண்டியிருத்தலில் அச்செய்யுள்களுக்கு அவரவர் கொள்ளும் பொருளுக்கு ஏற்ப கருத்து வேறுபாடுகள் ஏற்படுகின்றன. பாடல்களில் காணும் துணுக்குகள் கொண்டு மன்னர்கள் காலத்தைத் திட்டப்படுத்த இயலாது. கருத்து வேறுபாடுகட்கு இடமான அரசர்களில் கரிகாற் சோழனே முதலிடம் பெறுகின்றான்" என கே.கே. பிள்ளை தன்னுடைய 'சோழர் வரலாறு' நூலில் எழுதுகிறார்.[32] கரிகாலனுக்கும் காஞ்சிக்கும் உரைக்கப்படும் தொடர்பும் இத்தகையதே. சங்ககால இலக்கியம் மட்டுமன்று, பிற்கால இலக்கியங்கள், பிறபகுதிச்சான்றுகள் கரிகாலன் பற்றியியம்புகின்றன என்று அறிஞர் பலர் எடுத்துக்காட்டுகின்றனர். எனினும் மேலே குறிப்பிட்ட கே.கேபிள்ளையின் கருத்தே இங்கும் பொருந்துகிறது.

கரிகாலன் சிறந்த பேரரசன். தமிழகம் முழுவதும் இவன் வீரம் உணரப்பட்டு இருந்தது என்பதில் எந்த வரலாற்று ஆசிரியருக்கும் அறிஞர்கட்கும் கருத்துமாறுபாடு இல்லை. ஆயின் இவன் காஞ்சியை வென்றான்; ஆண்டான்; பொன் வேய்ந்தான் என்ற கருத்துகளில் எந்த அளவிற்கு உண்மையிருக்கிறது என்பது ஒரு கேள்விக்குரிய வினாவாகவே காணப்படுகிறது. தொடர்பு உண்டு என்போர் உண்டு. தொடர்பில்லை என்போர் உண்டு. இதற்குக் காரணம் கரிகாலனின் காலம் தெளிவின்மை;கரிகாலன்

---

32. சோழர் வரலாறு, ப. 24.

ஒருவரா? இருவரா? மூவரா? என்பதில் உள்ள சிக்கல், கரிகாலன் பற்றிப் பேசப்படும் செய்திகளில் பொருள் புரிவதில் உள்ள சிக்கல்; கரிகாலன் பற்றிய செய்திகளுள் எவை உண்மை எவை கற்பனை என்பதில் உள்ள சிக்கல் எனப்பல சிக்கல்கள். இதனால் அறிஞர்களிடமும் வேறுபட்ட கருத்துகள் மலிந்து காணப்படுகின்றன.

தனது 'சோழன் கரிகாலன் (55 கி.பி.-95 கி.பி.) கட்டுரையில்',[33] சதாசிவப் பண்டாரத்தார், கச்சியை இவன் வென்றான் என்றுரைக்கவில்லை. வடபுலத்தரசர்களை வென்றான் எனக் குறிப்பிடுகிறார். தன்னுடைய 'சோழர் குடி' கட்டுரையிலும்[34] 'பண்டைக் காலத்து இவர்களது தலைமை நகரங்கள் உறையூரும் காவிரிப் பூம்பட்டினமுமாயிருந்தன. பின்னர் தஞ்சையும் கங்கை கொண்ட சோழபுரமும் காஞ்சியும் தலைமை நகரங்களாயின' எனச் சுட்டும் நிலையில் காஞ்சி கரிகாலன் தலைநகராக இருந்தது என்ற எண்ணம் அவரிடம் இல்லாதது தெரிகிறது.

கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார் தம்முடைய 'சோழர்கள்', 'தென்னிந்திய வரலாறு' நூல்களில் கரிகாலன் பற்றி எழுதுகிறார்.[35] சங்க காலச் செய்திகள் கரிகாலன் குறித்துச் சொல்லும் செய்திகள் இவனைச் சிறந்த அரசனாகக் காட்டினாலும் பிற்காலத்தில் இவன் குறித்து எழுந்தன பல கதைகள். இவற்றை நம்புவதற்கில்லை

---

33. செந்தமிழ்த் தொகுதி, 12, பகுதி-2.
34. மேலது, 13, பகுதி-5.
35. சங்ககாலச் சோழர்களில் கரிகாலனுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை. பழங்காலம் தொட்டே கரிகாலனைப்பற்றிப் பல புராணக் கதைகள் உருவாகி, தற்போது இக்கதையே வரலாறாகப் பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. தமிழ்நாட்டில் முடியுடைவேந்தர் வடநாட்டு ஆரிய மன்னர்களை எதிர்த்து வெற்றி பெற்றனர் என்று கூறும் சிலப்பதிகாரம் கரிகாலனின் வடநாட்டுப் படையெடுப்பைப் பலபடப் பாராட்டுகிறது. இப் படையெடுப்பில் கரிகாலன் இமயம் வரைச் சென்றதோடு வச்சிரம் மகதம் அவந்தி போன்ற சில நாடுகளை வென்றோ அல்லது உடன்பாடோ அவன் செய்து கொண்டான். காவிரியாற்றின் கரைகளை அவன் உயர்த்திக் கட்டினான் என்பதை ஏழாம் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த தெலுங்கு சோ(ட)ழ மன்னர் புண்ணிய

என்று இவர் கருதுகிறார். கரிகாலனின் அரசு காவிரி நாட்டிற்கு அப்பால் நெடுந்தூரம் பரவியதாகத் தெரியவில்லை என்பது இவரது கருத்து.

பி.டி. சீனிவாச ஐயங்கார் வடநாட்டுப் படையெடுப்பு போன்றவற்றை ஏற்காவிட்டாலும், காஞ்சியை வென்றான் என்பதையும், அதற்கு அப்பால் இருந்த குறும்பரைப் பேணினான் என்பதையும் காஞ்சிக்குப் பொன் வேய்ந்தான் என்பதையும் ஏற்கிறார்.[36]

---

குமரனின் மலேபாடு பட்டயங்களில் முதன்முறையாகக் காண்கிறோம். இம்மாதிரியான புராணக் கதைகளை மற்றமன்னர்களுடனும் தொடர்பு படுத்தி மேலும் பல கதைகள் உருவாயின. . சோழ அரியணைக்கு உரியவனைத் தேர்ந்தெடுக்கும் பொருட்டுக் கழுமலத்தில் கட்டவிழ்த்து விடப்பட்ட பட்டத்து யானை கரூரில் இருந்த கரிகாலனைப் பதவிக்குத் தேர்ந்தெடுத்தது, காஞ்சியை இவன் வெற்றி கொண்டது, தொண்டை மண்டலத்தில் வேளிரைக் குடியேற்றியது போன்ற மரபுக் கதைகள் இவனது ஆட்சிக்காலத்தைப் பற்றிக் கூறும் பழமையான சான்றுகளில் இடம் பெறவில்லை. இவனது காலத்தில் தொண்டை மண்டலம் தொண்டைமான் இளந்திரையன் ஆட்சியின் கீழ் இருந்ததாகத் தெரிகிறது. இவ்விளந்திரையன் கரிகாலனின் பேரன் என்றோ அல்லது காஞ்சியைக் கைப்பற்றிய பிறகு தொண்டை மண்டலத்தில் தனது பிரதிநிதியாகக் கரிகாலன் அமர்த்தினான் என்றோ கூறுவதற்கான ஆதரங்கள் மனநிறைவு அளிப்பனவாக இல்லை - சோழர்கள், ப.49-50; அவன் கரிகாலனுடைய உறவினன் என்றும் சோழ அரசுக்கு அடங்கிய சிற்றரசன் என்றும் நினைப்பதற்கேற்ற ஆதாரம் எதுவும் எந்த நூலிலும் இல்லை - தென்னிந்திய வரலாறு 199-200; பிற்காலத்தில் கரிகாலன் பெயரை மையமாகக் கொண்ட பல மரபு வழிக் கதைகளும் கட்டுக்கதைகளும் தோன்றின - ப. 199.

36. இவ்விரு நாடுகளையும் வெற்றி கொண்டு விடவே கரிகாலன் வடவர்களை அதாவது காஞ்சி ராஜாக்களாம் பல்லவர்களைப் பணி கொண்டான். அவன் மேலும் படையெடுத்துச் சென்று கடப்பை, கர்நூல் மாவட்டங்களை ஆண்டு கொண்டிருந்த பொதுவர் குலத் தலைவர்களைத் தன்

கே.கே. பிள்ளை, 'சோழர் வரலாற்றி'ல் கரிகாலன் குறித்த செய்திகளைச் சொன்னாலும் கரிகாலன் காஞ்சி தொடர்பாக எதுவும் முடிவு தெரிவிக்கவில்லை.[37]

---

ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்தான். பொதுவர் என்ற சொல் ஆயர் தலைவன் என்னும் பொருள் உடைத்து. ஆகவே அது பல்லவ நாட்டின் மருத நிலப்பகுதிக்கு வடக்கில் உள்ள முல்லை நாட்டுப் பழங்குடியினர் தலைவர்களைக் குறிப்பதாகும். கரிகாலனால் தன் ஆட்சிக் கீழ்க்கொண்டு வரப்பட்ட அவ்வாயர்கள் அம் மாவட்டங்களில் இன்றும் வாழ்ந்து அப்பகுதியில் புகழ் பெற்ற கம்பளி நெய்யும் குறும்பராவர். பெரும் புகழ்க்குரியவனும் வெல்லும் போர் வல்லவனுமாகிய கரிகாலன் குன்றுகளில் ஆனிரை மேய்க்கும் குறும்பர் குடியைப் பேணிக் காத்தான்.

**குறும்பறை பயிற்றும்**
**செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால்**
**வெல்போர்ச் சோழன்** —அகம் 141:21–23

இப்பாட்டிலிருந்து உய்த்துணரப்படும், கரிகாலன் ஆட்சி வடக்கே கடப்பை, கர்நூல் மாவட்டங்கள் வரையும் பரவியிருந்தது என்ற உண்மையை உறுதி செய்வதற்கு எண்ணற்ற கல்வெட்டுச் சான்றுகளும் உள. அவை தனியே ஆராயப்படும்- தமிழர் வரலாறு பக். 15-16.

தெலுங்கு சோட ஆவணங்களின்படி, காவிரியை இருகரைகளுக்குள்ளே அடக்கியதோடு கரிகாலன் காஞ்சியிலிருந்தும் ஆட்சிபுரிந்தான்... திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அவன் காஞ்சிக்குப் பொன் வேய்ந்தான் எனக் குறிப்பிடுகின்றன (காஞ்சியஸ்க நவீசம்காரகனகைஹ்) இதற்கு அவ்விடத்துக் கோயில் கோபுரத்தைப் பொன் தகடுகளாற் மூடினான் என்பதே பெரும்பாலும் பொருளாகும். இக்கோயில் தென்னிந்தியாவில் ஆகமவழிக் கடவுள்களுக்குக் கட்டப்பட்ட கோயில்களில் முதல் கோயில் ஆதல் கூடும். ...காஞ்சிபுரத்தில் எண்ணற்ற கோயில்கள் விஷ்ணுவுக்கு... பெரும்பாலும் சிவனுக்கும் கூட கட்டப்படும் அளவு காஞ்சீபுரமாவட்டம் அப்பழைய பல்லவர் காலத்திலேயே ஆரியமயமாக்கப் படுவது தெளிவுறத் தெரியுமளவு முழுமை பெற்று விட்டது. கரிகாலன் பொன் வேய்ந்த கோயில் சிவன் கோயிலா விஷ்ணு கோயிலா என்பதை உறுதி செய்ய எந்த வழியும் இல்லை -தமிழர் வரலாறு- ப. 37-38.

37. உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலையிற் கூறுகிறபடி இவன் அருவாளர் வடவர் குடவர் தென்னவன் முதலாயினோரை

மா. இராசமாணிக்கனார், 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி', 'சோழர் வரலாறு', 'பல்லவர் வரலாறு' மூன்று நூல்களிலும் கரிகாலன் பற்றி ஆராய்கிறார். இவர் கரிகாலனின் வடபுல வெற்றியை ஏற்கிறார். கரிகாலன் தொடர்பாக இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகளை ஆதாரங்களாக ஏற்கும் நிலையில் இவரது ஆய்வு அமைகிறது. இந்நிலையில் காஞ்சித் தொடர்பும் இவரால் சுட்டப்படுகிறது.[38]

---

வெற்றிக் கொண்டதாகத் தெரிகிறது. இவை பிறபாடல்களாற் உறுதிச் செய்யப்படவில்லை என்பது சிந்தித்தற்குரியது... உண்மையில் கரிகாலன் வெண்ணியிலும் வாகைப் பறந்தலையிலும் வெற்றி கண்டபின் தொண்டை நாட்டை வென்றிருக்கலாம். அதற்குப் பின் வடநாடுகளுக்குப் படையெடுத்துச் சென்றிருக்கலாம் எனத் தோன்றுகிறது. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், செங்குட்டுவன் வடநாட்டில் வெற்றி பெற்றதாக அறிகின்றோம். இவையெல்லாம் வெறும் கதையென கூறுவதற்கில்லை. ஆனால் கரிகாலன் புகழ்பெற்று,' பல யாகங்கள் செய்து புலவர்களுக்கு நன்கொடைகள் அளித்து, காவிரிக்குக் கரை அமைத்து அணைகட்டிப் புகழ் எய்திய போது பற்பலக் கட்டுக் கதைகள் அவனைப்பற்றித் தோன்றின என்பதை மறுப்பதற்கில்லை. ஆயினும் துருவி ஆராய்ந்தால் கரிகாலன் ஒருவனே என்றும் அவன் மிகச் சிறந்த வெற்றிகள் பெற்றுப் புகழ் அடைந்தான் என்பதும் துலங்கும்- சோழர் வரலாறு, ப. 26-27.

38. அருவா நாட்டிற்கு வடபாற்பட்டது அருவா வடதலைநாடு. அதனை ஆண்ட சிற்றரசரை (வடவரை) கரிகாலன் வென்றான். பிற்காலத் தெலுங்குச் சோழர் கல்வெட்டுகள் கரிகாலன் காஞ்சியை ஆண்டதாகக் கூறுகின்றன. முதலாம் இராசேந்திரனுடைய திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கரிகாலன் காஞ்சியைப் பொன் மயமாக்கினான் என்று கூறுகின்றன. அருவா வடதலை நாட்டை வென்ற கரிகாலன் அதன் தலைநகரான காஞ்சி மாநகரத்தை விரிவாக்கி யிருக்கலாம். அங்கு இருந்த கோயிலின் விமானத்தைப் பொன் வேய்ந்திருக்கலாம். இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் (கி.பி. 1133-1150) செய்யப்பட்ட பெரிய புராணத்தில் வரலாற்று அறிஞரான சேக்கிழார் கரிகாலன் காஞ்சியைப் புதுக்கினான்; குடிகளை நிலை பெறச்செய்தான் (திருக்குறிப்புத் தொண்டர்புராணம், செ.85) என்று கூறியுள்ளார்- பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 245.

புலவர் கோவிந்தனும் கரிகாலன் வடபுல வெற்றியை ஏற்கிறார். காரணமாக மு.இராகவையங்காரின் கருத்தைக் காட்டுகிறார்.[39]

டி.வி. மகாலிங்கம், அறிஞர்கள் கருத்தையெல்லாம் இயம்பி, கரிகாலன் வடக்கில் காவிரிப் பூம்பட்டினத்திற்குப்பின் காகந்தி என்ற புதிய நகரை உருவாக்கினான் என்பது உண்மை எனில் கரிகாலன் ஆட்சி வடக்கில் காஞ்சிக்கு அப்பாலும் இருந்தது என்பது ஏற்றுக் கொள்ளத் தக்கது என்கிறார்.[40]

சி.ஆர். சீனிவாசன், திருவாலங்காடு செப்பேடு, திருஞானசம்பந்தரின் தேவாரப்பா, சேக்கிழாரின் பெரிய புராணம், மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்றவற்றில் சுட்டப்படும் சான்றுகளைக் குறிப்பிட்டு, கரிகாலன் காஞ்சி தொடர்பு உறுதியானது என முடிவுசெய்கிறார்.[41]

---

39. தமிழர் வரலாறு, ப. 46.

40. It is sometimes held that Kaverippumpattinam also called Kakanti was the new town constructed by him and that it came into existence only from the time of Karikala. But this town appears to have existed earlier. An inscription of Bharput of the second or first century B.C. mentions a Buddhist monk named Soma as hailing from this place, mentioned as Karikala. Thus the town founded by Karikala must have been different from Kaverippumpattinam and very likely it was in the region newly conquered by him in the northern part of Tontaimandalam, where there seem to have been more than one Kakanti. It is possible Karikala named the new town in the north after his own capital in the South. If this assumption is permissiable it will be obvious that Karikalan's dominions extended far beyond Kanchi in the north- Kanchipuram in the early South Indian history, p.16.

41. The only Sovereign whom the Tamil sources asociate with Kanchi in the early centuries of the Christian era is the early Chola King karikala, who, according to the Tiruvalangatu plates of Parakesari Rajendra Chola I (1012-44 A.D.) rebuilt or embellished with gold the city of Kanchi. This solitary epigraphical evidence which is authentic and reliable though coming as late as the 11th cnetury A.D. can be regarded as suggesting Karikala's conquest of or control over Kanchi, inspite of the fact that many scholars including K.A. Nilakanta Sastri have doubted it - Kanchipuram through the ages, p.11.

எனவே காஞ்சி கரிகாலன் தொடர்புகள் தெளிவாக வரலாற்று மூலங்களில் தெரியவராத காரணத்தாலேயே இத்தகைய பல வேறுபட்ட சிந்தனைகள் அறிஞர் பெருமக்களிடம் தோன்றியது தெரிகிறது. இந்நிலையில் இச்செய்திகளின் வன்மை மென்மைகளை ஆராயலாம்.

### 1.3.1.1. பட்டினப்பாலை

கரிகாலன் மிகச்சிறந்த வீரன் என்பதில் வரலாற்று ஆசிரியர் யாருக்கும் எந்தவித ஐயமும் இல்லை. பல பாடல்கள் இவன் சிறப்பையும் வீரத்தையும் புலப்படுத்துவன. பொருநர் ஆற்றுப்படை, பட்டினப்பாலை போன்ற ஆற்றுப்படை நூல்கள் இவன் வீரம், ஆட்சிச்சிறப்பு போன்றவற்றைப் புலப்படுத்தும் பாடல்கள். இவற்றுள் பட்டினப்பாலையில் அமையும் புலவரின் சில வரிகள் காஞ்சி கரிகாலன் தொடர்பு உண்மையென உரைக்க அறிஞர் தரும் சான்றுகளுள் ஒன்றாக அமைகிறது.

> அருங்கடி வரைப்பின் ஊர் கவின் அழியப்
> பெரும் பாழ்செய்துமமையான் மருங்கற
> மலையகழ்க்குவனே கடறூர்க்குவனே
> வான்வீழ்க்குவனே வளியாற்றுவனெனத்
> தான்முன்னிய துறை —269–273

போகும் தன்மையுடையவன் என இவனைக் காட்சிப்படுத்தி, மேலும் தொடர்ந்து,

> பல்லொளியர் பணிபொடுங்கத்
> தொல்லருவாளர் தொழில் கேட்ப
> வடவர் வாடக் குடவர்கூம்பத்
> தென்னவன் திறல் கெடச்சீறி மன்னர்
> மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாள்
> மாத்தானை மறமொய்ம்பின்
> செங்கண்ணால் செயிர்த்து நோக்கிப்
> புன்பொதுவர் வழி பொன்ற
> இருங்கோவேள் மருங்குசாய —274–282

என இவன் மறவெற்றியையியம்புகிறார். ஒளியர், அருவாளர், வடவர், குடவர், தென்னவன், பொதுவர், இருங்கோவேள் இவனிடம் பனிந்தனர் என்னும் இக்கூற்றில் பணிந்தவர்களுள் தமிழகத்தின் வடபகுதியில் வாழ்ந்த அருவாளரும் வடவரும்

அடங்குகின்றனர். எனவே இப்பகுதியில் அமைந்த காஞ்சியும் கரிகாலன் வெற்றி பெற்ற பகுதிக்குள் அடங்குகின்ற நிலையினைக் காண்கின்றோம். வேறு எந்தவிதச் செய்தியும் கரிகாலன் காஞ்சி தொடர்பாக இப்பாடலடிகளில் காணக்கூடவில்லை. தவிர, இந்த அடிகளைத் தொடர்ந்து புலவர், கரிகாலன் தன்னுடைய தலைநகரைப் புதுப்பித்ததையும், குடிகளை அங்கு அமரச் செய்ததையும் சொல்கிறார்.

> **காடுகொன்று நாடாக்கிக்**
> **குளந்தொட்டு வளம் பெருக்கிப்**
> **பிறங்கு நிலை மாடத்துறந்தை போக்கிக்**
> **கோயிலொடு குடிநிறீஇ** *–283–286*

ஆயின் இதற்குப் பொருள் கொள்ளும் அறிஞர்கள் இந்த அடிகளுக்கு மேலும் சில விளக்கங்களைத் தருகின்றனர்.

மா.இராசமாணிக்கனார் பிற்கால இலக்கியங்களான சிலப்பதிகாரம், பெரியபுராணம், கலிங்கத்துப்பரணி போன்றவற்றில் சொல்லப்படும் செய்திகளையும் இணைத்துப் பொருள் காணுகின்றார். சேக்கிழார் கருத்தை அப்படியே ஏற்பவர் இவர்.[42] எனவே, "இங்ஙனம் தமிழகத்தை அடிப்படுத்திய

---

42. தென்னாட்டு வரலாறு சம்பந்தப்பட்டவரை சேக்கிழார் பெருமான் பெரும்பான்மை பிழைபடாது எழுதியுள்ளார். . . சேக்கிழார் தாம் பன்னிரண்டாம் நூற்றாண்டினர் என்பதை அறவே மறந்தவராய் அவ்வவ் நாயன்மார்கள் காலத்தவராக இருந்து நாட்டு நடப்பும் பிறவும் நன்கறிந்தவராய்ப் பாடியுள்ள முறையை வேறு எந்தத் தமிழ் நூலிலும் காண இயலா. சேக்கிழார் பெருமான் புராணம் பாடவந்த பிற்கால ஆசிரியர் போன்றவர் அல்லர். அவர் சிறந்த புலவர். சோழப் பேரரசின் முதல் அமைச்சர்.. தொண்டை நாட்டினர். பல்லவ அரசர் கல்வெட்டுகளையும் சோழர் கல்வெட்டுகளையும் இக்காலத்தில் நமக்குக் கிடைக்காத பல நூல்களையும் செப்புப் பட்டயங்களையும் கல்வெட்டுகளையும் நன்கு படித்தவர் போன்ற பல செய்திகள் அவர்தம் புராணத்துள் காணப்படுகின்றன. வரலாற்றாசிரியர் இருண்ட காலம் என்று கூறி வருந்தும் காலத்தைப்பற்றிய பல உண்மைச் செய்திகளைத் தம் காலத்திருந்த மூலங்களைக் கொண்டு சேக்கிழார் குறித்துச் செல்லலை வரலாற்றுப் பண்புடைய

கரிகாலன்அருவா நாட்டைக் (தொண்டை நாட்டை) கைப்பற்ற எண்ணி வடக்கே சென்றான். அந்நாட்டில் ஓரிடத்திலின்றிக் கண்டவாறு அலைந்து திரிந்த குறும்பரை அடக்கி, அருவாளரை வென்று, தொண்டை நாட்டு 24 கோட்டங்களிலும் நிலைபெறச் செய்தான். 24 கோட்டங்களிலும் வேளாளர் பலரைக் குடியேற்றினான்"[43] என்றும், "காஞ்சி நகரத்தைக் கரிகாலன் புதுப்பித்தான்; தொண்டை மண்டலத்தைக் காடு கெடுத்து நாடாக்கினான் என்றெல்லாம் கலிங்கத்துப் பரணி, பெரிய புராணம் முதலிய அருந்தமிழ் நூல்கள் அறைகின்றன. இவையனைத்தையும் ஒருசேர நோக்கி, நடு நிலையினின்று ஆராயின் கரிகாலன் காலத்துச் சோழப்பெருநாடு வடபெண்ணையாறு முதல் கன்னிமுனை வரையிலும் பரவியிருந்தது என்பது முற்றிலும் பொருத்தமாகும்" என்றும்,[44] தொண்டை மண்டலத்தின் தலைநகரம் காஞ்சிபுரம். கரிகாலன் அதனை மதிலால் வளைப்பித்துச் சிறப்பித்தான். அங்குப் பலரைக் குடியேற்றினான். தொண்டை நாட்டை ஆண்டு வருமாறு தம் மரபினன் ஒருவனை (இளந்திரையன்) விட்டுத் தன் நாடு திரும்பினான்"[45] என்றும் உரைக்கிறார்.

மா.இராசமாணிக்கனாரின் கருத்து, பிற்காலச் சான்றுகளின் அடிப்படையில் இந்த அடிகளுக்குப் பொருள் கொண்ட முறையில் வெளிப்பட்டதாகும். ஆயின் இவ்வடிகளுக்கு அக்காலச் சான்றுகளின் அடிப்படையில் பொருள் காணும்போது கரிகாலன் இவர்களைப் பணியவைத்தான் என்பது தவிர, பிற பொருள் இல்லை. உறந்தையைப்புதுப்பித்து, மக்களைக் குடியேற்றியமை சுட்டப்படுகிறதே தவிர, காஞ்சி பற்றிய எந்தச் சிந்தனையும் இங்கு இல்லை. இந்நிலையில் இப்பாடலடிகளை மீண்டும் காணலாம்.

---

உள்ளத்தினர் நன்குணர்தல் கூடும். ஆயிரக் கணக்கான கல்வெட்டுகள் இன்னும் வெளிவராத இக்காலத்தில் கிடைத்துள்ள கல்வெட்டுகளைக் கொண்டு பார்ப்பினும், சேக்கிழார் சிறந்த கல்வெட்டுப் புலவர்...வரலாற்றுக்கு மாறாக நூல் செய்யாத மாபெரும் புலவர். . .அவருக்கிணையாக இத்துறையில் தமிழ்ப் புலவர் எவரும் இலர். ஆதலின் அவரது நூலைச் சான்றாகக் கொள்ளலாம் எனத் துணிந்து கோடலில் தவறுண்டாகாது- சோழர் வரலாறு, பக். 14-15.

43. மேலது, ப. 57. 44. மேலது, ப. 59. 45. மேலது, ப. 60.

கரிகாலனிடம் இந்த அரசர்கள் எல்லாம் பணிந்தனர் என்பது இப்பாடலடிகள் புலப்படுத்தும் பொருள். இவர்கள் இருந்த இடத்திற்குச் சென்று இவர்களையெல்லாம் வென்றான் என்ற குறிப்பு இவ்வடிகளில் இருந்தது எனில் மா. இராச மாணிக்கனாரின் கருத்தை உறுதிப்படுத்தலாம். அதனைக் கருதுகோளாகக் கொண்டு மேலும் செல்லலாம். ஆயின் இந்தப்பாடலடிகளில் கரிகாலன் வடக்கில் உள்ள அரசர்களைப் போர் புரிந்து வென்றானா? என்ற கேள்விக்கு விடையில்லை. எப்படிவென்றான் என்பதற்கும் விடையில்லை.

கரிகாலன் பேரரசன். இருபெரு வேந்தரை வென்றவன். சிற்றரசர்களை அடக்கியவன். இவனது போர்க்களவெற்றி, வென்ற போர்க்களம் எல்லாம் சங்கப்பாக்களில் தெளிவாகச் சுட்டப் பட்டுள்ளன. வெண்ணிப்பறந்தலை, வாகைப் பறந்தலை போர்க்களங்கள் அங்குத் தெரியவருகின்றன. இருபெரு வேந்தரை அழித்த செய்தி, ஒன்பது வேளிர் சாய்ந்த செய்தி அங்குப் புலப்படுகின்றன. ஆயின் பட்டினப்பாலை பாடலடிகள் கரிகாலன் வென்ற இந்த அரசர்களைத் தொகுத்து மட்டும் தருகிறது. இதற்குக் காரணம் என்ன? என்று ஆராயும் போது, நச்சினார்க்கினியர், ரா. ராகவையங்கார் உரைகள் சில சிந்தனைகளைத் தருகின்றன.

நச்சினார்க்கினியர்,"தான் கருதிய போர்த்துறைகள் எல்லாம் பொருது முடித்தான் ஆகலின் ஒளி நாட்டார்த் தாழ்ந்து தம் வீரம் குறைய, பழைய அருவாளர் நாட்டில் அரசரும் தாங்கள் செய்யும் தொழிலை வந்து கேட்ப, அதற்கு வடக்கு நாட்டில் உள்ள அரசர் குறைய, குடநாட்டில் உள்ளவரும் மனவெழுச்சி குறைய, புல்லிய இடையராய அரசாள்வோர் கிளை முழுதும் கெட்டுப்போக ஐம்பெரும் வேளிர் குலங் குறைய" என எழுதிச் செல்கின்றார்.[46]

ரா.இராகவையங்கார், தம்முடைய 'பட்டினப்பாலை ஆராய்ச்சியும் உரையும்' நூலில், "இவ்வாறு தான் நினைத்த போர்த்துறைகளிற் றட்டறப் போதலால் இஃது உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்புக் கூறியது" என்றவாறு என்கிறார் (தொல்.புறம்.12).[47]

---

46. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக். 560,561.
47. பட்டினப்பாலை ஆராய்ச்சியும் உரையும், பக். 93,94

தமிழ்நாட்டு வரலாறும், "ஒளிநாட்டு மக்கள் ஒளியர் எனப்பட்டனர். அவர்களுள் பலர் இவனது பேராற்றலைக் கேள்விப் பட்டோ, இவனோடு போராடித் தோற்றோ கரிகாலனைப் பணிந்து ஒடுங்கிக் கிடந்தனர். அருவா நாட்டு மக்கள் அருவாளர். இவர்கள் தொன்மையான குடியைச் சேர்ந்தவர்கள். அவர்களும் ஒளியர் போன்ற நிலையினராய் கரிகாலன் இட்ட கட்டளையை நிறைவேற்றும் ஏவலராய் மாறினர்" என எழுதும் நிலையைக் காணக்கூடுகிறது.[48]

பேரரசன் ஒருவன் அவனுக்கு நிகரான வேந்தர்களைப் போர்க்களத்தில் வெல்வது தான் அவனுக்குப் பெருமையே தவிர, சிறியோரை வென்றான் என்பதும் அதுவும் போர்க்களத்தில் சந்தித்து வென்றான் என்பதும் மேலும் ஆராய்தற்குரியது. இது அவனுக்குப் பெருமையளிப்பதும் அல்ல. எனவே இங்கும் கரிகாலன் பேரரசன், இவன் வீரம் கேள்வியுற்று இந்தப் புன் பொதுவர் போன்ற சிற்றரசர்கள், தலைவர்கள் எல்லாம் பணிந்தனர், அடங்கினர் என்பதே இத்தகைய பேரரசனுக்குப் பெருமைசேர்க்கும் என்ற நிலையில், இச் செய்திகள் மேலும் எண்ணத் தக்கனவாக அமைகின்றன. எனவே கரிகாலன் வடபகுதிக்குச் சென்று இவர்களையெல்லாம் வென்றான் என்பதை விடவும் அவனது வீரம் கேட்டு இச்சிற்றரசர்கள் அனைவரும் பணிந்தனர் என்பதே இப்பேரரசனுக்கு அழகு என்ற நிலையில் புலவரும் இப்படியே பாடியிருக்கக் கூடும். தவிர வடபகுதி கரிகாலன் ஆட்சிக்குள் இருந்திருக்கலாம் என்ற போதிலும் இவனது ஆட்சி அங்கு நடைபெற்றது என்பது குறித்த எந்த விதச் செய்திகளும் கிடைக்கவில்லை என்பதும் நினைவிற் கொள்ளத்தக்கது. கரிகாலன் தன் சார்பில் யாரையேனும் அங்கு ஆட்சி புரிய அமர்த்தினானா? என்பதற்கும் சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை எனினும், மா.இராசமாணிக்கனார் திரையனைக் காஞ்சியில் அமர்த்தினான் என்று கூறுகிறார்.[49]

கரிகாலன் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தவன் திரையன். ஒரே புலவர் இவ்விருவரையும் பாடியுள்ளார். கரிகாலனையும் திரையனையும் பாடிய கடியலூர் உருத்திரங் கண்ணனார் இந்தச்செய்தியை எங்கும் குறிப்பிடவில்லை. தவிர, திரையர்

---

48. தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் - அரசியல், ப. 294.

49. சோழர் வரலாறு, ப. 60.

இனத்தார் ஏற்கெனவே கச்சியில் ஆண்டு வந்தவர்கள். பெரும்பாணாற்றுப் படை திரையன் திரையர் குலத்தில் வந்தவன். எனவே ஏற்கெனவே ஆட்சி புரிந்து வந்த ஒருவனை, கரிகாலன் தனக்குப் பதிலாக அங்கு எவ்வாறு நியமிக்க இயலும்? அவ்வாறு நியமித்தற்குச் சான்று என்ன? மேலும் கரிகாலன் தொல் அருவாளரை வென்றான் என்றே பட்டினப்பாலை காட்டுகிறது. அருவாளரை வென்று முதன்முதலில், முதல் திரையனை அமர்த்தினான் எனில் ஏற்கலாம். ஆயின் பெரும்பாணாற்றுப் படைத் தலைவனாகிய திரையன் முதல் திரையன் அல்லன். மேலும் கரிகாலன் காலத்தில் வாழ்ந்த திரையன் சிறந்த வீரன். கொண்டியுண்டிமறவன். மூவேந்தர்களுள் சிறப்பு மிக்கவன். எனவே இவையும் கரிகாலனால் அமர்த்தப் பட்டவன் திரையன் என்ற செய்திக்கு உறுதுணையாக இல்லை. எனவே இவை போன்ற செய்திகள் மேலும் தெளிவுபடுத்தப்படவேண்டும். தன்னுடைய சோழர் வரலாற்றில் (1947, முதற் பதிப்பு) "தொண்டை மண்டலத்தின் தலைநகரம் காஞ்சிபுரம். கரிகாலன் அதனை மதிலால் வளைப்பித்துச் சிறப்பித்தான். அங்குப் பலரைக் குடியேற்றினான். தொண்டை நாட்டை ஆண்டு வருமாறு தன் மரபினன் ஒருவனை (இளந்திரையன்) விட்டுத் தன் நாடு மீண்டான்" என்று எழுதும் மா.இராசமாணிக்கனார்[50] தன்னுடைய 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' நூலில் (1970) "கச்சித் திரையனுக்குப் பிற்பட்ட காலத்தில் பெரும்பாணற்றுப்படை பாடப்பட்ட பின்பு, கரிகாலன் தொண்டை நாட்டைக் கைப்பற்றி யிருக்கலாம் என்று கொள்வதே பொருத்தமாகும்" என்றும்[51] "காஞ்சித் திரையன் காலத்திலும் கரிகாலன் காலத்திலும் வாழ்ந்த புலவர் கரிகாலன் திரையரை வென்றான் என்று கூறாததை நோக்க, திரையரை வென்று தொண்டை நாட்டைக் கைப்பற்றியவன் மேலே கூறப்பட்ட சதகர்ணி ஆதல்கூடும் என்று நினைத்தல் பொருத்தமாகும்" என்றும்[52] எனவே "தொண்டை நாட்டில் திரையர் ஆட்சியின் மறைவும் சாதவாகனர் ஆட்சியும் சோழர் ஆட்சியின் தொடக்கமும் இரண்டாம் புலுமாயியின் ஆட்சியிலேயே (கி.பி. 107-131) நிகழ்ந்திருத்தல் கூடும் என்பது தெரிகிறது" என்றும்[53] தவிர திரையன் மரபு பேசும்போதும் கலிங்க வீரனான காரவேலன் (கி.மு. 176-163) தொண்டைநாட்டை ஆளக்

---

50. மேலது, ப. 60.
51. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 302.
52. மேலது, ப. 306.
53. மேலது, ப. 306.

கலிங்க வீரன் அல்லது படைத்தலைவனை அனுப்பியிருக்கலாம். அவன் கடல்வழியாகத் தன் பரிவாரங்களுடன் வந்திருத்தல் கூடும். அங்ஙனம் திரைவழி வந்தவன் திரையன் என்று பெயர் பெற்றிருக்கலாம்[54] என்றும் கூறிச் செல்கிறார். எனவே இச் செய்திகளும் தெளிவு தரவில்லை; தெளிவானவையாக அமையவில்லை.

பி.டி.சீனிவாச ஐயங்கார் பட்டினப்பாலை அடிகளில் சுட்டப்படும் வடவர் என்பதற்குப் பல்லவர் எனப் பொருள் கொண்டு, கரிகாலன் பல்லவரை வென்றான் எனக் கொள்ளுகிறார்.[55] இவர் கரிகாலன் காலத்தைக் கி.பி. 4 எனக் கணிக்கும் நிலையில் அன்று இப்பகுதியில் பல்லவர் ஆட்சி இருந்ததைக் கொண்டு இவ்வாறு உரைக்கிறார். ஆயின் கரிகாலன் காலம் கி.பி. 4 என்பதற்கோ, கரிகாலன் பல்லவர்களை வென்றான் என்பதற்கோ எந்த விதச் சான்றும் இல்லாத நிலையில், இக்கருத்தும் மேலும் ஆய்வதற்குரியதாக அமைகிறது.

மேலும் பி.டி.சீனிவாச ஐயங்கார் இந்தப் பாடலடிகளில் வரும் புன் பொதும்பர் என்போரைக் குறும்பர் எனக் கொண்டு காணும் உரையும்[56] பொருத்தமாக இல்லை.

'புன் பொதும்பர் வழி பொன்ற' என்பது பட்டினப்பாலை அடி. இதற்கும், முன்னரேயே சுட்டியது போன்று கரிகாலன் இந்தப் புல்லிய பொதும்பரைப் பணியவைத்தான் என்பதே பொருள். ஆயின் பொதும்பரைக் குறும்பர் எனக் கொண்ட இவர் குறும்பர் குடியைப் பேணிக் காத்தான் எனப்பொருள் எழுதுகின்றார்.

முதலில், பேணிக் காத்தல் என்ற பொருள், 'வழி பொன்ற' என்னும் சொல்லுக்குரிய பொருளல்ல. இந்தச் சூழலுக்கும் இப்பொருள் பொருத்தமாக அமையவில்லை.

அடுத்து இதற்கு இவர், எடுத்துக் காட்டும் சான்று பாடலும் சரியானதன்று. அகம் 141 ஆம் பாடலை இவர் எடுத்துக்காட்டுகிறார். இப்பாடலில் கரிகாலனின் இடையாறு என்ற ஊரினை, நல்ல புகழ் வாய்ந்த செல்வத்திற்கு உவமிக்கிறார் புலவர் நக்கீரர்.

---

54. மேலது, ப. 308.
55. தமிழர் வரலாறு, II ப. 15.
56. மேலது பக். 15,16.

செல்குடி நிறுத்த பெரும் பெயர்க் கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற்றன்ன

என, கரிகாலன் பதியெழு அறியாதவர்களாகத் தம் குடிகளைக் காப்பாற்றும் புகழ் மிக்கவன் எனச் சொல்ல வருபவர் இந்த ஊரை வருணிக்கும் இடத்தில் அதன் இயற்கைச் சிறப்பினையும் காட்டுகிறார். இங்கு, மகளிர் அவலிடிக்கும் ஓசைக்கு அஞ்சிய கடுஞ்சூலையுடைய குருகு தன் வாழை மடலினை விட்டு, நெடிய காலை உடைய மாமரத்தினை நோக்கிச் சிறிது பறக்கும் தன்மையைக் காட்டுகிறார்.

துவரப்புலர்ந்து தூமலர் கஞலித்
தகர நாறுந் தண்ணறுங் கதுப்பிற்
புது மணமகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட்டடுப்பிற் பாலுலையிரீஇக்
கூழைக்கூந்தற் குறுந்தொடி மகளிர்
பெருஞ் செய் நெல்லின் வாங்கு கதிர் முறித்துப்
பாசவல் இடிக்கும் இருங்காழுலக்கைக்
கடிதிடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீங்குலை வாழை யோங்கு மடலிராது
நெடுங்கால் மராஅத்துக் குறும்பறை பயிற்றும்
-12-22

என்பன பாடல் அடிகள். மகளிர் அவலிடிக்கின்றனர். இருங்காழுலக்கை சத்தம் அஞ்சி, நிறைந்த சூலையுடைய குருகு, வாழைமரத்தின் மடலிலிருந்து, மாமரத்தினை நோக்கி, குறுகிய பறத்தல் தொழிலை மேற்கொள்கிறது என்பது இவ்வடிகள் தரும் பொருள். ஆயின் 'குறும்பறைபயிற்றும்' என்பதைக் குறும்பர் எனக் கொள்கிறார் பி.டி.சீனிவாச ஐயங்கார். எந்த விதத் தொடர்போ பொருத்தமோ இல்லாத நிலையில் இந்த இவரது இக்கருத்து முரண்படுகிறது. எனவே காஞ்சி கரிகாலன் தொடர்பு இக்கருத்து வழியேயும் உறுதிப்படவில்லை.

### 1.3.1.2. திருவாலங்காடு செப்பேடு

பி.டி.சீனிவாச ஐயங்கார் கரிகாலன் காஞ்சிக்குப் பொன் வேய்ந்தான் என, திருவாலங்காட்டுச் செப்பேடு கொண்டும் கூறுகிறார். இச்செய்தியை மேலும் சில அறிஞர்கள் ஏற்றுக் கொண்டு, கரிகாலன் காஞ்சித் தொடர்பினை உறுதிப்படுத்தியுள்ளனர். எனவே இதுவும் இங்கு ஆராயப்பட வேண்டியதொரு செய்தியாக அமைகிறது.

பி.டி.சீனிவாச ஐயங்கார் காஞ்சிக்குப் பொன் வேய்ந்தான் கரிகாலன் என, செப்பேட்டுச் செய்தியைக் குறிப்பிட்டுக் காட்டினாலும், இவரது விளக்கம் தெளிவில்லாமல் அமைகிறது. பொன் வேய்ந்தது காஞ்சியில் இருந்த எந்தக் கோயிலுக்கு என்பதை இவரால் விளக்க இயலவில்லை "இதற்கு அவ்விடத்துக் கோயில் கோபுரத்தைப் பொன் தகடுகளால் மூடினான் என்பதே பொருளாகும்" என இவரே முடிவு செய்து கொண்டு, மேலும் "இக்கோயில் தென்னிந்தியாவில் ஆகம வழிக் கடவுள்களுக்குக் கட்டப்பட்ட கோயில்களில் முதல் கோயில் ஆதல் கூடும். . .கரிகாலன் பொன் வேய்ந்த கோயில் சிவன் கோயிலா, விஷ்ணு கோயிலா என்பதை உறுதிச் செய்ய எந்த வழியும் இல்லை" என்றும் உரைக்கிறார்.[57]

எனவே இக்கருத்திலும் தெளிவின்மையே அமைகிறது. இவர் ஊகித்துக் கூறுகிறாரே தவிர வரலாற்றுச் சான்று எதையும் காட்ட இவரால் இயலவில்லை. இந்நிலையில் பல அறிஞர்கள் குறிப்பிடும் திருவாலங்காடு செப்பேடு தரும் செய்தியும் இங்கு ஆராய்தற்குரியது.

திருவாலங்காடு செப்பேடு முதலாம் இராசேந்திரச் சோழனின் ஆறாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1018) வெளியிடப்பட்ட செப்பேடு. இது தமிழ்ப்பகுதி, வடமொழிப்பகுதி என இருபகுதிகளைக் கொண்ட செப்பேடு.

கரிகாலன் காஞ்சிக்குப் பொன் வேய்ந்தான் என்பது இச்செப்பேட்டின் வடமொழிப்பகுதியில் கூறப்பட்டுள்ளது.[58]

இச்செப்பேடு பற்றி ஆய்ந்து தம் 'வரலாற்றில் திருவாலங்காடு' என்ற நூலில் தம் கருத்துகளை வெளியிடுகிறார் சு. இராசவேலு. இதனுள் இவர், "இச்செப்புப் பட்டயத்தின் வடமொழிப் பகுதியின் 271 வரிகள் சோழர்களின் மரபுவழிப்பட்டியலையும் மன்னர்களின் வெற்றிகளையும் குறிப்பிடுகின்றன. தமிழ்ப்பகுதி 524 வரிகள் பெற்றுத் திகழ்கின்றன" என்றும், "தமிழிற் எழுதப்பட்டுள்ள செப்புத் தகடுகளை விட வடமொழி இதழ்கள் சற்றுக் காலத்தாற் பிற்பட்டவை. தமிழ்ச் செப்பேட்டு இதழ்கள் செப்பேட்டில் குறிப்பிட்டுள்ள காலத்தைச்

---

57. மேலது, பக். 37, 38. 58. மேலது, பக். 37.

சார்ந்தது'' எனவும், ''வடமொழியில் எழுதப்பட்டுள்ள செப்பேட்டுத் தகடுகளில் செப்பேட்டு எண் பத்தின் முன்பக்கமும் பின்பக்கமும் உள்ள செய்திகளில் திருவாலங்காடு கோயிலின் அம்மைக்கும் கொடை அளித்ததைக் கூறுகிறது. இது சுமார் நூறு ஆண்டுகளுக்குப் பின்னும் இருநூறு ஆண்டும் உள்ள காலத்தில் எழுதப்பட்டு இருக்க வேண்டும்'' என்றும் கருத்துத் தெரிவிக்கிறார்.[59]

எனவே முதலில் நோக்குதற்குரியது பொன்வேய்ந்த செய்தி எழுதப்பட்டப்பகுதி இராசேந்திரசோழன் காலத்தது அன்று என்பது. மேலும் இராசேந்திரன் வெளியிட்ட தமிழ்ப்பகுதிகள் அம்மன்னனின் நேரடிப்பார்வையில் எழுதப்பட்டிருக்கலாம் என்ற நிலையில் இதில் நம்பகத் தன்மையை எதிர்பார்க்கலாம். ஆயின், பின்னர் எழுதிச் சேர்க்கப்பட்ட பகுதிகளின் உண்மைத்தன்மை ஆழ்ந்த ஆய்விற்குப்பின்னரேயே வரலாறாகக் கொள்ள வேண்டியவை என்ற நிலையில் முதலில் இதன் நம்பகத் தன்மையும் ஆய்விற்குரியது.

மேலும் இந்தத் தொடரை எடுத்துக்காட்டும் எந்த அறிஞரும் இதற்குரிய சரியான விளக்கம் அளித்து, சங்க கால கரிகாலன் காஞ்சிக்குப் பொன்வேய்ந்தான் என்பதை உறுதிப்படுத்தவில்லை. அந்தச் செப்பேடு இதைப்பற்றிய விளக்கமான செய்தியைத் தரவில்லை என்பதையே இதற்குரிய காரணமெனக் கொள்ளலாம்.

கரிகாலன் காஞ்சியை வென்று பொன் வேய்ந்தான் என்ற பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்துப்படி, இது தென்னிந்தியாவில் ஆகம வழிக் கடவுள்களுக்குக் கட்டப்பட்ட கோயில்களில் முதற்கோயில் ஆதல் கூடும் என்பதற்கும் விளக்கம் வேண்டும். சங்க காலத்தில், கச்சிப்பேட்டில் திருமால் கோயில் இருந்ததைப் பெரும்பாணாற்றுப்படை காட்டுகிறது. பிற எந்தக் கோயில் பற்றியும் அங்குக் குறிப்பில்லை. பிற வழிபாடுகள், விழாக்கள் மலிந்து காணப்பட்ட செய்திகள் தெரியவரினும் பிற கோயில்கள் இருந்ததாக அங்குக் குறிப்பில்லை. கச்சிப்பேடு, காஞ்சி பற்றிய செய்திகள் சில தெரியவரினும், கோயில்கள் இருந்ததாகத் தெரியவில்லை. இருந்திருக்கலாம் என்று கொண்டாலும்,

59. வரலாற்றில் திருவாலங்காடு, பக். 31,111.

கரிகாலன் பொன்வேய்ந்த செய்தி மிக முக்கியமானதொரு செய்தி என்ற நிலையில், இது குறித்து எந்தக் குறிப்பும் கிடைக்காததும் இங்குச் சுட்டத்தக்கது.

அடுத்து, நாயன்மார்களும் ஆழ்வார்களும் இங்கேயிருந்த சில கோயில்களைப் பாடியுள்ளனர். இக்கோயில்கள் அனைத்தும், இப்பாடல்களைப் பாடிய நாயன்மார்கள், ஆழ்வார்களுக்கு முந்திய கோயில்கள் என்பது தெளிவு. இவர்கள் சென்று பாடிய கோயில்கள் என்ற நிலையில், இக்கோயில்களில் ஏதேனும் ஒன்றிற்கே கரிகாலன் பொன்வேய்ந்திருக்க வேண்டும். இவர்களின் இப்பாக்களில் ஏதேனும் குறிப்பு இருக்கிறதா என்று ஆராயும் போதும் எந்த விதச் செய்தியும் இது குறித்துக் கிடைக்காதது நோக்கத்தக்கது. ஏன் இத்தகைய ஒரு சிறப்பான நிகழ்ச்சி குறித்து யாரும் சுட்டவில்லை என்பதற்கும் சரியான விளக்கம் கிடைக்கவில்லை. எனவே இச்செய்தியும் வரலாற்று அறிஞர்கள் சுட்டுவது போன்று கரிகாலன் பற்றி பின்னர் எழுந்ததொரு கதையாக அமையலாம்; இல்லையென்றால், கரிகாலன் பலர் என்ற கருத்தினடிப்படையில், இன்னொரு கரிகாலன் சார்புடையதாக கருதிப்பார்க்கலாம் என்ற எண்ணத்திற்கே நம்மை இட்டுச் செல்கிறது.

தம்முடைய 'இலக்கியச் சாசன வழக்காறுகள்' நூலில் மு. இராகவையங்கார் சங்க கரிகாலனுக்கும் கச்சியைப் புதுக்கிய செயலுக்கும் தொடர்பு இருக்காது என்று கருதியே, "காவிரிக்கரை கட்டியவனாகவும் கச்சியைப் புதுக்கியவனாகவும் சாசனங்கள் கூறுபவனே கரிகால் வளவனாயின் அவனது அரியபெரிய செய்திகளையெல்லாம் விடாது கூறும் பட்டினப்பாலை முதலிய பழைய நூல்கள் இரண்டு பெருஞ்செயல்களையும் எடுத்துச் சிறப்பிக்க ஒருகாலுந் தவறாவன்றோ? காவிரிக் கரை கட்டிய வரலாறாவது கச்சியைப் புதுப்பித்த செய்தியாவது அந்நூல்கள் ஒன்றிலேனும் கூறப்படாமை வியப்புக்குரியதே. இதனால் சங்க காலத்துக் கரிகால் வளவன் பொன்னிக் கரைக் கண்ட கரிகாலனின் வேறானவன் என்றே சொல்லும் படியுள்ளது"[60] என்று கூறுகிறார்.

எனவே கரிகாலன் பற்றிப் பின்னர் எழுந்த கதைகளில் ஒன்று என்று இதனைக் கொள்வதற்கு முன்னர், கரிகாலன் பலர்

---

60. இலக்கியச் சாசன வழக்காறுகள், பக். 28,29.

இருந்த நிலையில், பிற கரிகாலன் காஞ்சி தொடர்புகளை ஆராயும் போது, பிற்காலச் சோழனாகிய ஆதித்த கரிகாலன் காஞ்சி தொடர்பு இங்குச் சிந்திக்கப்பட வேண்டியதாக உள்ளது.

இடைக்காலச் சோழர்களுள் திருவாலங்காட்டுச் செப்பேடு வெளியிட்ட முதலாம் இராசேந்திர சோழனின் தந்தை இராசராச சோழனின் மூத்தோன் ஆதித்த கரிகாலன். சுந்தர சோழனின் புதல்வன். இவர்கள் காலத்தில் தொண்டை மண்டலம் இவர்களின் ஆட்சிக்குள் இருந்தது என்பது வரலாறு தரும் உண்மை. ஆதித்த கரிகாலன் காஞ்சியில் தன் தந்தைக்காகப் பொன் மாளிகை ஒன்று கட்டியதாகவும், சுந்தரச் சோழனாகிய தன் தந்தையை அதில் வசிக்க அழைத்ததாகவும் அச்சூழலில் ஆதித்த கரிகாலன் திடீரென இறந்துவிட, பின்னர் சுந்தரச் சோழன் ஆதித்த கரிகாலன் கட்டிய காஞ்சி அரண்மனையில் உயிர் துறந்ததாகவும், இதனால் அவர் 'பொன் மாளிகைத் துஞ்சினத் தேவர்' என வழங்கப் பட்டதாகவும், வரலாற்றுச் செய்திகள் பகர்கின்றன.[61] எனவே இராசேந்திர சோழனின் காலத்திற்கு முன்னர் நடந்த இந்நிகழ்ச்சி இவனது செப்பேட்டில் கரிகாலன் காஞ்சிக்குப் பொன்வேய்ந்தான் எனச் சுட்டப்பட்டிருக்கலாம். இந்த நிகழ்ச்சி, பின்னர், சங்க கரிகாலனோடு தொடர்புடையதாகக் கருதப்படத் தொடங்கியிருக்கலாம். எனினும் இதற்கும் தெளிவு வேண்டும். கலிகாலன் என்றும், பொன்வேய்ந்தது காஞ்சிக்கும் எனவும் அமைகின்றமை[62] ஆதித்த

---

61. சுந்தர சோழன் (இரண்டாம் பராந்தகன்) கி.பி. 969இல் தன் முதல் மகனாகிய ஆதித்த கரிகாலனை இழந்தமையால் ஆற்றொணாத் துன்பத்தில் ஆழ்ந்து அவ்வாண்டிலேயே காஞ்சி மாநகரில் இருந்த பொன் மாளிகையில் உயிர்துறந்தான். அதுபற்றியே இவ்வேந்தன் 'பொன் மாளிகைத் துஞ்சினதேவர்' என சில கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளான்- A history of Tamil literature, p. 86.

    ஆதித்த கரிகாலன் கொலை சுந்தரச் சோழனைப்பாதித்தது. ஆதித்த கரிகாலன் கொலை செய்யப்பெற்ற இரண்டொரு திங்களில் சுந்தரச் சோழர் மனமுடைந்து கி.பி. 969இல் இறந்தார். காஞ்சி மாநகரிலிருந்த பொன் மாளிகையில் உயிர் துறந்தமையால் பொன் மாளிகைத் துஞ்சின தேவர் எனக் கல்வெட்டுகள் கூறுகின்றன- தமிழ்நாட்டு வரலாறு, சோழர்ப் பெருவேந்தர் காலம், நான்காம் தொகுதி, (முதல் பகுதி) ப.109.

62. Kalikala who renovated the town of Kanchi with gold and established his fame by constructing flood-embarkments for the river Kaveri - S.I.I. Vol. III part III p.386.

கரிகாலன் மாளிகை கட்டியதுடன் வேறுபடுகிறது. எனவே மேலும் தெளிவான வரலாற்றுச் சான்றுகள் கிடைக்கும் போதே இவை மேலும் தெளிவு பெறும். எனினும் சங்கக் கால கரிகாலனுக்கும், காஞ்சிக்கும் தொடர்பு இருந்ததாகச் சொல்வதற்கு இச்செப்பேட்டுச் செய்தி சான்றாக அமையவில்லை என்பதே இங்குக் கருதப்பட வேண்டியதாக அமைகிறது.

### 1.3.1.3. தேவாரப் பா ஒன்று

தேவாரப்பாக்களில் கரிகாலன் காஞ்சி தொடர்பு சுட்டும் எந்தவிதச் செய்தியும் இல்லை. எனினும் தேவாரத்தில் அமையும் கச்சி ஏகம்பம் பற்றிய பாடல் ஒன்றினைக் குறிப்பிட்டுக் கரிகாலன் தொடர்பு தெரிகிறது என்பார் சி.ஆர். சீனிவாசன்[63] ஆயின் இதுவும் பொருத்தமான சான்று அன்று. காலன் குறித்துப் பல பாடல்கள் தேவாரத்தில் அமைகின்றன. மேலும் இங்குள்ள அனைத்துப் பாக்களும் சிவன் பெருமை பேசும்நோக்கில் எழுந்தவை. இவர் குறிப்பிடும் பாடலும் சிவன் சிறப்பு சுட்ட எழுந்த பாடலே தவிர, கரிகாலனை அன்று.

> **விண்ணுளார் மறைகள் வேதம் விரித்தோதுவார்**
> **கண்ணுளார் கழலின் வெல்வார் கரிகாலனை**
> **நண்ணுவார் எழில் கொள் கச்சி நகரேகம்பத்**
> **தண்ணலாடுகின்ற அலங்காரம்மே**
>
> – தேவாரம்–திருஞானசம்பந்தர்

### 1.3.1.4. காகந்தி

டி.வி. மகாலிங்கம் காகந்தி என்ற நகரைக் கரிகாலன் உருவாக்கினான் என்பது உண்மையானால், கரிகாலனுடைய காஞ்சி வெற்றியையும் நம்பலாம் என்கிறார்.

டாக்டர் மா.இராசமாணிக்கனார் தன்னுடைய 'சோழர் வரலாற்றில், "காந்தன் ககந்தனிடம் பூம்புகாரை ஒப்புவித்த

---

63. Karikala's suggested association with Kanchi is strengthened further by a reference to Karikala in one of the hymns on Kanchi sung by Tirujnana sambandar who was a younger contemporary of Tirunavukkarasar and thus of Pallava Mahendravarman I (c.600-630 A.D.). This event of renovating Kanchi by Karikala finds mention in Sekkilar's Periyapuranam (12th century A.D.) also -Kanchipuram through the ages, p. 11.

பொழுது இந்நகரை நின் பெயரால் காகந்தி என்று பெயரிட்டுப் பாதுகாப்பாயாக' எனக் கூறினான் என்று மணிமேகலை கூறுகிறது. அன்று முதல் பூம்புகார்க்குரிய பல பெயர்களுள் காகந்தி என்பதும் ஒன்றாகக் கொள்ளப்பட்டதாம். நெல்லூர் மாவட்டத்தைச் சேர்ந்த ரெட்டிபாளையம் (கரூர் தாலுக்கா) பவித்திரி எனச் சங்ககாலத்தில் பெயர்பெற்றிருந்தது. அதனைச் சுற்றியுள்ள நாடு 'காகந்தி நாடு' என அங்குக் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் கூறப்பட்டுள்ளது. அஃது ஒரு காலத்திற் கடலாற் கொள்ளப்பட்டிருத்தலால் கடல் கொண்ட காகந்தி நாடு எனவும் பெயர் பெற்றதாம். இவ்வீரிடங்களுக்கும் உள்ள தொடர்பு ஆராயத் தக்கது" என உரைத்துள்ளார்.[64] பின்னர், தன்னுடைய 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' நூலில், 'நெல்லூர் மாவட்டத்துக் கரூர் வட்டத்து ரெட்டிபாளையம் சங்ககாலப் பவித்திரியாகும். அப்பகுதி காகந்தி நாடு எனப்பட்டது. 'காகந்தி' என்பது காவிரிப்பூம்பட்டினத்தின் பெயர்களுள் ஒன்றாகும். அப்பெயர் நெல்லூர் மாவட்டப்பகுதிக்கு அப்பகுதியை வென்ற சோழர்களே இட்டிருத்தல் வேண்டுமன்றோ? நெல்லூர் மாவட்டப்பகுதியை வென்ற கரிகாலனே தனது வளமார்ந்த தலைநகரின் பெயர்களுள் ஒன்றைப் புதிய நாட்டுக்கு இட்டான் எனச் சொல்வது பொருத்தமாகும்" என **Pallavas of Kanchi** என்ற ஆர் கோபாலன் நூலின் முன்னுரையில் டாக்டர் எஸ்.கே. ஐயங்கார் அளித்த கருத்தை எடுத்துக் கூறுகிறார்.[65] எனவே ஐயங்காரின் இக்கருத்தை மா. இராசமாணிக்கனார் உடன்படுகின்றமை தெரிகிறது. எனினும் இது குறித்த சான்றுகள் மனநிறைவு அளிக்காத நிலையிலேயே டி.வி. மாகலிங்கம் உறுதிப்படுத்த பிறவும் சான்றுகள் தேவை என்பதை இவ்வாறு வெளிப்படுத்துகிறார்.

மயிலை சீனிவேங்கடசாமியும், "காவிரிப்பூம்பட்டினத்திற்குக் காகந்தி என்னும் ஒரு பெயர் உண்டு எனக் கூறினோம். திருவேங்கடத்துக்கு அருகில் கிழக்குக் கரையிலே காகந்தி என்று ஒரு நாடு இருந்தது. அது பிற்காலத்தில் கடலில் மூழ்கிப் போயிற்று. அதைக் கடல்கொண்ட காகந்தி என்று சாசனங்கள் கூறுகின்றன. அப்பகுதியைத் தெலுங்குச் சோடர் (தெலுங்குச் சோழர்) என்பவர் அரசாண்டிருந்ததும் அங்கு ஒரு காகந்தி இருந்ததும் ஆராய்ச்சிக்குரியன. அந்தக் காகந்தி பவத்திரி கோட்டத்தில் இருந்தது. பவத்திரி கோட்டத்தின் ஒரு பகுதி

---

64. சோழர் வரலாறு, ப. 37. 65. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 247.

கடலில் மூழ்கி இப்போது பழவேற்காட்டு ஏரி என்று பெயர் பெற்றிருக்கிறது" என்று எழுதுகிறார்.[66] எனவே இவரும் ஆராய்ச்சிக்குரியது என்று கருதுகிறாரே தவிர, சோழர், கரிகாலன் தொடர்பு ஏதும் சுட்டவில்லை.

காவிரிப்பூம்பட்டினத்தின் இன்னொரு பெயர் காகந்தி. நெல்லூர் மாவட்டத்தில் அமைந்திருந்த ஓர் ஊரும் காகந்தி. இப்பெயர் கரிகாலனால் இடப்பெற்ற பெயரெனில், காஞ்சியை வென்று அதன் பின்னர் தான் இங்குச் சென்றிருக்க வேண்டும் என்பது உறுதிப்படும் என்பது டி.வி. மகாலிங்கம் கருத்து. எனவே 'காகந்தி' என்பது முதலில் ஆராயப்படவேண்டும்.

சங்க இலக்கியங்களில் காவிரிப்பூம்பட்டினம் குறித்த பல செய்திகளைக் காண்கிறோம். குறிப்பாக அது, தலைநகராக இருந்ததை, அதன் வணிக வளத்தை, மக்கள் அங்கு மிகச் செழிப்பான சிறந்த வாழ்க்கை நடத்தியதை எல்லாம் காண்கிறோம். அதன் பிற பெயராகப் புகார் இருந்தது தெரிகிறது. அந்நகரின் அமைப்பு, அதன் பிரிவுகள் தெரிகின்றன. ஆயின் எங்கும் காகந்தி என்பது அதன் இன்னொரு பெயர் என்பது சுட்டப்பெறவில்லை. தவிர, கரிகாலன் பற்றியும் அவனது வீரச் செயல்கள், வெற்றி, பண்பு நலன்கள் போன்றவை பலவும் புலவர்களால் சிறப்பாகக் காட்சிபடுத்தப்படுகின்றன. இவனது இந்த வரலாற்றிலும், எந்தச் சூழலிலும் கச்சி மட்டுமல்லாது, காகந்தி என்ற பெயரும் குறிப்பிடப் பெறவில்லை.

சிலப்பதிகாரக் காப்பியமும் காகந்தி பற்றி எந்தக் குறிப்பையும் தரவில்லை. எனினும், அக்காலகட்டத்தில் எங்கும் சுட்டப்படாததால் காகந்தி என்ற பெயர் அன்று வழங்கப்படவில்லை என்று முடிவு செய்தல் ஆய்வு ஆகாது. எனவே பிற்காலச் சான்றுகளைச் சான்றுகளாகக் கொள்ளலாம். எனினும் அவையும் தெளிவுடன் அமைதல் வேண்டும். இந்நிலையில் பிற்காலச் சான்றுகள் எனக் காண, மணிமேகலையில் காகந்தி பேசப்படக் காண்கிறோம்.

மணிமேகலையில் சிறை செய்காதையில் புகார் நகர் காகந்தி என்ற பெயர் பெற்றச் செய்தியைச் சாத்தனார் கூறுகிறார்.

**மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்**
**தன்முன் தோன்றல் தகாதொழி நீயெனக்**

66. சங்க காலத்துக் காவிரிப் பூம்பட்டினம், ப. 182.

கன்னி யேவலின் காந்த மன்னவன்
இந்நகர் காப்போர் யாரென நினைஇ
நாவலந் தண்பொழில் நண்ணார் நடுக்குறக்
காவற் கணிகைத் தனக்காங் காதலன்
இகழ்ந்தோர் காயினும் எஞ்சுத லில்லோன்
ககந்தனா மெனக் காதலிற் கூஉய்
அரசா ளுரிமை நின்பால் இன்மையின்
பரசுராமனின்பால் வந்தணுகான்
அமரமுனிவன் அகத்தியன் றனாது
துயர் நீங்கு கிளவியின் யான் தோன்றளவும்
ககந்தன் காத்தல் காகந்தி யென்றே
இயைந்த நாமம் இப்பதிக்கிட்டீங்
குள்வரிக் கொண்டு அவ்வுரவோன் பெயர் நாள்
– 22: 25–39

உம்பளந் தழீஇய வுயர்மணனெடுங் கோட்டுப்
பொங்கு திரையுலாவும் புன்னையங்கானல்
கிளர் மணி நெடுமுடிக் கிள்ளிமுன்னா
இளவேனில் இறுப்ப இறும்பூது சான்ற
பூ நாறு சோலை யாருமில் ஒருசிறைத்
தானே தமியள் ஒருத்தி தோன்ற
இன்னளார் கொல் ஈங்கிவள் என்று
மன்னவன் அறியான் மயக்கமெய்தாக்
கண்ட கண்ணினும் கேட்ட செவியினும்
உண்டவாயினும் உயிர்த்த மூக்கினும்
உற்றுணர் உடம்பினும் வெற்றிச் சிலைக்காமன்
மயிலையும் செயலையும் மாவும் குவளையும்
பயிலிதழ்க் கமலமும் பருவத் தலர்ந்த
மலர்வாயம்பின் வாசம் கமழப்
பலர் புறங்கண்டோன் பணிந்து தொழில் கேட்ப
ஒருமதி எல்லை கழிப்பினும் உரையாள்
பொருவரு பூங்கொடி போயின வந்நாள்
யாங்கொளித்தனள் அவ்விளங் கொடி யென்றே
வேந்தரை அட்டோன் மெல்லியற் றேர்வுழி
நிலத்திற் குளித்து நெடுவிசும்பேறி
சலத்திற் றிரியுமோர் சாரணன் தோன்ற
மன்னவன் அவனை வணங்கி முன்னின்று
என்னுயிர் அனையாள் ஈங்கொளித்தாள் உளள்

அன்னாளொருத்தியைக் கண்டிரோ அடிகள்
சொல்லுமின் என்று தொழ அவன் உரைப்பான்
கண்டிலேன் ஆயினும் காரிகை தன்னைப்
பண்டறிவுடையேன் பார்த்திப கேளாய் -24: 27-53

இக்கதை, "அரசர் குலத்தைப் பொன்றக் கெடுத்த பரசுராமன் முன் நீ வெளிப்படுதல் ஆகாது இந்நகரை விட்டு நீங்குவாயாக என்று சம்பாவதி ஆணையிட்டமையால் காந்தன் என்ற அரசன் தான் நீங்கின் இந்நகரைக் காப்போர் யாவர் என நினைத்து, சம்புத் தீவில் உள்ள பகைவர்கள் ஒடுக்கமடையுமாறு காவற்கணிகையிடத்துத் தோன்றிய புதல்வனும் பகைவர் வெகுண்டு எதிர்ப்பினும் அவர்க்கு வலிகுறைதல் இல்லாதவனும் ஆகிய ககந்தன் என்பவனே காத்தற்கும் பொருந்தியவனாவான் என்று அவனை அன்பொடும் அழைத்து அரசு புரியும் உரிமை நின்னிடம் இல்லாமையால் பரசுராமன் நின்னிடம் போர்புரியுமாறு வாரான். கடவுண் முனிவராகிய அகத்தியரது அருண்மொழியால் யான் மீண்டு இந்நகரை அடையுமளவும் ககந்தனே காப்பாயாக எனவுரைத்து, ககந்தனாற் காக்கப் படுதலின் காகந்தி என்று பொருந்திய பெயரை இந்நகருக்கு இட்டு, காந்தன் வேற்றுருக் கொண்டு சென்ற நாளில்" (கழக உரை-பக்.314-315) என அமைகிறது.

முன்னர்க் குறிப்பிட்டது போன்று காகந்தியைப் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் கிடைக்காதது போன்று காகந்தன் பற்றியோ காந்த மன்னன் பற்றியோ செய்திகளும் முன்னர்க் காணக் கூடவில்லை. சங்கச் சோழர் வரலாற்றிலும் இவன் இல்லை. எனவே மணிமேகலையில் காட்டப்படும் இம்மன்னன் சங்கச் சோழர்க்கு முன்னைய சிபி, மனு, முசுகுந்தன் போன்ற தொன்மையான சோழர் குடி சார்ந்தவன் என்பது வரலாற்று ஆசிரியர் கருத்து. எனவே இம் மன்னனைச் சங்ககாலச் சோழர்க்கு முன்னைய சோழ மரபினன் எனக் கொண்டாலும் இக்கதை உண்மையா அல்லது கற்பனையா என்பதே இங்குக் கேள்விக்குரிய வினா.

நீலகண்ட சாஸ்திரியார் தம்முடைய 'சோழர்கள்' நூலில் இதனைச் செவிவழிச் செய்தி என்கிறார்.

"சங்க கால மன்னர்களைப் பற்றி ஆராயுமுன் சங்க இலக்கியத்தில் இவர்களைப் பற்றிக் காணப்பெறும் செவிவழிக் கதைகளை நோக்குவோம். அக்காலத்திலேயே சோழமன்னர்கள்

சூரியனின் வழி வந்தோர் எனக்கருதப்பட்டது. இக்கருத்தே கி.பி. 10,11ஆம் நூற்றாண்டுகளில் பொறிக்கப்பட்ட செப்பேட்டுப் பட்டயங்களிலும் வீரராசேந்திரனது கன்னியாகுமரிக் கல்வெட்டிலும், கலிங்கத்துப்பரணி, விக்கிரமச்சோழன் உலாபோன்ற இலக்கியங்களிலும் பிற்காலத்தில் உறுதியாக எடுத்துரைக்கப்பட்டது. அகத்தியர், பரசுராமன் ஆகியோர் காலத்தில் வாழ்ந்த காந்தமன் என்னும் மன்னன் அகத்தியரிடம் தனக்கு இருந்த பக்தியினால் காவிரி நதியைத் தமிழகத்துக்குக் கொண்டு வந்தான். ஷத்திரியர்கள் எல்லோருக்கும் எதிராகக் கடுமையாகப் போர்க் கோலம் பூண்டிருந்த பரசுராமனின் சொல்லொணாக் கோபத்திலிருந்து தப்பித்துக் கொள்ளும் பொருட்டு, பார்வதியின் கட்டளைப்படி, தனது இராச்சியத்தைத் தன்னுடைய சட்டவிரோதமான மகனான காகந்தனிடம் சிறிது காலம் ஒப்புவித்தான். இவன் பிற்காலத்தில் காகந்தி, புகார், காவிரிப்பூம்பட்டினம் ஆகிய பெயர்களில் அழைக்கப்பட்ட சம்பா என்னும் இடத்திலிருந்து ஆட்சி செய்தான்" என்கிறார்"[67] இவர் இதனைக் கதை என்று சொல்வது நோக்கத் தக்கது.

இந்நிலையில், சாத்தனார் கூறும் இக்கதைபற்றி எழும் கேள்விகளும் பல.

பரசுராமன் வரலாற்று மனிதனா? வரலாற்று மனிதனாகவே இருந்திருப்பினும் இவன் சோழநாட்டுக்கு வந்தானா?

காகந்தி என்ற பெயர் காவிரிப்பூம்பட்டினத்திற்கு இருந்ததா? பிற்காலத்ததா, முன்னரேயே இருந்ததா? அப்படியே பழைமையானது எனினும் காகந்தியின் பெயர்க் காரணம் இதுதானா?

தமிழக ஊர்ப்பெயர் வரலாற்றில் பல ஊர்களின் பெயர்க் காரணம் புராணச் சார்புடன் காட்டப்படுவது வெகு சாதாரண இயல்பாக அமைகிற ஒன்று. தெளிவான காரணம் இருப்பினும், புராணச் சார்பு காட்டுவது பல ஊர்களின் வரலாற்றில் காணப்படும் ஒரு நிலை. தமிழக ஊர்ப்பெயர்களின் வரலாறு காலந்தோறும் பல்வேறுகாரணங்களால் ஊர்கள் பெயர் பெற்ற தன்மையைத் தருகிறது. காவிரிப்பூம்பட்டினத்தின் பெயர்க்

---

67. சோழர்கள், பக். 43,44.

காரணம் தெளிவான ஒன்று. காவிரிப்பூம்பட்டினம் தமிழகத்தில் மிகப் பழமையான, சிறந்த, புகழ் பெற்ற ஓர் மூதூர். சங்க காலத்திலேயே இதன் சிறப்பு பாரெங்கும் பரவியிருந்தது. கா-சோலை விரிந்து காணப்பட்ட கடற்கரை ஊர் என்பது இதன் பெயரில் தெளிவுபடுகிறது. தவிர, அக்காலத்துத் தமிழரின் இயற்கைச் சார்ந்த பெயரிடும் மரபு கொண்டும் இது உணரக் கூடிய ஒன்று. இந்த இடத்தின் பெயரே பின்னர் ஊருக்கும் நதிக்கும் பெயராகச் சுட்டப்படத் தொடங்கியதும் தெளிவானது. இருப்பினும் இதற்கும் கதை சொல்லப்படுகிறது. மணிமேகலையில் இக்கதையையும் காணலாம்.

> **கவேரக்கன்னிப் பெயரொடு விளங்கிய**
> **தவாக்களி மூதூர்ச் சென்று பிறப்பெய்துதி**
>
> **–9: 52–53**

இந்நிலையிலேயே 'காகந்தி' என்ற பெயர்க் காரணமும் மேலும் ஆராயப்பட வேண்டியதாக அமைகிறது. காந்தன், காகந்தன் என்ற சோழ அரசர்கள் குறித்து மணிமேகலைக்கு முன்னர் எந்த விதச் செய்திகளும் புலப்படாமையும் இப்பெயர்க் காரணம் குறித்து ஐயம் எழக் காரணம். எனவே இதனை வரலாறாகக் கொள்வதை விடவும் கதையாகக் கொள்வதே சரியானது என்பது அறிஞர்கள் கருத்து. எனவே கதையின் நம்பகத் தன்மை குறையும் நிலையில், இது சார்ந்த அனைத்துச் செய்திகளும் நம்பகத் தன்மை இழக்கின்றன என்பது இங்குச் சுட்டத்தக்கது.

மேலும் மயிலை சீனி வேங்கடசாமி, "காவிரிப் பூம்பட்டினத்தை டாலமி என்னும் யவன ஆசிரியர் சபரீஸ் (Chabaris) என்று கூறுகிறார். பெரிப்புளூஸ் என்னும் கிரேக்க நூலாசிரியர் இந்நகரத்தைக் கமர (Kamara) என்கிறார். இந்த ஆசிரியர்கள் கி.பி. 2ஆம் நூற்றாண்டுக்கு முன்பு இருந்தவர்கள்— பாலிமொழியில் எழுதப்பட்ட பழைய பௌத்த நூல்களிலேயே காவிரிப் பூம்பட்டினம் கவரப்பட்டணம் என்று கூறப்படுகிறது" என்கிறார்.[68] காகந்தன் என்ற அரசன் பெயரால் சூட்டப்பட்ட காகந்தி என்ற பெயர் அன்றே காவிரிப்பூம்பட்டினத்திற்கு இருந்தது என்றால் ஏன் இப்பெயர் யாராலும் சுட்டப்படவில்லை

---

68. சங்ககாலத்துக் காவிரிப்பூம்பட்டினம், ப. 124.

என்ற நோக்கிலும் இதனை அணுகலாம். எனவே இப்பெயர் காவிரிப்பூம்பட்டினத்திற்கு இன்னொரு பெயராக வழங்கப்பட்டிருக்கலாம் எனினும் இது இடப்பட்ட காலம், காரணம் ஆராய்தற்குரியன. பிறநாட்டார்த் தொடர்பு, குடியேற்றம் என மேலும் பல கோணங்களும் இங்கு ஆராயத்தக்கன. இந்நிலையில் தமிழகத்தின் வடஎல்லைக்கு அப்பால் இருந்த காகந்தியும் ஆய்விற்குரியதாக அமைகிறது.

கரிகாலன் தொடர்பு சுட்டும் இந்த இன்னொரு காகந்தி நெல்லூர் மாவட்டம் காகந்தி.

"முதற்குலோத்துங்கச் சோழன் காலத்து அமைந்த சாசன மொன்றில் 'பவித்திரி கோட்டத்துப் பேரூர் நாட்டுப் பவித்திரி' என்றும், 'கடல் கொண்ட பவித்திரிக் கோட்டத்துக் காகந்தியில் பாண்டரங்கேசுவரர்' எனவும் வரும் தொடர்களால் இந்த ரெட்டிபாளத்திற்குப் பவித்திரி, காகந்தி என்பவை பழம் பெயர்கள் என்பது தெரியலாம்" என்பார் மு. இராகவையங்கார்.[69]

தவிர, 'பவத்திரிக் கோட்டத்துப் பேரூர் நாட்டுப் பாண்டரங்கம் உடைய நாயனார்', 'இராஜேந்திர சோழ மண்டலத்துப் பவத்திரி' என்பன பவத்திரி தொடர்பான கல்வெட்டுத் தொடர்கள்.[70]

எனவே இவற்றின் வழியே பவத்திரி கோட்டத்தில் இருந்த ஓர் ஊர் காகந்தி என்பது தெரிகிறது. இக்கல்வெட்டுத் தொடர்கள் பவத்திரி சோழர் ஆட்சியின் கீழ் இருந்ததைத் தெரிவிக்கின்றன. மேலும், நெல்லூர் மாவட்டத்துக் கூடூர் வட்டத்தில் கடலுக்கருகில் ரெட்டிபாளையம் என்னும் சிற்றூர் உள்ளது. அதனைச் சேர்ந்து பாண்டரங்கம் என்னும் மிகச் சிறிய ஊர் உள்ளது. அங்குள்ள சிவன் கோயில் கல்வெட்டுகளே மேற்கூறப்பட்டவை என்றுரைக்கும் தன்மையும்[71] காகந்தியில் இருந்த சிவன்கோயில் பற்றிய முன்னைய கல்வெட்டுச் சான்றும் இன்றும் அது இருப்பதும் காகந்தியின் சிறுபகுதி கடலுக்குள் மூழ்கியிருக்கக் கூடும்; காகந்தி முழுமையாகக் கடலில் மூழ்க வில்லை என்பதைத் தருகிறது.

---

69. இலக்கியச் சாசன வழக்காறுகள், ப. 51.

70. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-1, ப. 153.

71. மேலது, ப. 153.

மேலும் முதல்கல்வெட்டுக் காலத்தில் கடலுக்கு இரையாகாதிருந்த பவ்வத்திரி கோட்டம் அடுத்த கல்வெட்டுக் காலத்தில் கடலுக்கு இரையானமை தெரிகிறது என்ற கருத்து[72] இந்தக் கடல் காகந்தியைக் கொண்டமை பண்டைக் காலத்திய நிகழ்ச்சி அன்று, சோழர் காலத்தில் நிகழ்ந்தது என்பதற்குச் சான்று பகர்கின்றது சோழர் காலத்தில் இந்த இருகல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டமை சரியெனின் இந்த இடைப்பட்ட காலத்தில் கடல் கொண்டதும் நிகழ்ந்திருக்கலாம். எனவே காவிரிப்பூம்பட்டினம் கடல் கொண்டமையும் காகந்தி கடல் கொண்டமையும் தற்செயல் நிகழ்வுகளே தவிர, இதற்குத் தொடர்புகள் இல்லை என்பது தெரிகிறது.

அடுத்து, 'இராஜேந்திர சோழ மண்டலத்தில் பவ்வத்திரி கோட்டத்தில் பேரூர் நாட்டில் காகந்தி நகர்' என்று குறிப்பிடும் தன்மை, இந்தக் காகந்தி பவத்திரி கோட்டத்தினுள் இருந்த ஓர் ஊர் என்பதைத் தெரிவிக்கிறது. காகந்தி சங்க காலத்திலேயே இருந்ததா அல்லது பிற்காலத்தில் பவத்திரியில் இருந்த இடமொன்று பெற்ற பெயரா என்பது தெளிவுபெறவில்லை. பவத்திரி பற்றிச் சங்க இலக்கியம் சுட்டுகிறது.

> செல்லா நல்லிசைப் பொலம்பூண் திரையன்
> பல்பூங்கானற் பவத்திரியன இவள்
> நல்லெழில் இளநலம் தொலைய ஒல்லெனக்
> கழியே ஓதம் மல்கின்று வழியே —அகம். 340:6–9

திரையனின் ஊர் என்றும் திரையனின் தலைநகர் என்றும் கொள்ள இடம்தரும் பவத்திரி தமிழகப் பகுதியாக இருந்திருக்கிறது என்பது இங்குத் தெரியவருகிறது எனினும் இவ் ஊர்ப்பெயரின் காரணமும் பல்வேறாகச் சுட்டப்படுகிறது. தெளிவு கிடைக்கவில்லை. இந்நிலையே பவத்திரியின் பகுதியாக இருந்த காகந்திக்கும் பொருள் புலப்படவில்லை. மரூஉப் பெயரா என்பதும் தெரிய வில்லை. மேலும் காகந்தி என்ற ஊர் அன்றே இருந்ததா இல்லையா என்பதற்கும் சான்றில்லை. காகந்தி சங்க காலத்திலேயே இருந்தது என்றால் கரிகாலன் பெயரிட்டு மக்களைக் குடியேற்றினான் என்ற கருத்து வலுவற்றுப் போகும். மேலும் அன்றே இருந்தது என்றால் குடியேற்றங்கள் ஒரே

---

72. மேலது, ப. 153.

பெயரைப் பல ஊர்கள் பெற வழி வழிக்கும் என்ற நிலையில் இந்தக் காகந்தி தொடர்பு சோழநாட்டிற்கும் ஏற்பட்டு, காகந்தி என்ற பெயர் காவிரிப்பூம்பட்டினத்திலும் ஓர் இடம் பெயர் பெறக் காரணமாக இருந்திருக்கும். எனவே இப்பெயர்கள் தெளிவான வரலாற்றைத் தராத நிலையில், சோழர்க்கும் நெல்லூரில் உள்ள காகந்திக்கும் உள்ளதொரு தொடர்பை இப்பெயர்கள் காட்டுகின்றன எனக் கொள்ளலாமே ஒழிய, கரிகாலனுக்கும் இப்பெயர்கள் இடப்பட்ட முறைக்கும் தொடர்பு காண இயலவில்லை என்பதையே இங்கு எண்ணத் தோன்றுகிறது.

எனவே கரிகாலன் காஞ்சித் தொடர்புக்கு உறுதியான சான்றாகக் காகந்தியும் அமையவில்லை என்றே குறிப்பிட வேண்டியிருக்கிறது.

ஊர்ப்பெயர்களுக்குப் புராணக் காரணம் காட்டுதல் பல ஊர்ப்பெயர் வரலாறுகளிலும் காணப்படுகிறது என்பது முன்னர்க் குறிப்பிடப் பெற்றது. ஏதோ ஒரு காகந்திக்குப் பெயர்க் காரணம் காண முனைந்ததன் விளைவாகத் தோன்றியதாக மணிமேகலை சுட்டும் கதை இருத்தல் கூடும். பின்னர் இக்கதை கரிகாலனுக்கும், பிறிதொரு காகந்திக்கும் தொடர்பு படுத்தப்படத் தொடங்கியிருக்க வேண்டும். இவற்றுடன் பட்டினப்பாலையில், கரிகாலன் செய்த உறந்தைப்பணிகளையும் கரிகாலன் வடபகுதி தொடர்புக்குரிய சான்றாக அறிஞர் சுட்டுகின்றனர்.

"கரிகாலன் காடு கொன்று நாடாக்கினான் என்று பட்டினப்பாலை பகர்கிறது (283) இங்ஙனம் அவன் செய்தது கடப்பை, கர்நூல் மாவட்டங்களையேயாகும். அம் மாவட்டங்களைச் சேர்ந்த நிலப்பகுதி கி.பி. 6, 7ஆம் நூற்றாண்டுகளில் ரேநாண்டு எனப்பெயர் பெற்றது" என, டாக்டர் மா.இராசமாணிக்கனார் குறிப்பிடுகின்றார்.[73]

பி.டி.சீனிவாச ஐயங்கார் அவர்களும் இக்கருத்து உடையவரே. "இப்பாட்டு கரிகாலன் காடுகளை அழித்து அவற்றையெல்லாம் வாழிடங்களாக மாற்றினான் என்றும் கூறுகிறது. அது சோழ நாட்டில் நிகழ்ந்ததாக உரையாசிரியர் விளக்கம் கூறுகிறார். ஆனால் சோழநாடு முழுவதும் இம் மன்னனுக்கு நெடுங்காலத்துக்கு முன்பிருந்தே மக்களால் வாழப்பட்டு விட்டது. ஆகவே இச்செயற்கருஞ்செயல் மிக மிகக்

---

73. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 246.

குறைவாக மக்கள் தொகையினை உடையவாய கடப்பை, கர்நூல் மாவட்டங்களையே குறிப்பதாகும்" என்கிறார்.[74]

உரையாசிரியர்களின் உரையை மறுத்து விடுகிறார்கள் இவர்கள். ஆயின் பாடலடிகளை நோக்க உரையாசிரியர்கள் உரையே பொருத்தமாக அமைகிறது.

'இருங்கோவேள் மருங்கு சாய' எனக் கூறிய உருத்திரங் கண்ணனார், தொடர்ந்து

> காடு கொன்று நாடாக்கிக்
> குளந் தொட்டு வளம் பெருக்கிப்
> பிறங்கு நிலை மாடத் துறந்தை போக்கிக்
> கோயிலொடு குடி நிறீஇ
> வாயிலொடு புழையமைத்து
> ஞாயிறொறும் புதைநிறீஇ —பட்டினப். 283–288

எனக் கூறிச் செல்கிறார்.

வீரமிக்க கரிகாலன் பலரையும் பணியவைத்தான் என இருங்கோவேளைச் சொல்லி அச் செய்தியை முடித்தவர், தொடர்ந்து அவன் குடிமக்களைப் பேணியமையையும் அவர்கள் வளமாக வாழ வழிச் செய்ததையும் சொல்லி அவன் வீரத்தைச் சொல்கின்றார். இந்நிலையில் அவன் செய்த செயல்கள் இங்கு இயம்பப்படுகின்றன.

அவன் உறந்தையை விரிவுபடுத்துகின்றான். காடுகளை அழித்து நாடாக்குகின்றான். குளம் பல அமைக்கிறான். அதனால் வளத்தைப் பெருக்குகிறான். அங்குக் கோயில் அமைத்துக் குடிமக்களையும் தங்கச்செய்கிறான் எனச் சொல்லும்போது 'உறந்தை' பற்றிய செய்திகள் தான் இங்கு இடம் பெறுகிறதே தவிர, தமிழகத்தின் வடபகுதியையோ அல்லது பிற எந்தப் பகுதியையுமோ குறிப்பிட்டுப் புலவர் சொல்லவில்லை என்பது நோக்கத்தக்கது. போக்குதல் என்பதற்கு விரிவுபடுத்துதல் என்ற உரையாசிரியர்கள் கருத்து, இங்குப் பொருத்தமானதாகவும் அமைகிறது.

ஆயின் மேலே சுட்டிய இரண்டு அறிஞர்களும் இக்கருத்தை, கடப்பை, கர்நூல் மாவட்டங்களுக்குரியதாகச்

---

74. தமிழர் வரலாறு, II, ப. 16.

சொல்கின்றனர். எனினும் இவர்கள் இருவருமே இந்தப் பாட்டுப் பகுதி உறந்தையைக் குறிப்பது என்று இன்னோரிடத்தில் விளக்குகிறார்கள்.

"பற்பல நிலைகளைக் கொண்ட மாளிகைகளைக் கொண்ட உறையூரில் திருக்கோயில்களோடு மக்கள் குடியிருப்புகளையும் நிறுவினான். பெரிய வாயில்களோடு சிறு சிறு வாயில்களையும் அமைத்தான். அந்நகரைச் சூழ உள்ள மதில்கள் தோறும் அம்புக் கட்டுக்கள், படைக்கலப் பொறிகளையும் நிறுவினான்.

> பிறங்கு நிலை மாடத்துறந்தை போக்கிக்
> கோயிலொடு குடி நிறீஇ
> வாயிலொடு புழையமைத்து
> ஞாயில் தொறும் புதை நிறீஇ -பட்டினப். 283-288

என்பது பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்து. எனவே இங்கு இப்பகுதி உறந்தை சார்ந்தது என்பதை ஏற்றுக் கொண்டவர் (பக்.12, 13) பின்னர் (ப. 16) இதன் இடையில் அமையும் ஒரே தொடரான 'காடு கொன்று நாடாக்கி' (பட். 283) என்பது சோழநாட்டில் நிகழ்ந்தது இல்லை என்று கூறுகிறார்.[75]

இதே போன்று மா.இராச மாணிக்கனாரும் "உறையூர் வளம் மிகுந்த சோழ நாட்டிற்குத் தலை நகராய் விளங்கியது. அது காஞ்சியைப் போலவும் மதுரையைப் போலவும் கோட்டை கொத்தளங்களுடன் பாதுகாப்பு மிகுந்த நகரமாக இருந்தது. உயர்ந்த மாடங்களைக் கொண்ட வளமனைகளைப் பெற்றிருந்தது. திருமகள் நிலை பெற்ற செல்வ வளத்தையும் பெற்றிருந்தது. கோட்டைச் சுவரில் பெரிய வாயில்களும் சிறிய வாயில்களும் அமைந்திருந்தன. மதிற் சுவர் மீது எய்து மறையும் கூட்டுகள் அமைந்திருந்தன (ப.பாலைஅடி 289-291)" என்று எழுதியுள்ளார்[76] ஆயின் பின்னர் இவரே 'காடுகொன்று நாடாக்கி' என்பது கடப்பை மாவட்டங்களைக் குறிக்கும் என்று கூறுகிறார்.[77]

எனவே கரிகாலன் உறந்தையைச் சீர் செய்த தன்மையை இப்பாடலடிகளில் உருத்திரங்கண்ணனார் குறித்துச் செல்கிறார்

---

75. மேலது, பக். 12, 13, 16. 76. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 177.

77. மேலது, ப. 246.

என்பதே பொருத்தமாக அமைகிறது. தவிர, எந்த விதத்திலும் இவை கர்நூல் மாவட்டங்களைக் குறிப்பன என்பது இங்கு விளக்கம் பெறவில்லை. மேலும் வடவர் வாட, குடவர் கூம்ப எனச் சொல்லி அடுத்து இருங்கோவேளைச் சுட்டுகிறார் புலவர். "இருங்கோவேள் என்ற குறுநிலத் தலைவன் புதுக்கோட்டை மாவட்டத்தில் திருச்சிராப்பள்ளி, மதுரை நெடுஞ்சாலைக்கண் உள்ள பழைய நகராம் கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு சோழநாட்டிற்குத் தெற்கேயுள்ள மாவட்டங்களை ஆண்டிருந்தான்" என, பி.டி.சீனிவாச ஐயங்கார் கருத்தே அமைகிறது.[78]

எனவே கரிகாலன் காஞ்சியை வென்றான், பொன்வேய்ந்தான் என, காஞ்சியுடன் கரிகாலன் கொண்ட தொடர்புக்கு அறிஞர் சுட்டிய சான்றுகள் அனைத்தும் ஐயத்திற்கு அப்பாற்பட்டனவாக இல்லை என்பதே இங்குக் கிடைத்த முடிவாக அமைகிறது. இருப்பினும், தமிழகத்தின் வடபகுதியில் பிற்காலத் தெலுங்குநாட்டுச் சோழர் தம்மைக் கரிகாலன் மரபினர் எனக் கூறிக்கொள்ளும் செய்தியும்,[79] சோழர் பற்றிய செய்தியும்[80] விளக்கம் அளிக்கப்படவேண்டிய வரலாற்றுச் செய்திகள்.

கரிகாலன் பேரரசன். சங்க காலச் சோழர்களுள் தன்னிகரற்று விளங்கியவன். இவனது ஆட்சியில் தமிழகம் முழுவதும் இவனிடம் பணிந்திருந்தது என்பது தெளிவு. எனவே, காஞ்சியும் இதனுள் அடங்குகிறது. ஆயின் இவன் காஞ்சிக்குச் சென்றானா? காஞ்சியை ஆண்டானா? பொன் வேய்ந்தானா என்பனவே இங்கு ஐயம் தீர்க்கப்படவேண்டிய வினாக்கள்.

மேலே கண்ட சான்றுகள் அனைத்தும் கரிகாலன் காஞ்சிக்குச் சென்றதை உறுதிப்படுத்தாத நிலையில், தன் வெற்றிக்குப் பின்னர், தன் மரபுசார்ந்த சோழன் ஒருவனை இங்கு அமர்த்தியிருக்கலாம். எனினும் இதில் தெளிவில்லாத நிலையில் கரிகாற் சோழனுக்குப் பின்னர் சிதறுண்டு போன சோழ மரபினர் வழிவந்தவர்களாக வடபகுதி சோழர்களைக் கருதலாம். இவர்கள் தங்கள் குலப்பெருமையைக் காட்ட, கரிகாலனைத் தங்கள் முன்னோன் எனக் கூறி வாழ்ந்து வந்திருக்கலாம். இதுவே

---

78. தமிழர் வரலாறு II, ப. 15. 79. பல்லவர் வரலாறு, ப. 4.
80. மேலது, ப. 9.

வடநாட்டுச் சோழர் கரிகாலன் மரபினர் எனச் சொல்லிச் சென்றனர் என்று அறிஞர் கூறும் செய்திக்குரிய காரணமாக இருக்கலாம். கரிகாலன் காஞ்சி தொடர்பு இந்த அளவிற்கே கி.பி. 6-க்கு முன்னைய வரலாற்று மூலங்களினின்றும் பெறப்படுகிறது. பிற்காலச்சோழர் பற்றிய செய்திகளும் இந்த அளவிற்கே இக்கருத்து குறித்துச் சிந்திக்க இடம் கொடுப்பனவாக அமைகின்றன. "பிற்காலப் பல்லவர் ஆட்சியில் சோழவம்சத்தில் ஒரு பிரிவு ராயல் சீமைப் பகுதிக்குக் குடியேறி இப்போது கடப்பை மாவட்டம் என்று சொல்லப்படும் பகுதியில் உள்ள ரேநாடு என்னும் ஊரிலிருந்து ஆட்சி செய்து வந்தனர். பிறகு அவர்கள் நெல்லூர் மாவட்டத்தில் உள்ள பாகநாடு என்னும் இடத்துக்குக் குடிபெயர்ந்தார்கள். தெலுங்குக் கல்வெட்டுகளில் மிகப்பழமையானவை ரேநாட்டுச் சோழர்கள் பொறித்த கல்வெட்டுகளே" என்ற சோமலெ கருத்தும்[81] இங்கு அரணாகிறது.

"சங்க காலத்தில் கரிகாற் பெருவளத்தானின் காலத்திற்குப் பின்னர் வீழ்ச்சியுற்று இருக்குமிடம் தெரியாமல் போன சோழமரபு அறுநூறு ஆண்டுகளுக்குப்பின்னர் விசயாலயச் சோழமன்னன் தலைமையில் மீண்டும் ஏற்றம் பெற்றுப் புதிய உருவெடுத்தது.[82]

கி.பி. 3 அல்லது 4ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.9 நூற்றாண்டு வரை (விசயாலயர் சோழர் காலம் வரை) சோழர் வரலாறு முற்றிலும் காணாமல் போய் விடவில்லை. அது தெளிவற்ற ஒன்றாகவே இருந்தது. விசயாலயனுக்கு முற்பட்ட காலத்தைச் சாத்திரியார் 'வரலாற்று இருண்ட காலம்' என்று குறிப்பிட்டுள்ளார். இக்காலத்தில் சோழர்வரலாறு தொடர்ச்சியாகக் கிடைக்க வில்லை. துண்டு துண்டான தொடர்பற்ற வரலாறாகக் கிடைத்தது. விசயாலயனுக்கு முன் 44 சோழ அரசர்கள் ஆண்டதாகத் திருவாலங்காட்டுச் செப்பேடுகளும் 52 அரசர்கள் ஆண்டதாகக் கன்னியாகுமரி கல்வெட்டுகளும் குறிப்பிடுகின்றன. அன்பில் பட்டயங்கள் கரிகாலன் கிள்ளிவளவன் கோச்செங்கணான் உள்ளிட்ட

---

81. தமிழும் தெலுங்கும், ப. 220.

82. தமிழ்நாட்டு வரலாறு, சோழப் பெருவேந்தர் காலம் முதல்பகுதி, ப. 73.

பதினைந்து சோழ அரசர்கள் பற்றிக் கூறுகின்றன" என்பன தமிழ்நாட்டு வரலாறு கூறும் செய்திகளாகும்.[83]

எனவே இச்சோழ அரசர்கள் கரிகாலனுக்குப்பின் தமிழகத்தின் பல பாகங்களிலும், தமிழகத்திற்கு வடக்கேயும் சிறு சிறு பகுதியினராக வாழ்ந்து வந்திருக்கலாம். கரிகாலன் மரபு எனக் கூறிக் கொண்டமை இவர்களுக்குப் பெருமை அளிப்பதாக உறுதியாக இருந்திருக்க வேண்டும். இந்நிலையில் மேலும் சோழர்களின் முழுவரலாறும் தெரிய வரும் நிலையிலேயே கரிகாலனுக்கும் காஞ்சிக்கும் தொடர்பிருந்ததா? என்ற கேள்விக்கு விடை கிடைக்கும்.

கரிகாலனுக்குப் பின்னர் காஞ்சித் தொடர்புடையவர்களாகச் சில சோழர்கள் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன.

மணிமேகலையில் சுட்டப்படும் சோழன்
பல்லவர் செப்பேடு மூலம் தெரியவரும் சோழன்
முத்தொள்ளாயிரம் பாடல் சுட்டும் சோழன்

## 1.3.2. மணிமேகலையில் சுட்டப்படும் சோழன்

மணிமேகலையில் சாத்தனார் சில சோழ மன்னர்கள் பற்றியியம்புகிறார். இவர்கள் இருபிரிவினர். காவிரிப்பூம்பட்டினம் ஆண்ட சோழர்கள் ஒரு பிரிவினர். இன்னொரு பிரிவினர் காஞ்சி ஆண்டோர். எனினும் சாத்தனார் காப்பியமும் சோழ மன்னர் பற்றிய தெளிவான செய்தியைத் தருவதாகக் கூற இயலவில்லை. மணிமேகலைக் காப்பியம் காட்டுவதற்கிணங்க இளங்கிள்ளி என்ற அரசர் காஞ்சியை ஆண்டதாகக் கருத்துத் தெரிவிக்கின்றனர் அறிஞர்கள். இருப்பினும் இவன் வரலாற்று மனிதனா என்பது கேள்விக்குறி.[84] இளங்கிள்ளி பற்றித் தெரிய வருகிறதே தவிர மணிமேகலைக் காலத்தில் ஆண்ட அரசன் இவனா? என்பது இந்தக் காப்பிய வரிகளே எழுப்பும் ஐயம்.

கச்சி என்றும் காஞ்சி என்றும் சுட்டப்படும் இம்மூதூர் பல இடங்களில் சாத்தனாரால் சுட்டப்படுகிறது.

கந்திற்பாவை மணிமேகலையின் எதிர்காலம் பற்றிக் கூறுமிடத்து,

---

83. மேலது, ப. 73.    84. காஞ்சிபுரம் மலர், ப. 71.

மன்னுயிர் நீங்க மழைவளம் கரந்து
பொன்னெயிற் காஞ்சி நகர் கவினழிய
ஆங்கது கேட்டே யாருயிர் மருந்தாய்
ஈங்கிம் முதியா ளிடவயின் வைத்த
தெய்வப் பாத்திரஞ் செவ்விதின் வாங்கித்
தையனிற் பயந்தோர் தம்மொடு போகி
அறவணன் தானுமாங்குள னாதலிற்
செறி தொடி காஞ்சி மாநகர் சேர்குவை
அறவண னருளா லாய்தொடி யவ்வூர்ப்
பிறவண மொழிந்து நின் பெற்றியை யாகி
வறனோ டுலகின் மழைவளந் தரூஉம்
அறனோ டேந்தி யாருயி ரோம்புவை
ஆய்தொடிக்கு அவ்வூர் அறனொடு தோன்றும்
ஏது நிகழ்ச்சி யாவும் பலவுள
.... .... ........
பாங்கிய னல்லறம் பலவுஞ் செய்தபின்
கச்சி முற்றத்து நின்னுயிர் கடைகொள –21:147–174

என்று தொடர்ந்து சாத்தனார் சொல்லிச் செல்லும் தன்மையைக் காண்கிறோம். கச்சி பற்றிய செய்திகளில் அதன் அரசன் பெயர் பற்றிய குறிப்பில்லை. ஏன் என்ற கேள்வி எழுகிறது. மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகமாக விளங்கிய நாளில் கச்சி அரசர் பற்றி இங்குச் சுட்டப்படாதது ஏன் என்பது ஒரு கேள்வி.

அடுத்து இதன் விரிவான விளக்கம் பின்னர் கச்சி மாநகர்ப் புக்க காதையில் தொடங்குகிறது.

ஆங்கவன் தானு நின்னறத்திற் கேதுப்
பூங்கொடி கச்சி மாநகராதலின்
மற்றம் மாநகர் மாதவன் பெயர் நாட்
பொற்றொடி தாயரு மப்பதிப் படர்ந்தனர்
அன்னதை யன்றியும் அணியிழை கேளாய்
பொன்னெயிற் காஞ்சிநாடு கவினழிந்து
மன்னுயிர் மடிய மழைவளம் கரத்தலின்
அந்நகர் மாதவர்க் கையமிடுவோர்
இன்மையின் இந்நகர் எய்தினர் காணாய்
ஆருயிர் மருந்தே அந்நாட்டகவயின்
காரெனத் தோன்றிக் காத்தனின் கடனென
அருந்தவன் அருள ஆயிழை வணங்கிச் –28: 151–162

என, மணிமேகலை கச்சிக்குச் செல்லுதலில் தொடங்கி, கச்சி அறிமுகம் ஆகிறது. சோழன் பற்றிய குறிப்பொன்றும் கிடைக்கின்றது.

> தேவர் கோமான் காவன் மாநகர்
> மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
> பொன்னகர் வறிதாப் புல்லென்றாயது
> கண்டுளங் கசிந்தவொண்டொடி நங்கை
> பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங்கொண்டு
> நடுநகர் எல்லை நண்ணினள் இழிந்து
> தொடுகழற் கிள்ளி துணையிளங்கிள்ளி
> செம்பொன் மாச்சினைத் திருமணிப்பாசடைப்
> பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய
> சேதியந் தொழுது தென்மேற்காகத்
> தாதணி பூம்பொழி றான் சென்றெய்தலும்
> வையங் காவலன் றன் பாற் சென்று
> கைதொழுதிறைஞ்சிக் —28:166-178

சேதியம் இயற்றியவன் தொடுகழற்கிள்ளி துணையிளங் கிள்ளி என்பது இங்குக் கிடைக்கும் ஒருகுறிப்பு. தொடுகழற் கிள்ளியின் தம்பி இளங்கிள்ளி. கிள்ளி-சோழன் என்பது உ.வே.சா. அரும்பதவுரை.[85] எனவே புத்த பகவானுக்குச் சேதியம் இயற்றியவன் இளங்கிள்ளி என்பது இங்குத் தெளிவாகிறது. இந்தச் சேதியம் (ஜைன, பௌத்தரின் பள்ளி, தமிழ்ப் பேரகராதி, ப. 1630) மணிமேகலை வருவதற்கு முன்னரே அமைக்கப்பட்டது என்பதும் இங்குத் தெளிவுபடுகிறது. இந்த நிகழ்ச்சியைக் கஞ்சுகன் வையங் காவலனாகிய கச்சி அரசனுக்குச் சென்று உரைக்கின்றான். இங்கு இளங்கிள்ளி என்ற பெயர் குறிப்பிடவில்லை. வையங்காவலன் என்று பொதுவாகவே மன்னன் குறிப்பிடப்படுகிறான். அடுத்து வரும் இடங்களிலும் மன்னன் பெயர் சுட்டப்பட வில்லை.

மந்திரச் சுற்றமொடு மன்னனும் விரும்பி (28:184) மணிமேகலையைச் சென்று காண்கின்றான். பொய்கையும் பொழிலும் புனைமின் என்றறைந்தத் தெய்வதம் போயபின் (மணி.28: 204-205) அமைத்ததிவ்விடம் என மன்னன் காட்டுகிறான்.

---

85. மணிமேகலை மூலமும் அரும்பதவுரையும், ப. 340.

> தீவகம் போன்ற காவகம் பொருந்திக்
> கண்டுளஞ்சிறந்த காரிகை நல்லாள்
> பண்டையெம் பிறப்பினைப் பான்மையிற் காட்டிய
> அங்கப் பீடிகை யிதுவென' –28: 207–210

என மணிமேகலை சொல்ல,

> விழவும் சிறப்பும் வேந்தனியற்ற –28: 207–215

எனச் செல்கிறது இப்பகுதி

உரையாசிரியர் உ.வே.சா. இந்த அனைத்து இடங்களிலும் துணையிளங்கிள்ளி என உரை எழுதினாலும், துணையிளங் கிள்ளி அல்லது இளங்கிள்ளி என்ற பெயர் ஏன் சாத்தனாராற் ஓரிடத்தும் சுட்டப்படவில்லை என்ற கேள்வி எழுகிறது. எனவே இந்தப் பகுதியை நோக்க இர்ண்டு எண்ணங்கள் எழுகின்றன.

1. மணிமேகலை காஞ்சிக்கு வந்த பொழுது இருந்த அரசர் பெயர் தெளிவாகக் குறிப்பிடப்படாத நிலையில், ஓர் அரசன் ஆண்ட செய்தி மட்டும் இங்கே கொள்ளத்தக்கதாக அமைகிறது.
2. துணையிளங்கிள்ளி அமைத்த சேதியம் என்னும் நிலையில் மணிமேகலை காலத்திய அரசன் பெயர் தெரியவில்லை எனினும், மணிமேகலை காலத்திற்கு முன்னர் 'இளங் கிள்ளி' என்ற பெயர்க் கொண்ட சோழ அரசன் ஒருவன் இப்பகுதியை ஆண்டிருக்கிறான் என்பது உறுதியாகிறது. இவன் புத்தமதத்தவன் அல்லது புத்தமதத்திற்கு ஆதரவு தந்தவன் என்ற நிலையில், சேதியம் கட்டுவித்துள்ளான் என்பதும் தொடர்ந்து மணிமேகலை காலத்து அரசர்களும் புத்தமதத்திற்கு ஆதரவாகச் செயல் புரிந்து வந்துள்ளனர் என்பதும் தெளிவுபடுகிறது. வேறு எந்தச் செய்திகளும் தெளிவு பெறவில்லை.

### 1.3.3. பல்லவர் செப்பேடு மூலம் தெரியவரும் சோழன்

பல்லவர் செப்பேடு சுட்டும் சோழர் பற்றிய செய்தியும் இத்தகையதே.

காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடப்பட்டவை முதற் பல்லவரின் பிராகிருதச் செப்பேடுகள். இவற்றில் சோழர் பற்றிய எந்த விதக் குறிப்பும் காணயியலவில்லை. ஆயின் மூன்றாம் நந்திவர்மனுடைய வேலூர்ப் பாளையச் செப்பேடுகளில்

பல்லவரின் மரபு பற்றிய விளக்கம் முதலில் அமைகிறது. அவற்றுள்,

"சுலோகம்-8: காஞ்சிபுரத்தைக் கைப்பற்றியவனும் பல போர்களிலே வெற்றி கொண்டவனுமான குமாரவிஷ்ணு உண்டானான். சமுத்திரம் போன்ற சோழர்களுடைய சேனைக்கு வடவாக்னியான புத்தவர்மன் பிறகு அரசனானான்".[86]

இந்தச் சுலோகத்தின் படி, சோழர்களைப் புத்தவர்மன் வென்றிருக்கிறான் என்ற ஒரு செய்தி தெரிகிறது. தவிர, எங்கு வென்றான்? சோழர்கள் காஞ்சியிலிருந்தார்களா? இல்லை சோழர்நாட்டிற்குச் சென்று புத்தவர்மன் வென்றானா? போன்ற எந்தச் செய்தியும் தெளிவாகத் தெரியவில்லை. எனினும், இது குறித்து, மா.இராசமாணிக்கனார் 'குமாரவிஷ்ணு காஞ்சியைக் கைப்பற்றிய பின், தெற்கே இருந்து தமக்கு இடையறாத துன்பத்தை யுண்டாக்கி வந்த களப்பிரரைத் வெல்லவோ அல்லது எஞ்சிய தொண்டை நாட்டையும் சோணாட்டையும் கைப்பற்ற வேண்டும் என்ற ஆர்வத்தாலோ புத்தவர்மன் தன் படையுடன் சென்றான். பல்லவரை எதிர்க்கச் சோழரும் களப்பிரருடன் சேர்ந்திருப்பர். போரின் விளைவு தெரிந்திலது. எனினும் இப்போரில் புத்தவர்மன் வெற்றி பெற்றதாகக் கூற இடமில்லை. ஏன்? கி.பி. 575 இல் அரசனாக வந்த சிம்மவிஷ்ணுவே காவிரி வரையுள்ள நாட்டை வென்றவனாதலின் என்க. எனவே காஞ்சி மீது படையெடுத்து வந்த களப்பிரரையும் சோழரையும் புத்தவர்மன் விரட்டி இருக்கலாம். மேற்கொண்டு தெற்கு நோக்கிப் போகவில்லை எனக் கோடலே பொருத்தமாகும் என்கிறார்.[87]

### 1.3.4. முத்தொள்ளாயிரம் பாடல் சுட்டும் சோழன்

முத்தொள்ளாயிரத்தில் இடம்பெறும்,

**கச்சி ஒருகாற் மிதியா ஒருகாலால்**
**தத்துநீர் தண்ணுஞ்சை தான் மிதியா- பிற்றையும்**
**ஈழம் ஒருகால் மிதியா வருமே நங்**
**கோழியர் கோக்கிள்ளி களிறு** – 49

என்ற பாடலில் சோழமன்னன் ஆட்சியில் கச்சி இருந்திருக்கிறது என்ற செய்தி தெரிகிறது. பிற செய்திகள் எதுவும் தெரியவில்லை.

---

86. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 259.
87. பல்லவர் வரலாறு, ப. 73.

இருப்பினும் இந்தக் கிள்ளிக்கும், மணிமேகலை சுட்டும் இளங்கிள்ளிக்கும் தொடர்புண்டா என்ற நோக்கில் ஆராயலாம். இந்நிலையில் காஞ்சியுடனான சங்ககாலச் சோழர்த் தொடர்பு இந்த அளவிலேயே தெரிய வருகின்றன.

## 1.4. பல்லவர்கள்

தமிழக வரலாற்றில் பல்லவர் வரலாறு புகழ் பெற்ற தொரு வரலாறு. காஞ்சியின் வரலாற்றில் தனிச் சிறப்புடையதொரு வரலாறு. காஞ்சியின் வரலாற்றினின்று பல்லவர் வரலாற்றையும், பல்லவர் வரலாற்றினின்று காஞ்சியின் வரலாற்றையும் பிரித்தல் என்பது இயலாது. இத்தகைய ஒன்றறக் கலந்து விட்ட வரலாறு காஞ்சி பல்லவர் வரலாறு.

பல்லவர் ஆண்ட காஞ்சியின் வரலாற்றைத் தெளிவு பெற உணர்ந்து கொள்ள பல வரலாற்று மூலங்கள் நமக்கு உறுதுணையாக அமைகின்றன. கல்வெட்டுகள், செப்பேடுகள், இலக்கியங்கள், பல்லவரின் கலைப்பணிகள் போன்ற பல பல்லவரின் வரலாற்றை எடுத்துணர்த்தும் தன்மையில் அங்குக் காஞ்சியின் சிறப்பும் வெளிப்படுகிறது. சிறந்த ஆட்சியாளர்களாக, கலை விற்பன்னர்களாக, சமயப்பற்றாளர்களாக இவர்கள் திகழ்ந்தமையை இந்த மூலங்கள் தெளிவாக உணர்த்துகின்றன. இவர்தம் ஆட்சியில் காஞ்சி தழைத்தோங்கிய திறத்தையெல்லாம் பல வரலாற்று ஆசிரியர்கள் இம் மூலங்கள் வழியுணர்ந்து சிறந்த நூல்களை ஆக்கித் தந்துள்ளனர். ஆயின் இவ்வரலாற்றுச் சிறப்புகள் தெளிவாகத் தெரிவது எல்லாம் சிம்மவிஷ்ணுவுக்குப் பின்னைய அதாவது கி.பி.6-க்குப் பின்னைய காஞ்சிப் பல்லவரின் வரலாற்றுக்குத் தான். இவர்கட்கு முன்னைய முதற்கால, இடைக்காலப் பல்லவர் காலத்திய அவர் தம் வரலாறும் அவர்தம் காஞ்சித் தொடர்பும் தெளிவற்ற வரலாறாகவே இன்றும் காணப்படுகிறது. அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிறு ஒளிக்கிறல்கள் தெரியினும் பொதுவாக இருண்ட வரலாறு தான்.

காஞ்சிக்குப் பல்லவர் எப்போது வந்தனர்? எப்போது காஞ்சியை ஆளத் தொடங்கினர்? யாரிடம் இருந்து காஞ்சியைப் பெற்றனர்? தொடர்ந்து ஆண்டனரா? இவர்களின் ஆட்சியின் சிறப்பு என்ன? போன்ற பல கேள்விகளுக்குரிய விடையில் தான் முதற்கால, இடைக்காலப் பல்லவருக்கும் காஞ்சிக்கும் உள்ள தொடர்பு தெளிவு பெறும். அறிஞர்கள், வரலாற்று ஆசிரியர்கள்

பலர் இக்கேள்விகளுக்குப் பதில் காண மிகவும் முயன்றுள்ளனர். எனினும் முழுமையும் துல்லியமும் பெற வரலாற்று மூலங்கள் துணைபுரியவில்லை. எனவேதாம் டாக்டர் மீனாட்சி, இது தொடர்பாக அறிஞர்களிடம் பல மாறுபட்ட சிந்தனைகள் இருப்பதைக் குறிப்பிடுகின்றார்.[88]

சிம்மவிஷ்ணு பல்லவனுக்கு முன்னைய பல்லவரைப் பற்றி அறிந்து கொள்ளத் துணை புரியும் வரலாற்று மூலங்கள் ஒரு சிலவே. இதனைப் பற்றியியம்பும் டாக்டர் மா.இராசமாணிக்கனார், "சங்க நூல்களில் பல்லவர் என்பவர் பற்றிய குறிப்பே காணல் இயலாது. ஆனால் சங்க நூல்களின் காலமாகிய கி.பி. 2ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட நூல்களில் பல்லவர் குறிக்கப்பட்டுள்ளனர்'' எனக் குறிப்பிட்டு, அவற்றைத் தருகின்றார்.[89] இவற்றுள்ளும் தமிழ் மொழி சார்ந்தன எவற்றையும் காணல் இயலவில்லை. லோக விபாகம், அவந்தி சுந்தரி கதை என்ற இரண்டு நூல்களைக் குறிப்பிடுகின்றார். இரண்டும் வடமொழி நூல்கள்.[90] முற்காலப் பல்லவர் காலத்திய செப்பேடுகளாகக் காணப்படும் 'பல்லவர் செப்பேடுகள் முப்பது' நூல் தொகுத்துத்தரும் செப்பேடுகளும் பிராகிருத மொழிச் செப்பேடுகளும், வடமொழிச் செப்பேடுகளும் தான்.

எனவே முதற்கால, இடைக்காலப் பல்லவர்க்கும் காஞ்சிக்கும் உரிய தொடர்பு காண முற்படும் போது தமிழ் மொழியில் இவர்தம் வரலாறு குறித்து எந்த ஒரு சான்றும் கிடைக்கவில்லை என்பதை முதலில் நினைவு கூர்ந்து மேலே குறிப்பிட்ட பிற மொழித் தரவுகளின் மொழி பெயர்ப்புகள், பிற மொழிச் சான்றுகள் கொண்டு இவ்வரலாற்றை அறிய முயன்றுள்ளனர் வரலாற்று ஆசிரியர்கள். எனினும் முழுமை யென்பது கிடைக்க இச்சான்றுகள் துணையாகவும் இல்லை; போதுமானதாகவும் இல்லை என்றே சொல்ல வேண்டும்.

---

88. The origin of the Pallavas constitutes one of the mysteries in Indian history. Their origin, original home, family affinities. geneology as well as the process by which they attained the chief power among the rulers of South India remain even now subjects of controversy among the scholars of Indian history - Administration and Social life under the Pallavas, p.3.

89. பல்லவர் வரலாறு, ப. 15. 90. மேலது, பக். 15, 16.

இந்நிலையிலேயே இங்கும் காஞ்சிக்கும் பல்லவர்க்கும் உரிய தொடர்பு காணும் நிலை அமைகிறது.

### 1.4.1 முதற்காலப் பல்லவர்களும் காஞ்சியும்

பிராகிருத மொழிச் செப்பேடுகள் வெளியிட்ட பல்லவர்களை முதற்காலப்பல்லவர்கள் என வரலாற்று ஆசிரியர்கள் ஏற்கின்றனர்.[91] கிடைத்த இம்மொழிச் செப்பேடுகள் மூன்று. இவற்றுள் 2 செப்பேடுகள் வெளியிடப்பட்ட இடம் காஞ்சிபுரம். இவை கிடைத்த இடங்கள் ஆந்திர பிரதேசத்திலுள்ள மயிதவோலு, பெல்லாரி ஜில்லாவில் உள்ள ஹீரஹட ஹள்ளி. இவற்றுள் மயிதவோலு செப்பேடு, "காஞ்சி புரத்திலிருந்து பல்லவகுலத்தைச் சேர்ந்தவனும் பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தவனுமான யுவமகாராஜன் சிவஸ்கந்தவர்மன் தான்ய கடத்தில் உள்ள அதிகாரிக்கு இடும் கட்டளையைக் கொண்டது சாசனம். ஆந்திரா பதத்தில் உள்ள விரிபரம் என்னும் கிராமத்தைத் தன்னுடைய ஆயுள், தர்மம், வெற்றி ஆகியவற்றின் விருத்திக்காக அக்னிவேச கோத்திரத்தவர்களான பூர்வகோட்டி ஆர்யன், கோநந்தி ஆர்யன் என்ற இரு பிராமணர்களுக்கு அவன் பிரம்ம தேயமாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது."[92]

இச்செப்பேடு, சிவஸ்கந்தவர்மன் இட்ட கட்டளையை உள்ளடக்கியது. இதில், காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடப்பட்டது என்ற செய்தி, இவன் பல்லவ குலம் சார்ந்தவன், பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தவன் என்ற செய்தி, இவன் யுவமகாராஜனாக இருந்தமை, காஞ்சிபுரம் தலைநகராக இருந்ததுடன் ஆந்திரப் பகுதிகளும் இவர்களது ஆட்சிக்குள் இருந்தது என்ற செய்தி, பிராமணர்களுக்குப் பிரம்ம தேயமாக நிலம் அளித்தால் தனது ஆயுள் தர்மம் வெற்றி விருத்தியடையும் என்ற நம்பிக்கை அவர்களிடம் இருந்தது போன்ற செய்திகள் இங்குப் புலப்படுகின்றன. சிவஸ்கந்தவர்மன் வெளியிட்ட மற்றொரு செப்பேடு ஹீரஹடஹள்ளி செப்பேடு.

"ஸித்தம் என்ற மங்கலச் சொல்லுடனே சாசனம் ஆரம்பமாகிறது. காஞ்சிபுரத்திலிருந்து அக்னிஷ்டோம, வாஜபேய, அச்வ மேத யாகங்களைச் செய்த தர்ம ராஜாதிராஜன், பாரத்வாஜ

---

91. மேலது, ப. 45. 92. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 356.

கோத்திரத்தில் பிறந்தவன். பல்லவ வம்சத்தைச் சேர்ந்தவனான சிவஸ்கந்த வர்மன் தன்னுடைய அதிகாரிகளுக்குக் கட்டளை யிட்டு அறிவிப்பதாக உள்ளது இந்தச் சாசனம்."[93]

முந்திய சாசனத்தில் யுவமகாராஜன் ஆகச்சுட்டப்பட்ட சிவஸ்கந்த வர்மன் தர்ம மகாராஜாதிராஜன் என இங்குக் குறிப்பிடப் படுகிறான். எனவே இவனே மகாராஜனாக அப்போது இருந்தமை தெரிகிறது; காஞ்சிபுரம் தலைநகராக இருந்தது தெரிகிறது. 'நம்முடைய விஷயத்தில் (அதாவது ராஜ்யத்தில்)',[94] என்று தொடங்கும் சொல்லாட்சியும் இதனை உறுதிப்படுத்துகிறது. தவிர, இச்சாசனம் சொல்லிச் செல்லும் தானம் சுட்டும் ராஷ்டிரம், ஊர், கிராமம் அனைத்தும் இவனது ஆட்சியின் கீழ் இருந்தமையும் தெளிவுபெறுகிறது.

பிராகிருத மொழியில் காணப்படும் இன்னுமொரு சாசனம் குணபதேயப்பட்டயம். இதனை முதலிரண்டு சாசனங்களுக்குக் காலத்தால் பிற்பட்டது எனச் சொல்லலாம் என்பர்.[95] இந்தச் செப்பேட்டின் மூலம் ஸ்ரீ விஜய ஸ்கந்த வர்மன் ஆட்சி செய்தமை தெரிகிறது. "பல்லவ வம்சத்தைச் சேர்ந்தவனும் பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தவனுமான யுவமகாராஜன் ஸ்ரீ விஜய புத்தவர்மனுடைய தேவியும் அங்குரன் என்று முடியும் பெயரைக் கொண்ட ஒருவனுடைய தாயுமான சாருதேவி ஏதோ ஓர் ஊரில் உள்ள ராஜ தடாகத்தின் அருகில் குடி நீர்க் கிணற்றின் வடபுறம் ஆதுகன் என்பான் பயிரிட்டு வந்த நிலத்தில் நாலு நிவர்த்தனம் பூமியைத் தாலூரம் என்னுமிடத்தில் கூளிமகத்தரக தேவகுலத்தில் (தேவகுலம்-கோயில்) எழுந்தருளியிருக்கும் பகவன் நாராயணனுக்குத் தன்னுடைய ஆயுள் பலம் ஆகியவற்றின் அபிவிருத்திக்காக எல்லாப் பரிகாரங்களுடன் அளித்த செய்தியைக் கூறுகிறது[96] என்கின்ற செய்தி தெரியவருகிறது.

இங்குக் காஞ்சியிலிருந்து வெளியிடப்பட்டது என்ற செய்தி இல்லை. விசய ஸ்கந்த வர்மன், புத்தியங்குரன் எங்கு இருந்தனர் என்பதும் விளக்கம் பெறவில்லை. எனினும் பிராகிருத மொழிச் செப்பேடாக இது இருக்கும் நிலை, பின்னர் பிராகிருத மொழிச் செப்பேடுகள் பல்லவர்களால் வெளியிடப்பட்டதாகத்

---

93. மேலது, ப. 362.
94. மேலது, ப. 367.
95. மேலது, ப. 370.
96. மேலது, ப. 370.

தெரியாத நிலை, இங்குக் குறிப்பிடப்படும் இப்பல்லவனைப் பற்றிய குறிப்புகள், ஸ்ரீ விஜயஸ்கந்த வர்மனுடைய (ஆட்சி) ஆண்டு, பாரத்வாஜ கோத்திரம், பல்லவர் வம்சம் எனத் குறிப்பிடும் நிலை இவனும், காஞ்சியிலேயே இருந்து இதனை வெளியிட்டிருக்கலாம் என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றன. "எழுத்து, மொழி ஆகிய இரண்டைக் கொண்டும் இந்தச் சாசனம் மயிதவோலு, ஹீரஹடஹள்ளி ஆகிய இரண்டு இடங்களில் இருந்து கிடைத்தவற்றிற்குக் காலத்தால் பிற்பட்டது என்றே சொல்லலாம்"[97] என்ற கருத்து, இந்த அரசனைச் சிவஸ்கந்த வர்மனுக்குப்பின்னர் ஆண்ட அரசனாகக் கொள்ள இடம் தருகிறது. மேலும் "இந்தச் சாசனம் வழங்கப் பெற்றகாலத்தில் அரசனாக இருந்த ஸ்ரீவிஜயஸ்கந்த வர்மனை, மயிதவோலு, ஹீரஹடஹள்ளி ஆகிய இரு சாசனங்களையும் வழங்கிய சிவஸ்கந்தவர்மனாகவே ஆராய்ச்சியாளர்கள் கருதுவர். இவனுடைய உண்மைப் பெயர் ஸ்கந்தவர்மன் என்றும் இந்தப் பெயருக்கு முன்னதாக 'சிவ' என்று ஓரிடத்தில் காண்பதும், 'ஸ்ரீவிஜய' என்று மற்றொரு இடத்தில் காண்பதும் மரியாதையாக வழங்கப் பெற்ற மங்கல அடைமொழிகளே என்றும் இவற்றுக்குத் தனியாக முக்கியத்துவம் அளிக்க வேண்டியதில்லை என்றும் அவர்கள் கூறுவர்.[98] மயிதவோலு, ஹீரஹடஹள்ளி ஆகிய இரண்டு சாசனங்களின் முத்திரைகளிலும் 'சிவ' என்ற பகுதி அரசனுடைய பெயரோடு சேர்ந்து சிவஸ்கந்தவர்மன் என்று காணப்படுகின்றது. அதை நாம் முன்னரே கண்டோம் இன்னும் குணபதேயசாசனம் எழுத்தாலும் மொழியாலும் அவ்விரண்டுக்கும் பிற்பட்டது என்பதையும் கண்டோம். அதனால் ஸ்ரீ விஜயஸ்கந்தவர்மனை, சிவஸ்கந்தவர்மனின்றும் வேறானவன் என்றே நாம் கொள்ள வேண்டும்[99] என்ற கருத்தும் இது தொடர்பானது.

இந்நிலையில் இச்செப்பேடுகளினின்றும் பப்பதேவன், சிவஸ்கந்த வர்மன், விசயஸ்கந்தவர்மன், இளவரசன் புத்தவர்மன், புத்தியங்குரன் என்ற ஐந்து பல்லவர் முதற்காலப்பல்லவர்களாகத் தெரிய வருகின்றனர். இவர்களுள் பப்பதேவன் குறித்து ஐயங்கள் உண்டு.[100] டாக்டர் மா.இராசமாணிக்கனார் காஞ்சியை முதலில்

97. மேலது, ப. 370. 98. மேலது, ப. 371. 99. மேலது, ப. 371.

100. பல்லவர் வரலாறு, பக். 46,51.

தலைநகராகக் கொண்டு ஆண்டவன் சிவஸ்கந்தவர்மனாக இருக்கலாம் எனக் கருத்துத் தெரிவிக்கின்றார்.

"சிவஸ்கந்தவர்மன் இளவரசனாக இருந்த பொழுது தன்னை இளம் பேரரசன் (யுவமகாராஜன்) என்று கூறுவதால் அவன் தந்தை பேரரசனாகத் தான் இருந்தான் என்பது பெறப்படுகிறது. பேரரசன் (மகாராசன்) என்னும் பட்டம் சாதாரண சிற்றரசரும் சாதாரண தனி அரசரும் வைத்துக் கொள்ளல் வழக்கமாக இருந்தது. ஆதலின் சிவஸ்கந்தவர்மனின் தந்தை ஒரு சாதாரண அரசனாகவே இருந்தான் என்பது வெளிப்படை இது சிவஸ்கந்தவர்மன் பட்டம் பெற்றபின் தன்னை மகாராசாதிராசன் என்று கூறிக் கொள்வதாலும் வலியுறும். சிவஸ்கந்தவர்மன் இங்ஙனம் தன்னைத்தான் பட்டம் பெற்ற 8ஆம் ஆண்டிலே கூறிக் கொள்வதாலும் அவன் இளம் பேரரசனாக இருந்த பொழுதே காஞ்சியிலிருந்து பட்டயம் விடுத்ததாலும் அவன் தந்தை காஞ்சியிலிருந்து பட்டயம் விடுத்தற்குச் சான்று இன்மையாலும் சிவஸ்கந்தவர்மன் பேரரசன் செய்யத்தக்க அக்னிஷ்டோமம், வாஜபேயம், அஸ்வமேதம் என்னும் பெருவேள்விகள் செய்துள்ளமையாலும் பல்லவப் பேரரசை ஏற்படுத்தியவனும் அதற்குத் தலைநகரமாகக் காஞ்சியைக் கண்டவனும் இச்சிவஸ்கந்தவர்மனே ஆதல் வேண்டும் என்று கூறல் தவறாகாது" என்றுரைக்கின்றார்.[101]

இத்தகைய பல கருத்துகளுக்கிடையே காஞ்சி பல்லவர் ஆட்சியிலேயே தலைநகராகத் திகழத் தொடங்கியிருக்கிறது என்பது இங்குத் தெளிவுபடும் ஒரு செய்தி. இந்நிலையில் ஏற்கெனவே பெயராய்வில் சுட்டியபடி, கச்சியைத் திரையன் தலைநகராகக் கொண்டிருக்க, பல்லவர் காஞ்சியைத் தலைநகராகக் கொள்ளத் தொடங்க, இரண்டின் இணைவு தொடங்கியிருக்கிறது என்பதை இங்கும் உறுதிப்படுத்தல் இயலுகிறது.

தவிர, பல்லவர்கள் தமிழர்கள் அல்லர் என்பதற்கும், காஞ்சியைப் பிறநாட்டார் ஆளத் தொடங்கியமைக்கும் இந்தச் செப்பேட்டுச் செய்திகளைத் துணை கொள்ளலாம்.

பாரத்வாஜ கோத்திரம் என்பது தமிழர் மரபினைக் காட்டவில்லை. கோத்திரம் அறியாதவர்கள் தமிழர்கள்.[102] எனவே

---

101. மேலது, பக். 47,48.    102. பல்லவர் வரலாறு, ப. 29.

பல்லவ குலம், பாரத்வாஜ கோத்திரம் என்பன தமிழுக்கு, தமிழனுக்குப் புதியனவாகத் தெரியவருகின்றன.

பல்லவர்களின் பெயர்களும் இங்கு நோக்குதற்குரியன. தமிழர்கள் பெற்றிருந்த தமிழ் மரபுப் பெயர்களை இங்குக் காணக்கூட வில்லை. பப்பதேவன், சிவஸ்கந்தவர்மன், விஜய ஸ்கந்த வர்மன், சாருதேவி, புத்தியங்குரன். இப்பெயர்கள் திரையன், கரிகாலன், இளங்கிள்ளி போன்ற பெயர்களோடு ஒத்ததாக இல்லை; தமிழ் மரபினோடும் ஒத்ததாகத் தெரியவில்லை.

இவர்கள் வெளியிட்ட செப்பேடுகள் தமிழ் மொழிச்செப்பேடுகள் அல்ல. பிராகிருதமொழிச் செப்பேடுகள். பிற்காலப் பல்லவர்கள் வெளியிட்ட செப்பேடுகள் தமிழ் மொழியும் வடமொழியும் கலந்தவை. தமிழகத்திற்கு வந்த பின்னர் அவர்களோடு பழகிய பின்னர் அம்மக்களுக்கு இணக்கமாகத் தமிழ் மொழியில் வெளியிடத் தொடங்கிய நிலையாக இதனைச் சொல்லலாம். எனவே பல்லவர் முதலில் தமிழகத்திற்குப் புதியவர் என்ற நிலையிலேயே அவர்கள் பிராகிருதத்தில் செப்பேடு வெளியிட்டனர் எனக் கருதலாம்.

இந்நிலையில் முதற்காலப் பல்லவர்கள் காஞ்சியைத் தலைநகராகக் கொள்ளத் தொடங்கியநிலையில், அவர்களின் ஆட்சியின் கீழ் தமிழகப்பகுதிகளுடன் ஆந்திரப்பகுதிகளும் இருந்து வந்துள்ளன என்பதும் தெரியவருகின்றது. பிற எந்தக் குறிப்பும் காஞ்சி குறித்துத் தெரியவில்லை.

### 1.4.2. இடைக்காலப் பல்லவர்களும் காஞ்சியும்

வடமொழிச் செப்பேடுகளை வெளியிட்ட பல்லவர்களை இடைக்காலப் பல்லவர்கள் என வரலாற்று ஆசிரியர்கள் கருதுகின்றனர். "இடைக்காலப்பல்லவரைப்பற்றி அறிய பெருந்துணை புரிவன வடமொழியில் வரையப்பட்ட செப்பேடுகளும் இரண்டொரு கல்வெட்டுகளுமே ஆகும். வடமொழி வளர்ச்சியில் நுண்ணறிவுடையோர் இவற்றை ஆராய்ந்து இவற்றின் காலம் ஏறக்குறைய கி.பி. 340-575 எனக் கூறியுள்ளனர்".[103] மேலும் "இச்செப்பேடுகள் முதற்காலப் பல்லவரைப் போல காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடப்பட்டதாகத் தெரியவில்லை. அவை யாவும் தெலுங்க நாட்டில் உள்ள தாம்ராப,

103. மேலது, ப.57.

தெரியவில்லை. அவையாவும் தெலுங்க நாட்டில் உள்ள தாம்ராப, பலககட மேன்மாதூர, தசனபுரம், பிகீரா, ஓங்கோடு, தர்சி, இராயகோட்டம், சந்தலூர், உதயேந்திரம், உருவப்பள்ளி என்னும் இடங்களில் இருந்து வெளியிடப்பட்டவை ஆகும்" என்னும் செய்தியும் நோக்கத் தக்கது.[104] மேலும் இடைக்காலப் பல்லவர் வரிசை,

குமார விஷ்ணு I (கி.பி. 340-350)

கந்தவர்மன் (கி.பி. 350-375)

வீரகூர்ச்சவர்மன் (கி.பி. 375-400)

கந்தவர்மன் II (கி.பி. 400-436)

(இவன் மக்கள் மூவர்)

சிம்மவர்மன் I (கி.பி. 436-460) | இளவரசன் விஷ்ணுகோபன் | குமாரவிஷ்ணு II

புத்தவர்மன்

கந்தவர்மன் III (கி.பி. 460-475) | சிம்மவர்மன் II | குமாரவிஷ்ணு III

நந்திவர்மன் (கி.பி. 525-550) | விஷ்ணுகோபன்

சிம்மவர்மன் III (கி.பி. 550-575)

சிம்ம விஷ்ணு (கி.பி. 575-615)

என்று அமையலாம் எனக் குறிப்பிடுகின்றார் இராசமாணிக்கனார்.[105]

---

104. மேலது, ப.57

105. மேலது, ப. 63.

இடைக்கால பல்லவர்கள் வெளியிட்ட செப்பேடுகள் காஞ்சியிலிருந்து வெளியிடப்படவில்லை. எனவே காஞ்சிக்கும் இவர்களுக்கும் இருந்த உறவையும் புரிந்து கொள்ள இயலவில்லை. எனினும் குறிப்புகள் சில காஞ்சித் தொடர்பு காட்டுவன. பிற்காலப் பல்லவர் செப்பேடுகளினின்றும், காஞ்சியைக் கைப்பற்றிய இடைக்காலப் பல்லவன் ஒருவனைப்பற்றித் தெரியவருவது இங்கு நோக்கத்தக்கது. ஒன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் வெளியிடப்பட்ட வேலூர்ப்பாளையம் செப்பேடுகள் பல்லவர் மரபு பற்றியும், காஞ்சியைக் கைப்பற்றிய அரசர் பற்றியும் சுட்டுகிறது. ஆயின் அதில் முதற்காலப் பல்லவர்களாகப் பிரர்கிருத மொழிச் செப்பேடு சுட்டிய சிவஸ்கந்தவர்மன், ஸ்ரீ விஜயஸ்கந்தவர்மன், புத்தியங்குரன் போன்றவர்கள் பெயர்கள் சுட்டப்படவில்லை. ஆயின் வடமொழிச் செப்பேடுகள் சுட்டும் பல்லவர் பெயர்கள் இதில் காணப்படுகின்றன. இதில், "காஞ்சீபுரத்தைக் கைப்பற்றியவனும் பலபோர்களிலே வெற்றி கொண்டவனுமான குமாரவிஷ்ணு உண்டானான்" என்ற செய்தி வருகின்றது.[106] குமாரவிஷ்ணு என்ற பல்லவன் காஞ்சீபுரத்தைக் கைப்பற்றிய செய்தி இங்குச் சுட்டப்படுகின்றது. தவிர, "ஸ்கந்த சிஷ்யன் தோன்றினான். அவன் சத்தியசேனன் என்ற அரசனிடமிருந்து பிராம்மணர்களுக்கான கடிகையைக் கைப்பற்றினான்"[107] என்ற பல்லவன், குமாரவிஷ்ணுக்கு முன்னர்ச் சுட்டப்படுகிறான். எனினும் இவன் மகன் குமாரவிஷ்ணு என்பது சுட்டப்படவில்லை. தவிர, காஞ்சிபுரம் ஸ்கந்த சிஷ்யனால் ஆளப்படவில்லை என்பதும் இங்குத் தோற்றமுறுகிறது. எனினும் 'கடிகை' என்பது காஞ்சிபுரக்கடிகை என்ற பொருள் கொள்ளும் போது, முதலில் கடிகையை அவன் கைப்பற்ற, பின்னர் குமாரவிஷ்ணு காஞ்சிபுரத்தைக் கைப்பற்றினான் என்ற பொருள் அமைகிறது. இந்நிலையில், இந்தக் கடிகை காஞ்சிக் கடிகை அன்று என்னும் மா. இராசமாணிக்கனார், "வேலூர் பாளையப் பட்டத்தில் கடிகா" எனத் தனித்து வந்திருத்தலால் இது வட ஆர்க்காடு கோட்டத்தில் பாணபுரத்திற்கு ஏழு கல் தொலைவில் உள்ள கடிகாசலம் எனப்படும் 'சோழ சிங்கபுரமே ஆகும்" என்கிறார்.[108] ஆயின் வேலூர்ப்பாளையப் பட்டயத்தில்

---

106. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 259.

107. மேலது, ப. 259.

108. பல்லவர் வரலாறு, ப. 66.

"ஸ்கந்த சிஷ்யன் சத்தியசேனன் என்ற அரசனிடமிருந்து பிராம்மணர்களுக்கான கடிகையைக் கைப்பற்றினான்" என்பது முதலில் அமைய, பின்னர் "(இரண்டாம்) நரசிம்மவர்மன் மகேந்திரனைப் போன்றவன் பிராம்மணர்களுடைய கடிகையை மறுபடியும் அமைத்தான்"[109] என்று சொல்லும் தன்மை நோக்கத்தக்கது. எனவே இங்குச் சுட்டப்படும் பிராம்மணர்களுடைய கடிகை எங்கு அமைக்கப்பட்டது என்பதும் ஆராயப் படவேண்டும். மேலும் தெளிவு கிடைக்கும்போதே, ஸ்கந்த சிஷ்யன், குமாரவிஷ்ணு, காஞ்சித் தொடர்புகள் தெளிவுறும். எனினும் பெயராய்வில் சுட்டியது போன்று காஞ்சியில் கடிகையின் முக்கியத்துவம் எண்ணத்தக்கது. மதமும், மதஞ்சார்ந்த நிறுவனமும் அன்றைய அரசியலில் பெரும்பங்கு வகித்திருக்கலாம் என்ற நோக்கில் இவற்றை ஆராயலாம்.

குமார விஷ்ணுவைத் தொடர்ந்து புத்தவர்மன் என்ற அரசன் சுட்டப்படுகிறான். சோழர்களுடைய சேனைக்கு வடவாக்னி எனத் திகழ்ந்தமை, இவனும் சிறந்த பேரரசனாகத் திகழ்ந்தான்; சோழர்கள் சேனையை வென்றான் என்ற பொருளைத் தருவதாகக் கொள்ளலாம். எனினும் காஞ்சி இவர்கள் ஆட்சியின் கீழ் இருக்கும் போது வென்றானா? போன்ற கேள்விகளுக்கு விடையில்லை.

வேலூர்ப்பாளையப் பட்டயம் விஷ்ணுகோபன், நந்திவர்மன் போன்ற அரசர்களைச் சுட்டினாலும் காஞ்சியை ஆண்டவர்களாக இவர்கள் தெரியவரவில்லை. "எனினும் காஞ்சி மன்னனான விஷ்ணுகோபன் ஒருவனைப் பற்றி வடநாட்டுக் குப்தவம்சத்து அரசனான சமுத்திர குப்தனுடைய அலஹாபாத் கல்வெட்டிலிருந்து தெரிகிறது. கி.பி. நாலாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் 380ஆம் ஆண்டு அளவில் அது பொறிக்கப் பட்டிருக்கிறது. அதிலே சமுத்திர குப்தனுடைய வெற்றிப் புகழ் விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது. அவ்விதம் வெற்றி கொண்டவர்களாகக் குறிக்கப்பட்டிருப்பவர்களுள் காஞ்சிபுரத்து விஷ்ணுகோபனும் ஒருவன்" என்ற செய்தியும் "எனினும் வேலூர்ப் பாளையம் செப்பேடுகள் குறிப்பிட்டது இந்த விஷ்ணுகோபன் தானா என்பதை நாம் நிச்சயமாகச் சொல்லமுடியாது. ஏனெனில்

---

109. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 259.

மற்றொரு விஷ்ணுகோபனைப் பற்றி நாம் அறிவோம்[110] என்ற செய்தியும் இவன் பற்றியன.

சிம்ம விஷ்ணு பல்லவன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு சோழ ராஜ்ஜியத்தையும் தொண்டை நாட்டுடன் இணைத்து ஆளத் தொடங்கிய அரசனாகத் தெரியவருபவன். இவன் தந்தை மூன்றாம் சிம்மவர்மன். இவன் காலத்திலும் காஞ்சி தலைநகராக இருந்திருக்கக் கூடும் என்பதற்குச் சான்றுகள் கிடைக்கின்றன. லோக விபாகம் நூல்வழியே தெரியவரும் சிம்மவர்மன் ஒரு பல்லவன். "இந்நூல் ஒழுங்காகச் செய்யப் பெற்ற காலம் காஞ்சி அரசன் சிம்மவர்மன் பட்டம் பெற்ற இருபத்திரண்டாம் ஆண்டாகும்"[111] என்ற செய்தியுடன் "லோக விபாகத்தின் படி கி.பி. 436-437 இல் முடி சூட்டப்பெற்று இருபத்திரண்டு ஆண்டுகள் அதாவது கி.பி. 458-ஆம் ஆண்டுவரையில் காஞ்சியில் சிம்மவர்மன் என்ற அரசன் ஆட்சி புரிந்திருக்கிறான். கங்க அரசனை முடிசூட்டிய சிம்மவர்மன் அவனே என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுவர்"[112] என்ற செய்திகளின்படி, சிம்மவர்மன் காஞ்சி தொடர்பு தெரிகிறது. தவிர, இந்தச் சிம்மவர்மன் வெளியிட்ட செப்பேடு பள்ளன் கோயில் செப்பேடு. இச் செப்பேடு தொடர்பாக அமையும் "சாசனத்தை வழங்கிய அரசனான சிம்மவர்மனுடைய பாதங்களை அநேக அரசர் பணிந்தனர் என்பதைத் தவிர அவனுடைய வீரச் செயல் வேறு ஏதும் குறிப்பிடப்படவில்லை. ஆனால் அவனுடைய மகன் சிம்மவிஷ்ணு பலபடியாகப் புகழப் பட்டிருக்கிறான். அவன் அப்போது பட்டத்து இளவரசனே. தந்தை வழங்கிய சாசனத்தில் மகன் புகழப்பட்டிருப்பது அபூர்வமானது, வேறு இடங்களில் காணக் கிடைக்காதது. அவ்விதம் செய்திருப்பதற்குத் தகுந்த காரணம் இருத்தல் வேண்டும். தந்தை முதுமையினால் பெயரளவிலே அரசனாயிருக்க, மகன் முன்னின்று எல்லாக் காரியங்களையும் நிர்வகித்து வந்தான் என்று கொள்ளலாம்; அல்லது சாசனத்திலே கண்ட தானம் வழங்கப்பட்டதற்கு அவனும் ஓரளவு பொறுப்பாளியாக இருந்தான் எனக் கொள்ளலாம். ஒருகால் இரண்டுமே பொருந்தியிருத்தல் கூடும்"[113]

---

110. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 259.

111. பல்லவர் வரலாறு, ப. 15.

112. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. ix. 113. மேலது, ப. 11.

என்ற விளக்கத்துடன் மேலும் சில செய்திகளையும் எண்ணிப்பார்க்கலாம்.

பள்ளன் கோயில் செப்பேடு கிடைத்த இடம் தஞ்சாவூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டியிலிருந்து நான்கு மைல் தூரத்தில் உள்ள ஒரு கிராமம்[114] என்னும் செய்தி இச்செப்பேடு தமிழ்நாட்டில் கிடைத்ததைத் தெரிவிக்கிறது.

பல்லவ அரசனான சிம்மவர்மன் தன்னுடைய ஆட்சியின் ஆறாம் ஆண்டில் அளித்த தானத்தைத் தெரிவிக்கும் இந்தச்சாசனம், "தமிழ்நாட்டிலே கிடைக்கும் மற்றச் செப்பேட்டுச் சாசனங்களில் காணப்படுவது போலவே இந்தச் சாசனமும் ஸம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய இருபகுதிகளைக் கொண்டது."[115]

"தானம் அளிக்கப்பட்ட நிலம் இரண்டு இடங்களில் இருந்தன. ஒன்று தாமர் என்ற கிராமம். அங்கே 16½ பட்டி நிலம் அளிக்கப்பட்டது. அந்த ஊர் காஞ்சிபுரம் தாலுகாவில் இப்போது தாமல் என்று வழங்கும் ஊரே என்னலாம். மற்றொன்று வெண்குன்றக் கோட்டத்துப் பெருநகர நாட்டு அமண் சேர்க்கை என்ற முழுக் கிராமம் ஆகும்.[116]

இச்செய்திகள் அனைத்தும் தமிழ்நாட்டுடன் தொடர்புடையன. மேலும் சிம்மவிஷ்ணு, சிம்மவர்மன் பற்றி மேலே குறிப்பிட்ட செய்தியையும் நோக்க, சிம்ம விஷ்ணு தன் தந்தை சிம்மவர்மன் அரசனாக இருக்கும் போதே யுவராஜனாகத் திகழ்ந்து தந்தைக்குப்பின் காஞ்சி அரியணையில் அமர்ந்திருக்கலாம் எனினும் "இவன் காலத்தில் காஞ்சி களப்பிரரிடமிருந்து கைப்பற்றப்பட்டது என்று நினைக்கலாம்"[117] என்ற கருத்தும் இங்கு நோக்கத் தக்கது. எனவே சிம்மவர்மனிடம் இருந்து களப்பிரர் காஞ்சியை வென்றனரா? இவர்களிடம் இருந்து சிம்மவிஷ்ணு மீட்டானா போன்ற செய்திகளும் ஆராயப்பட வேண்டும். தவிர, "இந்தச் சிம்மவர்மன் சிறந்த சிவபக்தன். ஐயடிகள் காடவர் கோன் என்ற பெயரில் சிவனடியாராகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருத்தொண்டத் தொகையில் சேர்த்துப் புகழப் பட்டவன் அவனே என்னலாம்"[118] என்கின்ற கருத்தும் இவன் பற்றியது.

---

114. மேலது, ப. 1. 115. மேலது, ப. 5
116. மேலது, ப. 26. 117. பல்லவர் வரலாறு, ப. 84.
118. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப.xii

இவ்வாறு முதற்காலப் பல்லவர் தொட்டு இடைக்காலப் பல்லவனாகிய மூன்றாம் சிம்மவர்மன் வரையிலும் பல்லவர் பற்றிய முழுமையான செய்திகள் கிடைக்காவிட்டாலும், காஞ்சியை முதலில் தலைநகராகக் கொள்ளத் தொடங்கியதும், நகராக விரிவு படுத்தியதும், இடையிடையே காஞ்சியை நழுவ விட்டதும், கைப்பற்றியதும் இவர்கள் காலத்திய நிகழ்ச்சிகள் எனக் கருதுதல் இயலுகிறது. இத்தகைய நிலையில் இந்தக் காஞ்சியும், பல்லவர் தலைநகர் காஞ்சியும் ஒன்றா வேறா என்ற ஐயத்தையும் அறிஞர்கள் எழுப்பியுள்ளதை அறிஞர் எடுத்துக்காட்டியுள்ளனர்.

"வடமொழியில் எழுதப்பெற்ற பெரும்பாலான செப்பேடுகள் ஆந்திரப் பகுதிகளிலிருந்தே கண்டெடுக்கப் பட்டுள்ளன. இதன் மூலம் திரு. டி.ஜி. ஆராவமுதன் என்பார் காஞ்சிபுரம் ஆந்திரப்பகுதியில் இருந்த ஓர் ஊர் என்றும் அங்குத் தான் முற்காலப் பல்லவர்கள் தங்கியிருந்து தங்களுடைய அரசாணைகளை வெளியிட்டார்கள் என்றும் கருத்துத் தெரிவித்தார்" என்ற கருத்தையியம்புகிறது 'தமிழ்நாட்டு வரலாறு-பல்லவர் பாண்டியர் காலம்' நூல். ஆனால் இக்கருத்து ஏற்புடையதாகத் தோன்றவில்லை என்று இதற்குக் காரணங்களையும் தருகின்றது.[119]

---

119. முற்பகுதியில் வடமொழியிலும் பிற்பகுதியில் தமிழ் மொழியிலும் எழுதப்பெற்ற செப்பேடுகள் அனைத்தும் தமிழ்நாட்டிலேயே கிடைத்துள்ளன. பல்லவர்களுடைய ஆட்சியின் எல்லை தென்பகுதியில் விரிவடைந்த காலங்களில் செப்புப் பட்டயங்கள் தமிழில் எழுத வேண்டிய நிலை தோன்றியதெனக் கூறலாம். தமிழ் நாட்டில் கிடைத்துள்ள பல்லவர் செப்பேடுகளுக்கும் ஆந்திரப்பகுதியில் கிடைத்துள்ள செப்பேடுகளுக்கும் இடையே சில வேறுபாடுகளைக் காணமுடிகிறது. ஆந்திரப் பகுதியில் கிடைத்துள்ள செப்பேடுகளில் கொடையளித்த மன்னனையும் சேர்த்து நான்கு தலைமுறையினர் தான் தெரிவிக்கப்பட்டுள்ளனர். தமிழகத்தில் கிடைத்துள்ள செப்பேடுகளில் கொடையளித்த மன்னனும் அவனது முன்னோர்களும் புராணபரம்பரையும் கூறப்பெற்றுள்ளன. செப்பேடுகளின் முத்திரைகளிலும் சில வேறுபாடுகளை நாம் காண்கிறோம் -தமிழ்நாட்டு வரலாறு, பல்லவர் பாண்டியர் காலம், ப.59.

டாக்டர் மீனாட்சியும் பண்டைய பல்லவர்கள் காஞ்சிபுரத்தில் இருந்து ஆளவில்லை. நெல்லூர் குண்டூர் பகுதியைச் சார்ந்த காஞ்சியிலிருந்தே ஆண்டனர் என அறிஞர் சிலர் கருத்தை எடுத்தியம்புகின்றார்[120]

சி.ஆர். சீனிவாசனும் இக்கருத்து பற்றி விவாதிக்கிறார். இவரும் செங்கல்பட்டில் உள்ள காஞ்சிபுரமே பல்லவர்களின் தலைநகராக இருந்தது என்பது ஏற்புடையது எனக்கருதுகிறார்.[121]

---

120. Some Scholars are of the view that the early Pallavas ruled not from Kanchi in Tondaimandalam which was known only as Kachchi in the early Tamil literature but from another ancient Kanchi situated in the Nellore-Guntur area and that it was only after a centruy or so after finally overcoming the Colas in the South that they extended their rule to kanchipuram. In anycase Kanchi was firmly in the hands of only Simhavishnu and Mahendravarman I from the middle of the sixth century. It is presumably due to the fact that the Colas and Pandyas were ruling as powerful but subordinate rulers in the south that the Pallavas of the simhavishnu line had to station powerful military chiefs in the region south of the Tondaimandalam border. Even members of the collateral Bhimavarman branch of the royal dynasty were associated with the conquest of the Southern regions as indicated by reference to it in the Tandantottam plates. It is also noteworthy that the Pallava copper-plates were not issued from Kanchi during the fifth century when Kanchi was apparently not in their possession- Administration and Social life under the Pallavas, p.11.

121. Scholars have expressed doubts about the identification of Kanchipuram of the early Pallava copper plates with the modern Kanchipuram in Chingleput District. As a matter of fact it is only in the Udayendiram grant that the city is for the first time referred to as Kanchipuram as mentioned earlier. In the early Tamil literature the city is referred to only as Kāñchi. Though there are a number of Kanchipurams and a number of place names incorporating the word 'Kāñchi' in them found in the Chingleput, Chittoor, Nellore and Guntur Districts, only in the present Kanchipuram in Chingleput District do we find numerous Pallava monuments. Thus in the absence of any other definite evidence, modern Kanchipuram may be taken as the ancient capital of the Pallavas. It is unlikely that Mahendravarman and his successors would have chosen a place different from the capital of their predecessors for constructing edifices of everlasting fame -Kanchipuram through the ages, p.15.

இந்த அறிஞர்களின் கருத்துகள் இரண்டு கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு இந்த ஐயத்தை எழுப்பும் நிலையில் உள்ளன.

1. வடமொழிச் செப்பேடுகள் ஆந்திரப்பகுதியிலிருந்து கண்டெடுக்கப்பட்டுள்ளன.

2. காஞ்சி என்ற பெயர் தமிழகம் தவிர சித்தூர், நெல்லூர், குண்டூர் பகுதிகளிலும் காணப்படுகின்றன.

வடமொழிச் செப்பேடுகள் ஆந்திரப்பகுதியிலிருந்து கண்டெடுக்கப்பட்டவை என்பது அறிஞர் ஒப்புக் கொண்ட செய்தி தான். வடமொழிச் செப்பேடுகளுக்கு முன்னையதாக வெளியிடப்பட்ட பிராகிருத செப்பேடுகள் காஞ்சிபுரத்திலிருந்து வெளியிடப்பட்டவை என்பதும் பல்லவர் செப்பேடுகள் மூலம் கிடைக்கும் உண்மை. இந்தப் பிராகிருதச் செப்பேடுகள் மூலம் முதற்காலப் பல்லவர்கள் காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டார்கள் என்பது இங்குத் தெளிவுபடுகிறது. இவர்கள் காஞ்சியைத் தலைநகராகக் கொள்ளும் போது ஆந்திரப் பகுதிகளும் இவர்கள் வசம் இருந்திருக்கிறது. எனவேதான் காஞ்சியிலிருந்து பட்டயம் வெளியிட்டாலும் தானம் கொடுத்ததாக அப்பட்டயம் சுட்டும் பகுதி தமிழகப் பகுதியாக இல்லாமல் ஆந்திரப்பகுதியாக இருப்பது இங்கு நோக்கத்தக்கது.

அடுத்து முதற்காலப் பல்லவர் காஞ்சியிலிருந்து பட்டயம் வெளியிட்டதாகத் தெளிவாகத் தெரியவர, இடைக்காலப் பல்லவர்கள் வெளியிட்ட வடமொழிப் பட்டயங்கள் காஞ்சியிலிருந்து வெளியிடப்படவில்லை என்பது தெரியினும், அம்மன்னர்களில் சிலர் காஞ்சியைக் கைப்பற்றினர் என்பதும் தலைநகராகக் கொண்டு ஆண்டுள்ளனர் என்பதும் முன்னர்ச் சுட்டப்பெற்றது.

காஞ்சியைக் கைப்பற்றினான் குமாரவிஷ்ணு, பிராம்மணர்களுக்கான கடிகையைக் கைப்பற்றினான் கந்த சிஷ்யன், இரண்டாம் மகேந்திரவர்மன் பிராம்மணர்களுடைய கடிகையை மறுபடியும் அமைத்தான் என்பன வேலூர்ப்பாளையம் செப்பேடு தரும் செய்திகள்.

தவிர சமுத்திர குப்தனின் அலாஹாபாத் கல்வெட்டில் காஞ்சி விஷ்ணு கோபன் என்று சுட்டப்படும் செய்தி, லோகவிபாகம் நூல் சுட்டும் காஞ்சி அரசன் சிம்மவர்மன் போன்ற

செய்திகள் யாவும் இடைக்காலப் பல்லவர்க்கும் காஞ்சிக்கும் இருந்த தொடர்பை விளக்கும். தவிர, மூன்றாம் சிம்மவர்மனுடைய பள்ளன் கோயில் செப்பேடும் காஞ்சிக்கும் சிம்மவர்மனுக்கும் இருந்த தொடர்பைத் தெளிவாகச் சுட்டும்.

இன்னொரு செய்தி ஏற்கெனவே அறிஞர்கள் குறிப்பிடுவது போன்று, முதற்காலப் பல்லவர்கள் இடைக்காலப்பல்லவர்கள் வரலாறு, பிற்காலப்பல்லவர்களின் வரலாறு போன்று தொடர்ந்தோ, தெளிவானதாகவோ இல்லை; கிடைக்கவில்லை. இருப்பினும், இடைவெளிவிட்டே பல்லவர்க்கும் காஞ்சிக்கும் இருந்த தொடர்பு குறித்த சிந்தனைகள் கிடைத்தாலும், காஞ்சியின் வரலாற்றில் அதன் சிறப்பு தொன்று தொட்டுத் தொடர்ந்து வந்த சிறப்பு என்பதை அதன் வரலாறு காட்டுகிறது.

காஞ்சியின் வரலாறு முதன்முதலில் பல்லவர் ஆண்ட வரலாற்றில் தலைநகராகத் திகழத் தொடங்கினமை காரணமாக ஏற்றம் பெறத் தொடங்கிய வரலாறு அன்று. அதன் வரலாறு தொன்மையானது. தமிழக வரலாற்றுக் காலம் தொடங்கியே தமிழர்கள் வாழ்க்கையோடு ஒன்றுபட்டது. பண்டைய ஆட்சியில் தலைநகராகத் திகழ்ந்த கச்சியின் வரலாற்றுச் சிறப்பு போன்று, கல்விச் சிறப்பால் பொலிவுற்றுத் திகழ்ந்தது காஞ்சி. முதலிரண்டு இயல்களில் கண்டது போன்று, இரண்டும் அருகருகேயிருந்த ஊர்களாகத் திகழினும், கச்சி திரையர்களால் தலைநகராகக் கொள்ளப் பட்டிருப்பினும் வடநாட்டுப் புலமையோரிடம் பெரும் புகழ் பெற்று விளங்கியது காஞ்சியே. எனவேதான் இது புலவர் பாடும், புலமையோர் சுட்டும் அளவிற்குப்பேர் பெற்று இலங்கிற்று. எடுத்துக்காட்டு சொல்லும் போது தெரிந்தவற்றையே சொல்லும் தன்மையில் அன்று வடமொழி மக்களிடமும் காஞ்சி தெரிந்திருந்த நிலையில்தான் இந்நிலை அமைந்தது என்ற நிலையில், பல்லவரும் தொண்டை நாட்டை வெல்லும் போது, காஞ்சியின் சிறப்பை அறிந்தே இருந்திருக்கலாம். கடிகை பற்றி இந்தச் செப்பேடுகள் குறிக்கும் செய்திகளும் இங்கு அரணாகத்தக்கன. எனவே தான் காஞ்சியைத் தலைநகராகக் கொள்ளத் தொடங்கினர் பல்லவர் என்று கருதுதல் இயலுகிறது. இந்த நிலையில் காஞ்சியுடன் அன்று சிறந்து திகழ்ந்த கச்சியும் மெல்ல இணைய, மணிமேகலை இரண்டையும் ஓர் நகராகக் குறிப்பதை முன் இயல்களில் கண்டோம்.

தவிர, முழுமையாக, தொடர்ந்து காஞ்சி தலைநகராகத் திகழ்ந்ததும், இதன் விரிவாக்கமும் பல்லவர் வரலாற்றில் தெளிவுபடாமைக்கு அவர்கள் தொடர்ந்து இங்கு ஆட்சி செய்ய இயலாமல் பல முனைப் போர்களைச் சந்தித்ததும் சில வேளைகளில் காஞ்சியைக் கைப்பற்றியதும், சிலவேளைகளில் காஞ்சியை இழந்ததுமாகும் என்பனவற்றையே காரணங்களாகக் கொள்ளல் பொருந்தும். எனவே தான் ஆந்திரப்பகுதியிலிருந்து இவர்கள் செப்பேடுகள் வெளியிட்டமையும் நிகழ்ந்துள்ளது.

எனவே காஞ்சியின் பண்டைய வரலாறும், பிற்காலப் பல்லவர்களின் வரலாறுகளும், சான்றாக அமையும் நிலையில், இந்த முதற்கால, இடைக்காலப் பல்லவர்களின் ஆட்சி தமிழகக் காஞ்சிப்பகுதியிலேயே நடைபெற்றது என்பதைத் தெளிவாக்கலாம். தவிர, ஆந்திரப்பகுதியில் இருந்த காஞ்சியே அன்று தலைநகராகத் திகழ்ந்தது என்றால் அதற்கும் பல்லவர்க்கும் இருந்த பிற தொடர்புகளும், அந்தக் காஞ்சியின் பிறவரலாறுகளும் தெளிவுபடுத்தப்பட வேண்டும். இத்தகைய தெளிவுகள் கிடைக்கும் வரை, தமிழகக் காஞ்சியே பல்லவரின் தலை நகராகத் திகழ்ந்திருந்தது என்பதை ஏற்கலாம்.

இந்நிலையில் காஞ்சி தொடர்பாகப் பல ஆட்சியாளர்கள், ஆட்சி பற்றிய செய்திகள் காணக் கிடப்பினும், இவை முழுமையாகவும் முறையாகவும், காலவாரியாகவும் கிடைக்கவில்லை என்பதே இங்குக் கிடைத்த செய்திகளின் வழிப்பெறப்படும் கருத்தாக அமைகிறது. அருவாளர் பெயர் இப்பகுதிக்கு இருந்திருக்கின்ற நிலையில், இவர்கள் ஆட்சி இருந்திருக்கலாம் என எண்ணக் கூடுகின்றதே தவிர, கச்சி இவர்கள் தலைநகராக இருந்ததா என்பதில் தெளிவில்லை. திரையன், ஒரே ஒரு திரையன் கச்சியை ஆண்டதாகச் செய்திகள் விளக்கம் தருகின்றன. திரையர்கள் இத்திரையனுக்கு முன், பின் ஆண்டிருக்கலாம் என்பது இம்மூதூரின் சிறப்பு குறித்தும் திரையன் சிறப்பு குறித்தும் உருத்திரங்கண்ணனார் பாடும் முறையில் தெரியவரும் ஒரு கருத்து. சோழர்கள் ஆட்சியும் இருந்திருக்கக் கூடும் என்ற ஒரே ஒரு செய்தியைத் தவிர, பிற எதையும் அறியக் கூடவில்லை. காஞ்சி பல்லவர் தலைநகராக இருந்திருக்கிறது. பல பல்லவர்கள் இங்கு இருந்து ஆண்டிருக்கின்றனர் எனினும் யார் யார் எப்போது என்பதெல்லாம் புதிராகவே அமைகின்றன.

இத்தகைய ஓரளவிற்குச் சான்றுகள் கிடைக்கும் காஞ்சி ஆட்சியாளர்கள் வரலாறே இவ்வாறு தெளிவில்லாது அமைய, அறிஞர்கள் தொண்டை நாட்டோடு தொடர்புடைய மேலும் சிலரைக் குறிப்பிட்டு இவர்கள் ஆட்சி இப்பகுதியில் இருந்திருக்கலாம், இருந்திருக்கிறது போன்ற தமது கருத்துகளைச் சொல்லிச் சென்றுள்ளனர். தொண்டை நாட்டுத் தொடர்பு இவர்களுக்கு இருந்திருக்கலாம் பல அடிப்படைகளில். ஆயின் இவர்கள் கச்சியை / காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனரா? என்பதே இங்கு நமக்கு வேண்டிய விளக்கமாகும். ஒரு சில செய்திகளைக் கொண்டு முடிவுக்கு வருதல் என்பது உண்மையான வரலாற்றை வெளிப்படுத்தாது. கே.கே. பிள்ளை சுட்டுவது போன்று இவற்றையெல்லாம் வரலாற்றுத் துணுக்குகள் எனவே கொள்ள வேண்டும். இத்துணுக்குகள் சார்பாக மேன்மேலும் கிடைக்கும் வரலாற்று மூலங்களில் புலப்படும் செய்திகளில் இது சார்ந்த கருத்துகளுக்கு அரணாகத் தக்க செய்திகள் கிடைக்கும் போதே இச்செய்திகளின் நம்பகத்தன்மை வலுப்படும். இவ்வாறு தொண்டை நாட்டுப்பகுதியை ஆண்டோராகச் சுட்டப்படுபவர் குறும்பர், பிந்துசாரன், அசோகர், சாதவாகனர், காரவேலன், இட்சுவாகர், களப்பிரர் போன்றோர்.

## 1.5. குறும்பர்

"மக்கென்ஸி என்பார் தொகுத்துள்ள செவிவழிச் செய்தியின்படி, தொண்டை நாட்டில் வேடரும் குறும்பருமே முற்காலத்தில் வாழ்ந்தனர் என்பது தெரிகிறது. மலைகளிலும், மலைகளையடுத்த காட்டுப் பகுதிகளிலும் வேடரே இருத்தல் எந்த நாட்டிலும் இயல்பாகும். வேங்கடமலை, காளத்தி மலை முதலிய மலைப் பகுதிகளில் இன்றும் வேடுவர் இருத்தலைக் காணலாம். ஆயின் இன்று அவர்கள் நிலைத்த குடியினராய் வீடுவாயில்களுடன் வாழ்கின்றார்கள். குறும்பாடுகள் மேய்த்துக் கொண்டு வாழ்ந்தவர்கள் காலப்போக்கில் சிறிய கோட்டைகளைக் கட்டிக் கொண்டு வாழ்ந்தார்கள் என்னலாம். . . செம்மறியாடுகளை மேய்த்து வாழ்ந்தவர் தம்முள் தலைவனை ஏற்படுத்திக் கொண்டு கோட்டைக் கட்டிக் கொண்டு வாழத் தலைப்பட்டனர்... கோட்டம் என்பதே பிற்காலக் கல்வெட்டுகளிற் காணப்படுவதால் இந்நாட்டுப் பிரிவு குறும்பர் காலத்திலேயே உண்டானது என்று கொள்வதே பொருத்த மானதாகும்.

இன்றுள்ள தமிழ் நூல்களைக் கொண்டு ஆராய்கையில் கரிகாலன் ஒருவனே அருவா நாடு எனப்பட்ட தொண்டை நாட்டை வென்றவன் என்பது தெரிகிறது. எனவே வடபெண்ணையாற்றுக்கும் தென் பெண்ணையாற்றுக்கும் இடைப்பட்ட அருவாநாடு அசோகற்கு முன்பு சோழர் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தது என்பது கூறக் கூடவில்லை. அது முன்பு கூறப்பட்டவாறு (அசோகன் தந்தையான) பிந்துசாரன் கைப்பற்றுவதற்கு முன் குறும்பர் தலைவர் பலரால் ஆளப்பட்டது என்பதே பொருத்தமானதாகும்" என்பது டாக்டர் மா.இராசமாணிக்கனார் கருத்து.[122]

இவ்வாறு செவிவழிச் செய்தியின் அடிப்படையில் சுட்டப்படும் வரலாறே தொண்டை நாட்டில் குறும்பர் ஆண்டனர் என்பது. இவர்கள் முதல் ஆட்சியாளர்களாகக் கருதப்படும் இச்செய்தி குறித்த அக்காலத்திய செய்திகள், பிற்காலச் செய்திகள் எதுவும் தெளிவுபடாத நிலையில், குறும்பர் பற்றி மேலும் செய்திகள் கிடைக்கும் போதே இவர்களுக்கும் காஞ்சிக்குமிருந்த தொடர்பும் புலப்படும்.

### 1.6. பிந்துசாரன்

பிந்துசாரன் கைப்பற்றினான் என்னும் செய்தியும் குறும்பர் வரலாறு போன்றதே.[123] தெளிவும் முடிவும் பெற

---

122. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 302.

123. சங்க இலக்கியங்களில் மோரியர்கள் படையெடுப்பைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. கோசர்கள் மோகூரைத் தாக்கிய போது மோகூர் அரசன் பணியாமையால் அவனை வெல்ல முடியாமல் கோசர்கள் மோரியரின் துணையை நாடினர். மோரியர்கள் வம்ப வடுகர் துணையுடன் தமிழகத்தில் நுழைந்து தாக்கினர். இந்தச் செய்திகளைச் சங்க இலக்கியத்தின் பல்வேறு பாடல்கள் தெரிவிக்கின்றன. மோரியர் என்று சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படுபவர் மௌரியவமிசத்து அரசர்கள் என்பது வரலாற்று ஆசிரியர்கள் கருத்து. மௌரிய அரசர்களுள் கி.மு. 324-300 ஆண்டுகளில் அரசாண்ட சந்திரகுப்தன் என்பவன் ஆட்சி, தெற்கே மைசூர் வரை பரவியிருந்தது. இதனால் இவனே தமிழ் நாட்டில் ஊடுருவி இருக்க முடியுமென்று கருதுகின்றனர்.

இயலாத செய்தியாகவே இதுவும் அமைகிறது. பிந்துசாரன் தொடர்பு ஊகித்தலுக்குரியதாகச் சுட்டப்படுகின்றதே தவிர, காஞ்சியை இவன் ஆண்டதாகத் தெளிவான செய்தி கிடைக்காத நிலையில், இச்செய்தியும் மீள் ஆய்விற்குரியதே.

## 1.7: அசோகர்

கி.பி. 634இல் காஞ்சியைப்பார்வையிட்ட யுவான் சுவாங் என்ற சீனப்பயணியின் கூற்று அசோகர் ஆட்சி செய்தார் என்று அறிஞர் சுட்ட ஒரு காரணமாக அமைகிறது.[124] தவிர, அசோகவர்மன் என்ற பெயருள்ள அரசன் பெயரும் இதற்கு ஓர்

---

இவனது மகன் பிந்துசாரன் கி.மு. 300-273 ஆண்டுகளில் அரசாண்டான். இவன் 16 குறுநிலத் தலைவர்களை அழித்து மன்னர் மன்னனாக விளங்கச் சாணக்கியன் என்னும் இவனது அமைச்சன் உதவினான் என்று தாரநாதன் என்னும் திபெத்திய எழுத்தாளன் குறிப்பிடுகிறான். இந்த வெற்றியை எண்ணி, தமிழகத்தின் மீது படையெடுத்த மௌரிய அரசன் இந்தப் பிந்துசாரனாக இருக்க வேண்டுமென்று சிலர் கருதுகின்றனர்-தமிழ்நாடு சங்ககாலம், அரசியல், பக். 120, 121.

124. கி.பி. ஏழாம் நூற்றாண்டிற் காஞ்சி நகரைப் பார்வையிட்ட யுவான் சுவாங் என்ற சீன வழிப்போக்கன், காஞ்சியில் அசோகன் கட்டின பௌத்தஸ்தூபி இருந்தது என்று கூறியுள்ளான் எனவே, அசோகன் ஆட்சியில் தொண்டைநாடு இருந்தமையை நம்பலாம்- பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 304.

The earliest known reference in the Mauryan epoch to Kanchi is by the Buddhist traveller Hiuen Tsang who narrates that he noticed a stupa about 100 feet high built by the king Asoka in the city of Kanchi when he visited it in 634 A.D. In South India though no Asokan Stupa has hitherto been located other monuments like his Minor Rock Edicts have been found at Gavimath, Palkigundu, Maski, Siddapura and Brahmagiri in the Karnataka state and Yerragudi and Rajulamandagiri in Andhra Pradesh, the last of which is the nearest to Kanchi among the Asokan monuments - Kanchipuram through the Ages- pp.8,9.

காரணமாகச் சுட்டப்படுகிறது.[125] எனினும் இக்கருத்தையும் உறுதிப்படுத்த சரியான சான்றுகள் இல்லை. இந்த ஐயத்தை எழுப்பும் மயிலை சீனி வேங்கடசாமி,[126] பௌத்த மதம் தமிழ்நாடு வந்த வரலாறு பற்றிய சிந்தனையில் அசோகரின் இரண்டு பாறை கல்வெட்டுகள் பற்றித் தெரிவிக்கிறார். மருத்துவ நிலையங்கள் அமைத்தார் என்பதை முதல் கல்வெட்டும், தமிழ் நாட்டில் பௌத்த மதத்தைப் பரப்பிய செய்தியை இன்னொரு கல்வெட்டும் குறிக்கின்றதை எடுத்துக் காட்டுகிறார் இவர். "காருண்யமுள்ள தேவனாம் பிரியராகிய அரசர் பெருமானுடைய (அசோகருடைய) ஆட்சிக்குட்பட்ட எல்லாவிடங்களிலும் இவ்வெல்லைக்கு அப்பாற்பட்ட சோழ, பாண்டிய, சத்தியபுத்திர, கேரளபுத்திர தேசங்களிலும் தாமிர பரணியிலும் (இலங்கை) யவன அரசனாகிய அண்டியோகஸ் ஆட்சி செய்யும் தேசங்களிலும் காருண்யமும் மேன்மையும் பொருந்திய அரசரால் இரண்டு வித மருத்துவ சிகிச்சைகள் ஏற்படுத்தப்பட்டன. அவை மக்களுக்கு மருத்துவம், கால்நடைகளுக்கு மருத்துவம் என்னும் இருவகை மருத்துவ நிலையங்களாம்".

---

125. It may be mentioned in this connection that in the portion containing the mythical genealogy, the Kuram plates of Paramesvaravarman I refer to a king named Asokavarman as one among the earliest rulers of Kanchi. In the opinion of K.A. Nilakanta Sastri this reference to Asokavarman in the Pallava record though in terms of time it is a comparatively later one, may well be a relic of Mauryan rule in the South- Kanchipruam through the ages pp.8,9.

126. அசோகர் கட்டிய தூபியைப் பற்றி மணிமேகலையிற் கூறப்படவில்லை. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சோழ நாட்டை அரசாண்ட கிள்ளிவளவன் என்னும் சோழன் தம்பி இளங்கிள்ளி என்பவன் காஞ்சீபுரத்தைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை அரசாண்ட காலத்தில் 'பைம்பூம்போதி பகவற்கு' ஒரு சேதியம் அமைத்தான் என்று மணிமேகலையினால் அறிகின்றோம். இந்தச் சேதியத்தைத்தான் பிற்காலத்தவராகிய யுவான் சுவாங் என்னும் சீனர் அசோகர் கட்டியதாகக் கூறினார் போலும்- பௌத்தமும் தமிழும், ப. 32.

"தரும விஜயம் (அறவெற்றி) என்னும் வெற்றியே மாட்சி மிக்க அரசரால் (அசோக மன்னரால்) முதல் தரமான வெற்றியென்று கருதப்படுகிறது இந்த வெற்றி இந்த இராச்சியத்திலும் இதற்கப்பாற்பட்ட அறுநூறு யோசனைத் தூரத்தில் உள்ள அண்டியோகஸ் என்னும் யவன அரசனுடைய தேசத்திலும் அதற்கும் அப்பால் டாலமி, அன்டிகொனஸ், மகஸ், அலெக்ஸாந்தர் என்னும் பெயருள்ள நான்கு அரசர்களின் தேசங்களிலும் இப்பால் தெற்கேயுள்ள சோழ பாண்டிய தாம்பிரபரணி (இலங்கை) வரையிலும் இந்த (அற வெற்றி) அடிக்கடி அரசரால் கைப்பற்றப்பட்டது".[127]

இந்தப் பாறைக் கல்வெட்டுகள் அசோகரின் அறவுணர்வைப் பறை சாற்றுகின்ற கல்வெட்டுகள். இரண்டு கல்வெட்டுகளிலும், தம்முடைய இராச்சியத்தைச் சொல்லி 'இவ்வெல்லைக்கு அப்பாற்பட்ட' என்ற தொடரும் அமைகிறது. முதற் கல்வெட்டில் 'சோழ, பாண்டிய, சத்திய புத்திர, கேரளபுத்திர' என்றும், இரண்டாவதில் 'சோழ, பாண்டிய, தாம்பிரபரணி (இலங்கை) வரையிலும்' என்றும் அமையும் தொடர்களை நோக்க, காஞ்சிப்பகுதி இவற்றுள் அடங்குமா என்பது தெளிவாகத் தெரியவில்லை.

சி.ஆர். சீனிவாசனும் இக்கருத்து குறித்து ஐயம் தெரிவிக்கிறார்.[128]

அசோகர் தம்முடைய கலிங்க வெற்றிக்குப் பின்னர் எந்தப்போரும் செய்யவில்லை என்பதும் அறவெற்றியை நோக்கித் தமது செயல்பாட்டைத் திருப்பிக் கொண்டார் என்பதும் வரலாறு. எனவே கலிங்க வெற்றிக்கு முன்னரேயே காஞ்சி சார்ந்த தொண்டைநாட்டுப் பகுதிகளை வென்றிருக்க வேண்டும் அல்லது அவரது ஆட்சியின் கீழ் ஏற்கெனவே இப்பகுதி இருந்திருந்தால் தவிர அதன் பின்னர் இப்பகுதிகள் அவரது ஆட்சிக்குள் வருவதற்குரிய வழியில்லை. இங்கு, பிந்துசாரன் இப்பகுதியை ஆண்டான் என்ற மா. இராசமாணிக்கனார் எண்ணம் இணைத்து

---

127. பௌத்தமும் தமிழும், பக். 3,4.

128. It is however not certain whether the Mauryan empire under Asoka extended upto Kanchi - Kanchipuram through the ages, pp.8,9.

ஆராயத் தக்கது. எனவே மீண்டும் பிந்துசாரன் பற்றியும் அசோகரின் கலிங்க வெற்றிக்கு முன்னைய வரலாற்றில் கிடைக்கும் செய்திகளும் ஆராயப்படும் நிலையிலேயே இச்செய்தி தெளிவுபடும்.

அசோகவர்மன் என, பல்லவர் செப்பேடு தரும் ஆட்சியாளர் பற்றிய சிந்தனையிலும் இரண்டு செய்திகள் நோக்கத் தக்கன. ஒன்று இவன் பல்லவன். மௌரியன் அல்லன் என்பது.

அடுத்து, அசோகவர்மன் என்ற பெயர் அசோகர் மேல் கொண்ட பற்றின் காரணமாக அல்லது புத்த மதச்சார்பு காரணமாக வைத்துக் கொண்ட பெயராகக் கூட இருக்க வாய்ப்பு அமையும் நிலையில், காஞ்சி அசோகர் ஆட்சியின் கீழ் இருந்தது என்பதும் மீண்டும் ஆராய்தற்குரியதாகவே அமைகிறது.

### 1.8. காரவேலன்

காரவேலன் தமிழரசர் கூட்டணியை வென்றான் என்ற ஒரு கருத்தைக் கொண்டு காஞ்சியில் ஆண்டான் என்பர்.[129] எனவே இந்த வரலாறும் மேலும் ஆய்விற்குரியது.

### 1.9. சாதவாகனர்

காஞ்சியைச் சாதவாகனர்கள் ஆண்டார்கள் என்பதற்குச் சான்றாக அறிஞர்கள் சுட்டுவதில் இப்பகுதியில் கிடைக்கும் காசுகளைச் சுட்டுவது முதலிடம் வகிக்கிறது.[130]

---

129. However, the influence, if any does not seem to have lasted long as can be inferred from the Hasthigumpha inscription of Kharavela. The Allusion in that inscription to the confederacy of the Tamil kings (Tramira-desa Sangatham) evidently shows that the kings of the Southern states had made bold assert their independence, resisting the influence from the north. Since Kanchi was geographically and politically an important southern entity even at that time, it may reasonably be conjectured that Kanchi too was involved in the uprising- Kanchipuram through the ages, p.9 பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 306,307.

130. However, from the sources available at present it is not possible to determine whether the Satavahanas extended their political authority or administrative control in the regions to the south of

"சாதவாகனப் பேரசு ஏறத்தாழ கி.மு. 235 முதல் கி.பி. 220 வரையில் நிலவியது. கௌதம புத்திர சாதகர் (கி.பி. 82-106) என்பவன் மகனான இரண்டாம் 'புலுமாயியின் காசுகள் கோதாவரி கிருஷ்ணையாறுகளுக்கு இடைப்பட்ட கடற்கரைப்பகுதியிலும் அதற்குத் தெற்கில் கடலூர் வரையிலும் கிடைத்துள்ளன. இதனால் இப்புலுமாயியின் ஆட்சி ஆந்திர நாட்டிலும் தொண்டைநாட்டிலும் ஏற்பட்டிருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. ஆயின் அந்தப் புலுமாயி என்பவன் தன் ஆட்சி முழுமையிலும் தொண்டை நாட்டை ஆண்டதாகவோ, அவனுக்குப்பின் வந்தவன் அந்நாட்டைத் தொடர்ந்து ஆண்டதாகவோ கூறச் சான்றில்லை. தெற்கே கிருஷ்ணையாறு வரையில் அவர் தம் ஆட்சியிருந்தமைக்கே சான்று காணப்படுகிறது. எனவே இரண்டாம் புலுமாயியின் ஆட்சி தொண்டை நாட்டில் மிகக் குறுகிய காலமே நடை பெற்றிருத்தல் வேண்டும் என்று உய்த்துணரப்படும்" என்கிறார் டாக்டர் மா.இராசமாணிக்கனார்.[131] ஆயின் இதனை மறுக்கிறார் பி. சண்முகம். "சாதவாகனர்கள் தமிழ் நாட்டின் எல்லைக்கு அப்பால் உள்ள தக்காணப் பகுதியை ஆண்டனர். இவர்கள் கி.மு2ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 2ஆம் நூற்றாண்டு வரை அரசு செலுத்தினர். இவ்வரசர்கள் வெள்ளி, செம்பு, போடின். ஈயம் ஆகிய உலோகங்களில் பல வகைக் காசுகளை

---

Nellore District.... The most important evidence in this regard is the find of copper coins of the Satavahanas in the recent archaeological excavations at Kanchi. . .T.V. Mahalingam suggests that "the Naga princess married by virakurcha probably belonged to the family of the Oliya Nagas which ruled over Oyma-nadu and Aruvavadatalainadu. etc." Thus if the later Satavahanas did not bring the region around Kanchi under their direct or effective control, atleast it may be postulated that either it was entrusted to the Naga feudarories or military governors who owed allegiance to them. It is more probable that the region was under the control of the former through the Naga kings who were originally Feudatories of the Satavahanas and who later became independent- Kanchipuram through the ages, pp.10-11.

131. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப. 305.

வெளியிட்டுள்ளனர். இவர்கள் வெளியிட்ட சில காசுகள் தமிழ் நாட்டின் பகுதிகளில் கள மேற்பரப்பு மற்றும் அகழாய்வுகளில் கிடைத்துள்ளன. திருக்கோயிலூர், கரூர் ஆகிய ஊர்களில் இவர்கள் காசுகள் கிடைத்துள்ளன. காஞ்சிபுரம், மாளிகைமேடு, (பண்ருட்டி வட்டம், கடலூர் மாவட்டம்) ஆகிய இடங்களில் நடைபெற்ற அகழாய்வுகளிலும் காசுகள் கண்டெடுக்கப் பட்டுள்ளன" என்று கூறுவதோடு, "இக்காசுகள் தமிழ் நாட்டின் வடபகுதிகளில் கிடைத்துள்ளன. இதனால் இப்பகுதி சாதவாகனர் ஆட்சியின் கீழ் வந்தது என்று கருதுகின்றனர். இக்காசுகள் கிடைக்கின்ற காரணத்தினாலேயே இவ்வாறு கருத இயலாது. காசுகள் மற்ற நாட்டுக் காசுகள் போலவே வணிகத்தின் பொருட்டு வந்திருக்கலாம். சாதவாகனர் ஆட்சிக்குட்பட்டதாகத் தக்க சான்றுகள் மூலம் உறுதியாகவில்லை" என்கிறார்.[132] இக்கருத்து கருதத்தக்கது. மேலும் இந்நூலில் 'பிறபகுதிக் காசுகள்' என்ற தலைப்பில், ஆறு காலகட்டக் காசுகள் கிடைப்பதையும் இவை அஜாதசத்ரு, சிசுநாக, நந்தர்கள், சந்திரகுப்தர், பிந்துசாரர், அசோகர், பிற்காலமௌரியர் வரையிலும் உள்ள காசுகள் என்பதையும் கூறி இவற்றை விளக்குகிறார்[133] இக்காசுகள் யாவும் வணிகத் தொடர்பாக வந்தன என்பதில் ஐயமில்லை என்பது இவர் கருத்து.[134]

## 10. இட்சு வாகர்கள்

இட்சுவாகர்கள் பற்றியும் விளக்கமாகத் தெரியவில்லை. எனினும் காஞ்சியுடன் இவர்கள் தொடர்புபடுத்தப்படுகின்றனர்.[135] இவ்வரலாறும் ஆராய்தற்குரியதே.

---

132. சங்க காலக் காசியல், ப.81. 133. மேலது, பக். 75, 76, 77.

134. மேலது, ப. 73.

135. The cult of Ashtabhujasvami is an early one and it is possible that the cult originated at some place in North India like the Mathura region and spread to Nagarjunakonda and from there permeated further south to Kanchi. It is also probable that the Ikshvakus who were responsible for the building of stupas and monasteries at Nagarjunakonda revived the spirit of Mahayana Buddhism in kanchi. According to the tradition prevalent in Burma, the salankayanas (c.300-420A.D.) who came after the Ikshvakus, are said to have "extended their patronage to the

## 11. களப்பிரர்

களப்பிரர் பற்றிய அறிஞர்களின் விளக்கங்கள் பல. காஞ்சித் தொடர்பும் அறிஞர்களால் பேசப்படுகின்றது.[136]

எனினும் இவர்கள் ஆட்சி தொடர்ந்து இல்லாமையும் செல்வாக்குடன் இல்லாமையும் காஞ்சி அரசியலில் இவர்கள் பெற்ற முக்கியத்துவம் எதையும் தெளிவுபடுத்த இயலாமைக்குக் காரணங்களாக அமைகின்றன. மயிலை சீனி வேங்கடசாமி களப்பிரர் தொண்டை நாட்டை ஆளவில்லை என்று கூறுவதும் இங்குச் சுட்டத்தக்கது.[137] எனினும் பல்லவர்கள் தங்கள்

---

Buddhist elergy at Kanchi and elsewhere". It is also said that Buddhadatta, the Ceylonese scholar, who was invited by the king of Vengi, evidently a Salankayana king, established under the patronage of the king, Buddhist sects at Kanchi- Kanchipuram through the ages, p.11.

136. கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல்லவர் தொண்டை மண்டலத்தைக் கைப்பற்ற முனைகையில் அவர்களால் தாக்குண்ட இக்களப்பிரர் அருவா வடதலை நாட்டை விட்டுத் தொண்டை மண்டலத்திற்குள் நுழைந்தனர். இவர்கள் நுழைவால் சோழர் சிற்றரசு தொண்டை மண்டலத்தில் வீழ்ச்சியுற்றது. பல்லவர் தொண்டை நாட்டையும் கைப்பற்ற முனைந்த பொழுது அவரிடம் போரிட்டுத் தோற்ற களப்பிரர் காஞ்சியை விட்டுப் பாலாற்றுக்குத் தெற்கே சென்று விட்டனர்.... இக்களப்பிரர் அடிக்கடி பல்லவரோடு போரிட்டு வந்திருக்க வேண்டும். இவர்களைக் காஞ்சியினின்றும் துரத்தித் தொண்டை மண்டலம் முழுவதையும் கைப்பற்ற இடைக்காலப் பல்லவரும் இடருற்றனராதல் வேண்டும். கி.பி. ஆறாம் நூற்றாண்டின் கடைப்பகுதியில் பல்லவப் பேரரசனாக இருந்த சிம்மவிஷ்ணு (கி.பி. 575-615) களப்பிரரை முறியடித்த பெருவீரன் என்று வேலூர் பாளையப் பட்டயம் கூறுகின்றது- பல்லவர் வரலாறு, பக். 41-42.

137. பல்லவர் அரசர் ஆண்ட தொண்டை மண்டலம் தவிர சோழ, பாண்டிய, சேர நாடுகளைக் கைப்பற்றி அரசாண்ட களப்பிரர் கருநாடக நாட்டுக் கன்னடர் என்பதில் ஐயமில்லை- மயிலை சீனி வேங்கடசாமி தமிழுக்கு வழங்கிய கொடை, ப. 48.

ஆட்சியைப் பல காலங்களில் காஞ்சியில் இழக்கக்காரணம் களப்பிரர்தான் என்ற கருத்தும் அறிஞர்களிடம் உள்ளது.[138] எனவே களப்பிரர் தொடர்பாக மேலும் செய்திகள் தெளிவுபடும் போதே காஞ்சியை இவர்கள் ஆண்டனரா என்பதும் தெரியவரும்.

## 2. ஆட்சிமுறை

இவ்வாறு அன்றைய கச்சியைப்/காஞ்சியைப் பொறுத்த வரையில் அருவாளர், திரையர், சோழர், பல்லவர் போன்றோர்

---

138. இந்தக் களப்பிரர்கள் தமிழ் நாட்டின் மேற்குப் பகுதியில் உள்ள கருநாடக மாநிலத்தின் கோலார்ப் பகுதியிலிருந்து கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தமிழகத்தில் புகுந்தவராவார். இவர்கள் தொண்டை மண்டலத்தின் பாலாற்றின் கரையில் உள்ள காஞ்சி, காவிரி ஆற்றின் முகவாயிலில் இருந்த காவிரிப்பூம்பட்டினம், வைகை ஆற்றின் தென்பகுதியில் அமைந்துள்ள மதுரை ஆகிய முக்கிய நகரங்களைத் தம் வசப்படுத்தினர் போலும். கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் தொண்டை, சோழ, பாண்டிய நாடுகளைத் தங்கள் வசப்படுத்தினர். தொண்டை நாட்டின் முக்கிய நகரமாகிய காஞ்சிபுரத்தைத் தங்கள் வசப்படுத்தி அங்கே தங்கள் சமயமாகிய சமண சமயத்தையும் பரவச் செய்திருப்பர். இதனால் தான் களப்பிரர்களை வென்ற பல்லவ மன்னர்களில் சிலர் சமண சமயத்தைத் தழுவினர் போலும். ஆனால் தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் அமைந்தது போன்று களப்பிரர்களுடைய ஆட்சி உறுதியாக அமையவில்லை. பல்லவ மன்னர்களுக்கும் களப்பிரர்களுக்கும் அடிக்கடி போர்கள் நடந்துள்ளன. பல்லவர்களும் களப்பிரர்களும் காஞ்சி நகரத்தை மாற்றி மாற்றித் தங்கள் வசத்தில் கொண்டு வந்துள்ளனர். இறுதியாகக் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இடைப்பகுதி களப்பிரர்களிடமிருந்து சிம்மவிஷ்ணு என்ற பல்லவ மன்னர் காஞ்சிநகரத்தைக் கைப்பற்றியதை நாம் அறிந்து கொள்ளுகின்றோம். சிம்ம விஷ்ணுவின் ஆட்சிக் காலத்தில் காஞ்சிபுரம் களப் பிரர்களிடமிருந்து கைப்பற்றப் பட்டதாகக் கல்வெட்டுகளும் செப்பேடுகளும் கூறுகின்றன- தமிழ்நாட்டுவரலாறு-பல்லவர்-பாண்டியர் காலம், பக். 28,29,39,40.

ஆட்சி பற்றிய சில செய்திகள் தெரியவருகின்றன. எனினும் இவர்கள் ஆட்சி பற்றிய தெளிவான, முழுமையான, காலமுறையிலான செய்திகளைப் பெற இயலாமையே இவை தொடர்பான வரலாற்று மூலங்களினின்றும் பெற முடிந்த செய்தியாக இருக்கும் நிலையில் இவர்களின் ஆட்சி எவ்வாறு அமைந்தது என்பதும் வினாவாகவே அமைகிறது. எனினும் இக்காலம் சார்ந்த வரலாற்று மூலங்கள் மக்களைப் புரத்தலையும் உறழ்ந்தோரை அழித்தலையும் நயந்தோர்க்கு அளித்தலையும் கடமையாகக் கொண்டு திகழ்ந்த ஆட்சியாளராக இவர்களைக் காட்சிப்படுத்துகின்றன. தவிர இப்புரத்தல் தன்மை காலத்திற்கு ஏற்ப, சமுதாய மாற்றங்களுக்கு ஏற்ப மாறுபட்டு வந்துள்ளதையும் இவர்தம் வரலாறு தெளிவுபடுத்துகிறது.

பெரும்பாணாற்றுப் படையில் திரையனை நாடிச் செல்லுபவரை அவன் எவ்வாறு பேணினான் என்பதையும் செல்பவர் நிலைக்கு ஏற்ப அவர்களை எவ்வாறு ஓம்பினான் என்பதையும் பல வரிகளில் காட்சிப்படுத்துகிறார் உருத்திரங் கண்ணனார்.

குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்
பகல் செய் மண்டிலம் பாரித்தாங்கு
முறை வேண்டுநர்க்குங் குறைவேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க் கருளி
இடைத் தெரிந்துணருமிருடீர் காட்சிக்
கொடைக் கடனிறுத்த கூம்பாவுள்ளத் -441-445

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . நின்னரைப்
பாசியன்ன சிதர்வை நீக்கி
ஆவியன்ன அவிர் நூற் கலிங்கம்
இரும்பேரொக்கலொடு ஒருங்குடன் உடீஇக்
கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
வல்லோன் அட்ட பல்லூன் கொழுங்குறை
அரி செத்துணங்கிய பெருஞ்செந்நெல்லின்
தெரி கொள் அரிசித் திரணெடும் புழுக்கல்
அருங்கடித் தீஞ்சுவை அமுதொடு பிறவும்
விருப்புடை மரபிற் கடிப்புடை அடிசில்
மீன் பூத்தன்ன வான் கலம்பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து

ஆனா விருப்பின் தானின்றூட்டி
மங்குல் வானத்துத் திங்களேய்க்கும்
ஆடுவண்டிமிரா அழலவிர் தாமரை
நீடிரும் பித்தை பொலியச் சூட்டி
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
அன்றே விடுக்கும் அவன்பரிசில் –467–493

மக்கள் மேல் மன்னன் கொண்ட ஈடுபாட்டை, மணிமேகலையும் வெளிப்படுத்துகிறது.

மணிமேகலை வாழ்ந்த காலத்தில் காஞ்சியில் ஏற்பட்ட பஞ்சம் பற்றியுரைக்கிறது மணிமேலை.

பொன்னெயிற் காஞ்சி நாடு கவினழிந்து
மன்னுயிர் மடிய மழைவளம் கரத்தலின்
அந்நகர் மாதவர்க்கு ஐயம் இடுவோர்
இன்மையின் இந்நகர் எய்தினர் காணாய் –28: 156–159

என, காஞ்சியில் ஏற்பட்ட மழைவளம் கரத்தல் காரணமாக, மாதவர்கள் வஞ்சி மாநகருக்குச் சென்றனர் என்ற செய்தி சொல்லப்படுகிறது.

மழையின்மையால் செல்வமின்றிப் பொலிவிழந்திருந்த, தேவர்கோமான் காவன் மாநகர், '**மண்மிசைக்கிடந்தென வளந்தலை மயங்கிய, பொன்னகர் வறிதாப் புல்லென்றாயது**' (28-166-168) எனக் காட்டப்படுகிறது. அங்கு வந்த அப்பஞ்சத்திற்கு நீர்வளம் குன்றியதே காரணம் என்ற நிலையில்,

மயங்குவேன் முன்னர் ஓர் மாதெய்வம் தோன்றி
உயங்கா தொழி நின் னுயர் தவத்தாலோர்
காரிகை தோன்று மவள் பெருங்கடிஞையின்
ஆருயிர் மருந்தாலகனில முய்யும்
ஆங்க வளருளாலமரர் கோனேவலின்
தாங்கா மாரியுந் தானனிபொழியும்
அன்னாளிந்த வகனகர் புகுந்த
பின்னாணிகழும் பேரறம் பலவாற்
கார்வறங் கூரினும் நீர்வறங்கூராது
பாரக வீதியிற் பண்டையோரிழைத்த
கோமுகி என்னும் கொழுநீ ரிலஞ்சியொடு
மாமணிபல்லவம் வந்ததீங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனைமின்
என்று அறைந்த –28: 192–204

என்ற அடிகளில் தெய்வம் சொல்லி, பொய்கையும் பொழிலும் புனைந்த நிலை பேசப்படினும், நகர்ச்சிறப்புக்குப் பொய்கையும் பொழிலும் இயற்றுதல் நீர்வளம் பெருக அடிப்படை என்ற நிலையில் மன்னன் இவற்றை அமைத்தனன் என்று இதனைக் கருதலாம். குளம் தொட்டு வளம் பெருக்கிய தமிழரின் உணர்வு தொடர்ந்து வருகின்றமை இங்குப்புலப்படுகிறது. நீர்வளம் பெருக அவர்கள் கையாண்ட இவ்வழிமுறைகளில், மக்களின் துன்பத்தைப் போக்க, நகரச் சிறப்பினை மன்னன் பேணிய தன்மையும் புலப்படுகிறது. எனவே நகர்களின் சிறப்பிற்கு இன்று அறிவியலார் கூறும் நடை முறைகளைப் பண்டைத் தமிழரும் தெரிந்து வைத்திருந்தனர் என்பதும் அவற்றுள் ஒன்று நகர்களின் நீர்வளம் என்றும் குறையாதிருக்க வேண்டிய வசதிகளைச் செய்வது என்பதும் இதன் வழித் தெரியவரும் செய்திகள்.

மேலும் மன்னன் மக்களின் பசிபோக்க,

**செங்கோல் கோடியோ செய்தவம் பிழைத்தோ**
**கொங்கவிழ் குழலார் கற்புக் குறைபட்டோ**
**நலத்தகை நல்லாய் நன்னாடெல்லாம்**
**அலத்தற் காலையாகிய தறியேன்**
**மயங்குவேன்** *–28: 188–192*

என இரங்கும் நிலையும் இங்குச் சுட்டத்தக்கது. மன்னவன், செங்கோல் கோடினாலும், தவத்தில் தவறினாலும், அவன் ஆட்சியின் கீழ் மகளிரின் கற்பின் மேன்மை குறையினும், நாடு கெடும் என்ற நம்பிக்கை கொண்டு மன்னர்கள் இருந்தனர் என்பதையும் இங்குத்தெரிய வருகின்றோம்.

யுவமகாராஜன் சிவஸ்கந்தவர்மனுடைய மயிதவோலுச் செப்பேடுகள், சிவஸ்கந்தவர்மனுடைய ஹீரஹடஹள்ளிச் செப்பேடுகள், சாருதேவியினுடைய குணபதேயம் செப்பேடுகள் இவை மூன்றுமே அரசன் தானம் அளித்த செயலைக் குறிப்பன.

"காஞ்சீபுரத்திலிருந்து பல்லவ குலத்தைச் சேர்ந்தவனும், பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தவனுமான யுவமகாராஜன் சிவஸ்கந்தவர்மன் தான்ய கடத்தில் உள்ள அதிகாரிக்கு இடும் கட்டளையைக் கொண்டது சாசனம். ஆந்திரா பதத்தில் உள்ள விரிபரம் என்னும் கிராமத்தை, தன்னுடைய ஆயுள், தர்மம், வெற்றி ஆகியவற்றின் அபிவிருத்திக்காக அக்னிவேச கோத்திரத்

தவர்களான பூர்வகோட்டி ஆர்யன், கோநந்தி ஆர்யன் ஆகிய இரு பிராமணர்களுக்கு அவன் பிரம்மதேயமாக அளித்த செய்தியைத் தெரிவிக்கிறது.[139]

(வரி 1) காஞ்சிபுரத்திலிருந்து யுவமகாராஜனும் பாரத்துவாஜசகோத்திரத்தில் பிறந்தவனும் பல்லவ குலத்தைச் சேர்ந்தவனுமான சிவஸ்கந்தவர்மன் தம்ஞகடத்தின் (தான்யகடத்தின்) அதிகாரிக்கு ஆணையிடுகிறான்; (வரி 5) நம்மால் இப்போது நம்முடைய வெற்றிக்கும் அறம் ஆயுள் வலிமை ஆகியவற்றின் பெருக்கத்துமாக அகிவேஸ (அக்னிவேச்ய) ஸகோத்திரத்தைச் சேர்ந்த புவகோஜன் (பூர்வகோடி ஆர்யன்) அகிவேஸ (அக்னிவேச்ய) ஸகோத்திரத்துக் கோநந்திஜன் (கோநந்திஆர்யன்) ஆகிய இருபிராமணர்களுக்கும் ஆந்திரபதத்தில் உள்ள விரிபரம் என்னும் கிராமம் நம்மால் நீரோடட்டிக் கொடுக்கப்பட்டது (வரி 11). இந்த விரிபரம் என்னும் கிராமத்துக்குப் பிரம்ம தேயத்துக்கு உரிய எல்லா விலக்குகளும் அளிக்கப்படுகின்றன. உப்புக்காகக் குழிதோண்டாமை, ராஷ்டிரர்களால் அழிக்கப்பெறாமை, பொதிசுமக்கும் மாற்றுக் காளைகளைக் கைப்பற்றாமை, படை வீரர்கள் நுழையாமை, சோறு, தண்ணீர் (விறகு) கட்டில், தங்குமிடம் அளிக்க வேண்டாமை இன்னும் இவை போன்ற மற்றவைகளும் பிரம்ம தேய மரியாதைகள் அனைத்தும் உள்பட எல்லாப் பரிகாரங்களையும் பெற்றதாக விலக்கு அளிக்க வேண்டியது. விலக்களிக்கச் செய்ய வேண்டியது.

(வரி 21) எவன் நம் கட்டளையை மீறி பீடையும், பாதையும் அளிக்கிறானோ அவனுக்கு நம்மால் சரீரதண்டனை அளிக்கப்படும்"[140] என்று அமையும் இப்பிராகிருத செப்பேடு பல்லவ அரசனின் கொடையையும், அது தொடர்பான சிந்தனைகளையும் தருகின்றன. கிராமம் தானமாக அளிக்கப் பட்டபோது விலக்குகள் அளித்த தன்மை, அதில் குறுக்கிடுதல் கூடாது என்று சுட்டியமை போன்றன தமிழ் மன்னர் கொடைச் சிந்தனையிலிருந்து சிறிது வேறுபடுகிறது.

சிவஸ்கந்தவர்மனுடைய ஹீரஹடஹள்ளிச் செப்பேடு களிலும் இத்தகைய கிராமம் கொடை செய்த தன்மையையும்,

139. பல்லவர் செப்பேடுகள் முப்பது, ப. 356.

140. மேலது, ப. 36.

அதனை அடுத்து வந்த சிவஸ்கந்தவர்மன் நீட்டித்து அளித்த செய்தியும் இடம் பெறுகின்றன. "காஞ்சிபுரத்திலிருந்து அக்னிஷ்டோம, வாஜபேய, அச்வமேத யாகங்களைச் செய்த தர்மராஜாதி ராஜன், பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தவன். பல்லவவம்சத்தைச் சேர்ந்தவனான சிவஸ்கந்தவர்மன் தன்னுடைய அதிகாரிகளுக்குக் கட்டளையிட்டு அறிவிப்பதாக உள்ளது இந்தச் சாசனம். ஸாதாஹநி ராஷ்டிரத்தில் சில்லரேக கொடுங்க என்னும் ஊரின் தென்புறம் உள்ள தோட்ட நிலத்தை மகாராஜரான பப்பசுவாமிகள் ஆபிட்டி என்னும் கிராமத்தில் வசிப்பவர்களும் சில்லரேக கொடுங்க கிராமத்தை அனுபவிப்பவர்களுமான பிராமணர்களுக்கு முன்னாளிலே இதைத் தானம் செய்தாராம். இதைப் பல்லவ மன்னன் சிவஸ்கந்தவர்மன் அந்தப் பிராமணர்களுக்கு வேறு சில பூமிகளோடு மறுபடியும் அளித்துப்பட்டயத்தை வழங்கினான். முதலில் அந்தத்தானம் அநேகங்கோடி பொன்னையும் நூறாயிரம் பசுக்களையும் உழவு நிலங்களையும் அளித்தவர் என்றும் அவர் கட்டளையை யாரும் மீறமுடியாது என்றும் வர்ணிக்கப்பட்டிருக்கும் ஓர் அரசருடைய - அவருடைய குல கோத்திரத்தினுடைய-தர்மம், வலிமை, புகழ் ஆகியவற்றின் பெருக்கத்துக்கும் வெற்றிக்கும் வெற்றிப் பேற்றுக்குமாகச் செய்யப்பட்டதாம்"[141] என்ற செய்தி இச்செப்பேடுகள் குறித்தது.

இங்குப் பிராமணர்களுக்குக் கொடுத்தது, கிராமத்தின் தோட்டம் தானம் செய்யப்பட்டது, நீட்டித்துக் கொடுக்கப்பட்டது, விலக்கு அளிக்கப் பெற்ற தன்மை, இந்தக் கொடைக்குத் தீமை, கொடுமை செய்யக் கூடாது என்ற செய்திகள் தெரியவருகின்றன.

சாருதேவியினுடைய குணபதேய செப்பேடுகள் பகவானுக்கு நிலம் அளித்தது குறித்து இயம்புகிறது.[142]

". . . . சாருதேவி (கட்டளையிடுகிறாள்)

வரி 4: (விஜய) ராஜ தடாகத்தின் அருகில் குடிநீர்க் கிணற்றின் வடபுறம் ஆதுகன் என்பான் பயிரிடும் நிலத்தில் தாலூரில் உள்ள கூளி மகத்தரகர் கோயிலில் பகவான் நாராயணனுக்கு நம்முடைய ஆயுள் வலிமை வளர்ச்சியைச்

141. மேலது, பக். 361,362. 142. மேலது, பக். 373, 374.

செய்வதற்காக நான்கு நிவர்த்தனம் நிலம் நம்மால் அளிக்கப்பட்டது.

வரி 10: இதை அறிந்து ஊராரும் ஆயுக்தர்களும் எல்லா விலக்குகளும் அடையும்படி விலக்க வேண்டியது; விலக்கச் செய்ய வேண்டியது.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

சுலோகம் 2. தான் அளித்ததோ பிறர் அளித்ததோ எதுவாயினும் பூமியை அபகரித்தவன் நூறாயிரம் பசுக்களைக் கொன்ற கொடுஞ் செயலைச் செய்தவன் ஆவான்" என்று அமைகிறது.

புலவர்க்குத் தானம் அளித்தமை, ஊர்களைத் தானமாக அளித்தமை,

> **முந்நூறூர்த்தே தண்பறம்பு நன்னாடு**
> **முந்நூறுஊரும் பரிசிலர் பெற்றனர்**
> **யாமும் பாரியுமுளமே**
> **குன்றும் உண்டு நீர் பாடினிர் செலினே**
>
> –புறம். 110. 3–6

போன்றன சங்கப் பாக்களில் புலப்படும் செய்திகள். பிறருக்கு அளித்தல் என்பது இங்குப் புதியதாக அமைகிறது. தவிர, பிற விலக்கு அளித்த செய்திகள், கொடையைத் தடுப்பதனால் அல்லது மாற்றுவதால் அடையும் சாபம் போன்றனவும் இங்குப் புதியன. எனவே மனிதநேயம் சார்ந்த இந்த உணர்வுகளில் ஒற்றுமையிருப்பினும் வெளிப்பாடுகளில் வேறுபடுவதை இங்குக் காண்கிறோம்.

இதனைப் போன்றே பள்ளன் கோயில் செப்பேடும் சமணர்க்குக் கொடுத்த பள்ளிச்சந்தம் பற்றியியம்புகிறது.[143]

புலவர்களைப் பேணியமையும், தம்மை நாடியவரைப் புரந்தமையும் தமிழ் மன்னர் மரபாகக் கொண்டிருந்த வழக்கு. விருந்து புறந்தருதல் என்ற தமிழரின் இயல்பான பண்பாடு மன்னனிடமும் காணப்பட்டதைத் திரையனின் வரலாறு தர, பல்லவரின் வரலாறும் அம் மன்னர்தம் கொடைப்பண்பைக்

---

143. மேலது, ப. 5.

காட்டுகிறது. இருப்பினும் இக் கொடையில் சில மாற்றங்களைக் காண்கிறோம். பிரம்மதேயமாக, பள்ளிச்சந்தமாகக் கொடையளித்தல் இங்குப் புதியதாக அமைகிறது. 'அறவிலை வணிகன் ஆயலன்' என, அறம்கருதி கொடை செய்யாத ஆய்அண்டிரன் பற்றிய செய்தி அன்று அறம் கருதியும் அறம் செய்தமை இருந்தமையைச் சுட்டும். நல்விருந்தாக வானத்தவர்க்கு அமைவான் விருந்து பேணுபவன் என்ற எண்ணம் இருந்த அதே நேரத்தில், குறளாசிரியர் கொடையைத் தடுப்பவன் மேல் சுட்டும் சாபமும் இங்கும் புலப்படும்.

**கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்**
**உண்பதூஉம் இன்றிக் கெடும் – குறள். 166**

என, வள்ளுவர் இடும் சாபம் போன்று இங்கும் பல்லவர், கொடையைத் தொடராதவனை, தொடரவிடாது செய்பவனைச் சபித்தல் ஒத்துநோக்கத் தக்கதாக அமைகிறது. அதே நேரத்தில் இந்தக் கொடை தனிமனிதன் சிறப்புடன் குலத்தின் சிறப்புக்கும் வேண்டிச் செய்யப்படுதல் இங்குப் புதியதாக அமைகிறது.

இந்நிலையில் கச்சி, காஞ்சி ஆட்சியாளர்கள் பற்றியும் ஆட்சிமுறை பற்றியும் செய்திகள் இந்த அளவிற்கே இவ்வரலாறுகளினின்றும் புலப்படுகின்றன. மேலும் சான்றுகள் கிடைக்கும் போது மேலும் புதிய செய்திகள் இவை குறித்துக்கிடைக்கலாம்.

## இயல் - 4

# வாழ்வியல்

முதூர்களாகத் திகழ்ந்த கச்சியும் காஞ்சியும் இணைந்து நகராக மாறுகிறது. இயற்கையின் அரவணைப்பில் காணப்பட்ட சிறிய அமைப்புகள் ஒரே நகராக இணைந்து அகநகர் புறநகர் கொண்டு விரிவடைகிறது. ஆட்சியாளர்கள் பலர் மாறி மாறி ஆட்சி புரிந்து வருகின்றனர். தமிழர் வாழ்ந்த இடத்தில் அவர்களுடன் மூவறுபாடை மாக்களும் வசிக்கத் தொடங்குகின்றனர்.[1] இத்தகைய சூழல் மாற்றத்தில் வாழ்ந்து வந்த மக்கள் வாழ்வு முறைகளும் மாற்றம் பெற்று வந்திருக்க வேண்டும் என்பது ஊகித்தலுக்கு இயலக் கூடிய ஒன்று; ஐயத்திற்கு இடமில்லாத ஒன்று. எனினும் இந்த வரலாற்றை அறிய முற்படும் போது இம்மக்களின் வரலாற்றை முறையாக, முழுமையாக அறியக் கூடவில்லை. ஆயினும் கிடைக்கும் செய்திகளிலேயே இங்கு அக்காலத்தில் வாழ்ந்து வந்த மக்கள் சிறந்ததொரு நாகரிகமுடையதொரு வாழ்க்கை வாழ்ந்து வந்துள்ளனர் என்பது தெளிவுபடுகிறது. இவர்களின் கல்வி சமயம் பற்றிய செய்திகள் தெரியவரும் அளவிற்குப் பண்பாடு, வணிகம் தொடர்பான செய்திகள் கிடைக்கவில்லை. எனினும் கிடைக்கும் சில செய்திகளிலேயே அவர்களின் மிகச் சிறந்த பண்பாடும், வணிகவளமும் கல்வியின் மேம்பாடும் புலப்படுகின்றன.

காஞ்சி மக்கள் எப்போது அங்கு வாழத் தொடங்கினர் என்பதற்கு நேரடியான சான்றுகள் இல்லை. எனினும் இவர்கள்

---

1. மொய்த்த மூவறு பாடை மாக்களில் - மணி. 28:221.

இங்கு வாழத் தொடங்கிய காலம் மிகத் தொன்மையானது என்பது அகழாய்வுச் சான்றுகள் மூலமும், பிற்காலப் பிற வரலாற்றுச் சான்றுகள் மூலமும் உணரக்கூடிய ஒன்று.

"இந்தியாவில் பழைய கற்காலப் பண்பாடு சுமார் ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு முன்னரேயே தோன்றியிருக்கலாம் என டாக்டர் எச்டி. சங்காலியா கருதுகிறார். கற்கருவிகளின் பொதுத் தன்மைகளையும் தொழில் நுட்பங்களையும் அடிப்படையாகக் கொண்டு இந்தியாவின் பழைய கற்காலத்தை 1. முதற் கற்காலம் 2. இடைக்கற்காலம் 3. கடைக்கற்காலம் என மூன்று கால கட்டங்களாகப் பிரிக்கலாம். தமிழ்நாட்டில் மேற்கூறிய மூன்று கால கட்டங்களைச் சேர்ந்த கற்காலப் பண்பாடுகளும் நிலவியிருந்ததற்கான சான்றுகள் பல இடங்களில் கிடைத்துள்ளன. செங்கல்பட்டு மாவட்டத்தில் முதல் இரண்டு கால கட்டங்களைச் சேர்ந்த ஏராளமான கற்கருவிகள் கோர்த்தலையாற்றுப் பள்ளத்தாக்கிலும் அதன் கிளை ஆறான ஆரணியாற்றுப் படுகைகளிலும் அதன் கரையோரங்களிலும் கிடைக்கின்றன" என்று சொல்லிச் செல்லும் து.துளசிராமன்[2] செங்கை மாவட்டத்தில் பழைய கற்காலக் கருவிகள் கிடைக்குமிடங்களாக, காஞ்சிபுரம் வட்டம் சார்ந்த பரந்தூர், வதியூரைக் குறிப்பிடுகின்றார்.[3]

இச்செய்திகள் காஞ்சிபுரம் அருகில் கற்காலத்தில் மக்கள் வசித்தமையைத் தெரிவிக்கின்றன. குறிப்பாக அன்று காஞ்சியில் மக்கள் வசித்தனர் என்பது இங்குத்தெரியவில்லை எனினும் இதன் அருகாமையில் மக்கள் வசித்திருக்கும் தன்மை, காஞ்சியிலும் வசித்திருக்கலாம் என்ற எண்ணத்தைத்தருகிறது. தவிர, சங்க காலத்தில் காணப்படும் இவ்வூர் விளக்கமும் இதற்கு அரணாகிறது. அங்குக் கச்சி மூதூர் என்று சுட்டப்படுகிறது. புகழ் பெற்ற ஊராகவும் காட்டப்படுகிறது. மேலும் இப்பகுதிகளில் கிடைக்கும் அகழ்வாய்வு சான்றுகளும் இதன் தோற்றமும் வளர்ச்சியும் சங்க காலத்திற்கு முன்னமேயே அமைந்தது என்பதைக் காட்டி, இதன் தொன்மையை உறுதிப்படுத்துகின்ற நிலையைக் காண்கிறோம். "சங்க காலம் தொட்டே தலை சிறந்த நகரங்களில் ஒன்றாக விளங்கும் காஞ்சியின் தொன்மையை

---

2. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 166.

3. மேலது, பக். 170, 171.

அறியும் பொருட்டு மத்திய அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையும் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையும் காஞ்சியின் ஊடே ஓடிவருகின்ற வேகவதி ஆற்றின் வடகரையில் அமைந்திருக்கின்ற பல்லவமேடு என்ற மேட்டுப்பகுதியில் அகழாய்வு செய்தன. தமிழ்நாடு அரசு பல்லவமேட்டில் 1971ஆம் ஆண்டில் இரண்டு இடங்களில் அகழாய்வு மேற்கொண்டது. வேகவதி ஆற்றின் ஓட்டம் மாறி இருக்கிறது என்பது இவ்வகழாய்வு மூலம் தெரியவந்தது. காஞ்சியிலே சென்னைப் பல்கலைக் கழகம் காமாட்சி அம்மன் கோயிலுக்கு அருகிலும் வரதராஜப் பெருமாள் கோயிலுக்கு அருகிலும் ஞானப்பிரகாச மடத்திற்குப் பின்புறமும் வசந்த தோட்டத்திலும் ஏனைய இடங்களிலும் ஆக 6 ஆண்டுகள் தொடர்ந்து அகழாய்வு நடத்தியது. இவ்வாறு காஞ்சி மாநகரில் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்ட அகழ்வாராய்ச்சிகளின் மூலமாகப் பல சான்றுகள் நமக்குத் தெரியவந்துள்ளன" என எழுதும் மா.சந்திரமூர்த்தி இங்குக் கிடைத்த பொருட்களையும் சுட்டுகின்றார்.[4] இவ்வாறு கிடைத்த பொருட்களில் சங்க காலம் சார்ந்தனவும் உண்டு என்பதை அறிந்து கொள்ளவும் இந்தத் தொல்லியல் அறிஞர்களின் கருத்துகள் நமக்குத் துணைபுரிகின்றன.

சங்க கால மக்கள் அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்திய அழகிய மட்கலங்கள், துளையிடப்பட்ட வடித்தட்டுகள், வண்ணம் தீட்டிய பானைகள், அம்மக்கள் அணிந்த பல விதமான அணிகள், மணிகள், சுடுமண் காதணிகள், இங்குக் கிடைத்த நூல் இழைகள் வட்டச் சில்கள், எலும்பாலான தாயக் கட்டைகள், சுடுமண் சதுரங்கக் காய்கள், வழிபாட்டுப் பொருட்கள், தானியத்தைச் சேமித்து வைக்கும் பெரு மட்கலங்கள், கால்நடைகள் நீர் அருந்துவதற்காக வைக்கப்பட்ட நீர்த் தொட்டிகளின் எஞ்சிய பகுதிகள், அடுப்புகள், சுட்டபெருஞ் செங்கற்கள், உறை கிணறுகள், இரும்பாலான தூண்டில் முள் போன்ற பொருட்கள் இங்குக் கிடைத்தவையாகத் தெரியவருகின்றன.[5]

அகழாய்வில் கிடைத்த இச்சான்றுகள் அவர்கள் பயன்படுத்திய மட்கலங்கள் பற்றிய அறிவைத் தருகின்றது;

4. மேலது, ப. 112.

5. மேலது, பக். 114-120.

அவர்களின் நெசவுத் தொழில் அறிவைத் தருகின்றது; பொருட்களைப் பாதுகாத்து வைத்துக் கொள்ளும் முறைபற்றிய அறிவைக் காட்டுகிறது; உலோகங்களைப் பயன்கொண்ட முறைமையைக் காட்டுகிறது; கால்நடைகளை வீட்டில் வளர்த்துப் பாதுகாத்தமையைக் காட்டுகின்றது; விளையாட்டுப் பொருட்களை இனம் காட்டுகிறது, இவற்றுடன் இலக்கியம் காட்டும் சான்றுகளும் மேற்சுட்டப்பட்ட அறிவுச் சிந்தனைகளுடன் அவர்கள் திகழ்ந்ததை உறுதிப்படுத்துமாறு அமைகின்றன; அவர்களிடம் காணப்பட்ட பண்பாட்டுக் கூறுகளையும் வெளிப்படுத்துகின்றன. இவையனைத்தும் காஞ்சிமக்கள் வாழ்க்கையை, இயல்பாகவும், சிந்தித்தும் வாழ்ந்த வாழ்க்கையைத் தெளிவாக்குகின்றன.

எனவே இவற்றின் மூலம் சங்க காலத்திற்கு முன்னரேயே கச்சி, காஞ்சி இரண்டு ஊர்களும் மக்கள் சிறப்புற வாழ்வதற்கு ஏற்ற நிலையில் அமைந்திருந்த நிலையில் மக்களின் வாழ்வு இங்குச் சிறந்து காணப்பட்டது என்பதையுணர முடிகின்றது. தவிர, எந்தச் சிறப்பும் திடீரென தோற்றம் பெறுதல் என்பது இயலாத ஒன்று. இந்நிலையில் இங்குப் பலகாலமாக மக்கள் வாழ்ந்து வந்து படிப்படியே பெற்ற சிறந்த வாழ்க்கையின் அடையாளங்களாகவே இவற்றைக் கொள்ளல் பொருத்தமானது. இப்பின்னணியில் மக்கள் தங்களுடைய வாழ்வு சிறக்க மேற் கொண்ட வாழ்வியல் முறைகளை இங்கு ஆராயலாம். அவர்களின் அன்றாட வாழ்வில் காணப்பட்ட பழக்கவழக்கங்கள், அவற்றைப் பண்பட்ட முறையில் அமைத்துக் கொண்ட திறன், அறிவு வளர்ச்சிக்காக மேற்கொண்ட கல்வி முறைகள், அறம், நம்பிக்கை, சமயம் சார்ந்த செயற்பாடுகள், பொருளாதாரச் சிந்தனைகள், தொழில்கள், அதன் அடிப்படையிலும் தேவை கருதியும் மேம்படுத்திய வாணிகம் போன்றன இங்கு ஆராயப்படும் கருத்துகள்.

## 1. பண்பாடு

தமிழக மக்களின் வாழ்வியலில் அவர்தம் பண்பாட்டுச் சிந்தனைகளும் அவை தொடர்பான பழக்கவழக்கங்களும் இன்றும் எண்ணத்தக்கன; தொடரத்தக்கன. இல்வாழ்க்கையின் முக்கியக் குறிக்கோளாக அவர்தம் விருந்தோம்பும் திறன் இருந்தது. 'விருந்து கண்ட போதென்னுறுமோ' என்று கம்பன் சீதையின் வாயிலாகப் புலப்படுத்தும் உணர்வும் தமிழனின் பண்பாட்டு மரபின் பிரதிபலிப்பே. மக்கள் மட்டுமல்ல; மன்னனும் இந்த

விருந்தோம்பும் பண்பினைப் பேணிக் காத்தான் என்பது முன்னர்ப் பேசப்பட்டது. இந்த விருந்தோம்பும் பண்பு வாயிலாகப் புரத்தல் என்ற அவர் தம் மனிதநேயம் மட்டுமன்று, பிற அவர்களின் பண்பாடு சார்ந்த வாழ்வியல் முறைகளும் தெளிவுபடுகின்றன. குறிப்பாக அவர்தம் உணவுப்பழக்கம், அது தொடர்பான சிந்தனைகள், உடைப்பழக்கம், அது தொடர்பான பண்பாடுகள் போன்ற கூறுகளும் வெளிப்படுகின்றன. காஞ்சியின் வரலாற்றிலும் தமிழரின் இந்தப் பொதுப்பண்பு சிறப்பாக வெளிப்படுகிறது.

உயிர் வாழ்க்கைக்கு அடிப்படை உணவு. முதலில் கிடைத்தவற்றையும் பின்னர் பெற்றவற்றையும் பின்னர் பெற்றும் உணவுண்ட வழக்கம் தமிழர் வாழ்வியலில் காணக் கிடைக்கும் வழக்கம். தவிர, தாங்கள் வாழுமிடங்களில் கிடைக்கும், இயல்பாகக் கிடைக்கும் பொருட்களை மிகுதியாக உணவாகக் கொள்ளும் தன்மையும் இவர்களின் வாழ்வு தரும் ஒரு கூறாகும். தமிழகம் முழுவதும் காணப்பட்ட, வரலாற்றுக் காலம் தொட்டுக் காணப்பட்ட இத்தகைய வழக்கங்களே கச்சி மூதூரிலும் காணப்பட்டிருக்கின்றது. இதனைப் போன்றே பிறருக்கு உணவளித்துப் பேணும் வழக்கமும் தமிழரிடம் தொன்று தொட்டுக் காணப்பட்டு வந்த / வரும் ஒரு பண்பாடாகும். உண்டி அளிப்பது உயிர் அளித்தலுக்குச் சமமானதாகக் கருதும் மனநிலையை அவர்கள் கொண்டிருந்தனர் என்பது அம்மக்களின் வாழ்வியல் புலப்படுத்தும் ஒன்று.

பெரும்பாணனுக்கு வழிகாட்டும் புலவர் பிற ஆற்றுப்படை நூல்கள் காட்டுவது போலவே, வழியில் ஒவ்வொரு நிலமாந்தரும் விருந்தோம்பி நிற்பர் என்பதையும் அவ்விருந்தோம்புதலில் அவர்கள் நிலத்தில் கிடைக்கும் உணவுப் பொருட்கள் இடம் பெறும் என்பதையும் விளக்குகிறார். இந்நிலையில் கச்சியில், கச்சியின் அருகே சிறந்த துறைமுகமாக விளங்கிய பட்டினத்திலும் இவர்கள் அளிக்கும் உணவு, உணவு உண்ணுதலில் அவர்களிடம் காணப்பட்ட மிகச் சிறந்த ஒழுங்கைக் காட்டுகிறது.

> பைங்கொடி நுடங்கும் பலர் புகுவாயில்
> செம்பூத்தூய செதுக்குடைமுன்றில்
> கள்ளடு மகளிர் வள்ள நுடக்கிய
> வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பி
> னீர்ஞ் சேறாடிய விரும்பல் குட்டிப்

பன்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது
நென் மாவல்சி தீற்றிப் பன்னாட்
குழி நிறுத்தோம்பிய குறுந்தாளேற்றைக்
கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்
– பெரும். 337–345

இதற்கு உரை எழுதும் நச்சினார்க்கினியர், "பசிய கொடிகள் அசையும் கள்ளுண்பார் பலரும் புகுகின்ற வாயிலிடத்து, தெய்வத்திற்குத் தூவின செய்ய பூ வாடலையுடைய முற்றத்தில் கள்ளைச் சமைக்கின்ற மகளிர் வட்டில் கழுவின வடிந்து சிந்தும் சில நீர் பலகால் வடிதலின் நிறைந்து வழிந்த குழம்பிடத்து ஈரத்தையுடைய சேற்றையளைந்த கரிய பலவாகிய குட்டிகளையுடைய பலவாகிய மயிர்களையுடைய பெண்பன்றிகளுடனே புணர்ச்சியைக் கருதும் கருத்தாற் போகாமல், நெல்லையிடித்த மாவாகிய உணவைத் தின்னப் பண்ணி, பல நாள் குழியிலே நிறுத்திப் பாதுகாத்த குறிய காலையுடைய ஆண்பன்றியின் கொழுவிய நிணத்தையுடைய தசையோடே களிப்பு மிக்க கள்ளைப் பெறுகுவிர்" என்கின்றார்.[6]

இப்பகுதி நெய்தல் நில மாந்தரின் உணவு பற்றிய சிந்தனையைத் தருகிறது. அப்பகுதியில் கிடைக்கும் மீன் உணவு பற்றிய செய்தி இங்கு இல்லை. எனவே இங்குச் சுட்டப்படும் உணவினைச் சிறப்புணவாகக் கருதிப்பார்க்கலாம். முதலில் 'கள்' பற்றிய சிந்தனை. கள் அக்காலத்தில் தடுக்கப்பட்ட பொருளாக இல்லை. ஏற்கப்பட்ட உணவுப் பொருளாகக் கருதப்பட்டுள்ளது தெரிகிறது. அடுத்துத் தனித்தும் புலால் உணவுடன் சேர்த்தும் கள் உண்ணும் பழக்கம் அம்மக்களிடம் இருந்தமை தெளிவு படுகிறது. இங்குச் சுட்டப்படும் புலால் உணவு, பன்றியின் நிணம். அன்று பொதுவாகப் புலால் உணவுப் பொருளாக ஏற்கப்பட்டிருந்தது எனினும், உணவிற்கென்றே பன்றியை வளர்த்தமையை, சிறப்பாக உணவளித்து வளர்த்தமையை இப்பாடற்பகுதியினின்றும் அறிய வருகிறோம். பெண் பன்றிகளுடன் இணைய விடாத நிலையில் ஆண்பன்றிகளுக்கு உணவாக மாவு அளித்து, இவை வெளியே செல்லா வண்ணம் குழிகளில் நிறுத்திப் பாதுகாப்புடன் வளர்த்த பின்னர் அவற்றை

---

6. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், பக். 242,243.

உணவாக உட்கொண்ட தன்மை இவர்களின் சுகாதாரம் சார்ந்த உணர்வைப் புலப்படுத்துகிறது. தவிர, கள்ளினைத்தனித்து அருந்தும் பழக்கம் இருந்தது என்பதை,

> திரள் கால்
> சோலைக் கமுகின் சூல் வயிற்றன்ன
> நீலப் பைங்குடம் தொலைச்சி
> நாளும் பெரு மகிழ் இருக்கை மரீஇ -பெரும். 380-83

என, சோலையில் பாணரை, குடித்து மகிழ்வுடன் இருக்கச் சொல்லும் புலவர் கூற்றுத் தெளிவாக்குகிறது.

இதற்கு, "திரண்ட தண்டினையுடைய சோலையிடத்து நிற்குங் கமுகினையுடைய சூல் கொண்ட வயிற்றையொத்த பச்சைக் குப்பிகளை யுண்டு போக்கி" என நச்சினார்க்கினியர் உரை எழுதுவார்.[7]

நீர்ப்பெயற்றுத் துறையில் கிடைக்கும் செய்தியில் பன்றிக்கு மாவு அளித்துப் பேணிய செய்தியில், அன்றைய மகளிர் நெல் அரிசியினின்றும் இன்று போன்றே மாவு இடித்துப் பயன்படுத்திய செய்தியும் புலப்படுகிறது.

மக்களின் விருந்தோம்பும் பண்பில் வெளிப்பட்ட இந்த உணவு பற்றிய செய்திகளை மன்னன் விருந்தோம்பும் தன்மையிலும் அறிய முடிகிறது. திரையனின் அரண்மனையில், திரையனை நாடிச் செல்பவருக்கு அவன் உணவளித்துப் போற்றிய விதம் புலவரால் இயம்பப்படுகிறது.

> கொடுவாள் கதுவிய வடுவாழ் நோன்கை
> வல்லோன் அட்ட பல்லூன் கொழுங்குறை
> யரி செத்துணங்கிய பெருஞ்செந்நெல்லின்
> றெரிகொள் அரிசித் திரணெடும் புழுக்க
> லருங்கடித் தீஞ்சுவை யமுதொடு பிறவும்
> விருப்புடை மரபிற் கடிப்புடை யடிசின்
> மீன்பூத்தன்ன வான்கலம் பரப்பி
> மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்
> தானா விருப்பிற் றானின்றூட்டி -பெரும். 471-478

---

7. மேலது, பக். 247,248.

என்கின்ற அடிகள் மன்னன் விருந்தோம்புதலில் உணவளித்துப் பேணுதலின் சிறப்பு காட்டுகின்றன.

"வளைந்த அரிவாளைக் கொண்ட வடுவழுந்தின வலியையுடைத்தாகிய கையினையுடைய மடையனாக்கின பல இறைச்சியிற் கொழுவிய தசைகளும் நிறத்தால் ஞாயிற்றை யொத்து உலர்ந்த பெரிய செந்நெல்லின்னுடைய பொறுக்கிக் கொண்ட அரிசியாலாக்கின திரண்ட இடைமுரியாத சோறும் பெறுதற்கரிய மிகுதியையுடைய இனிய சுவையினையுடைய கண்ட சருக்கரை முதலியவற்றோடே கூறாதொழிந்தனவும் விருப்பமுடைத்தாகிய முறைமையினையுடைய தலையாப்பும் பரத்தலையுடைய அடிசிலைத் திசையினையுடைய ஆகாயத்திடத்தே உருக்கள் தோன்றினாற் போன்ற சிறிய வெள்ளிக் கலங்களையும் திங்களை யொக்கும் பெரிய வெள்ளிக் கலங்களையும் நும்முடைய பின்ளைகளுக்கு இடையே பரப்பி தான் முகம் பொருந்தி அமையாத ஆசையுடனே நும்முடைய பிள்ளைகளைப் பார்த்து நின்று உண்ணப் பன்னுவித்து" என இதற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதுகிறார்.[8] உணவு, உண்ட விதம், அளித்த விதம் என பல செய்திகள் இங்குப் புலப்படுகின்றன. கள் உண்ணுதல் எவ்வாறு தடுக்கப்படாத உணவாகக் கருதப்பட்டதோ அதனைப் போன்று, புலால் உணவு உண்ணுதலும் அம்மக்களிடம் பரந்து காணப்பட்ட உணவுப் பழக்கமாக அமைந்தது இங்கும் தெளிவுபடுகிறது. எலும்பில்லாத தசைகளை அளித்தல் சிறப்பாகக் கருதப்பட்டது தெரிகிறது. தவிர, அரிசியிலும் இடை முரியாத அரிசியில் ஆக்கின சோறு சிறப்பாகக் கருதப்பட்டது தெரிகிறது. உண்ணும்போது இனிப்புண்ணும் வழக்கம் இருந்ததும் புலப்படுகிறது. இத்தகைய உணவை அளித்தல் மட்டும் சிறப்பாகக் கருதப்படவில்லை. அவற்றை அளிக்கும் முறையும் சிறப்பாக அமைய வேண்டும் என்பது உண்கலங்கள் பற்றிய விளக்கத்திலும், முகமலர்ச்சியுடன் அருகிருந்து அளித்த விதத்திலும் புலப்படும் அவர்தம் பண்பாடு (பெரும் 477-80). இதனையே தான் வள்ளுவரும் **நோக்கக் குழையும் விருந்து** என்பதில் புலப்படுத்துகிறார். தவிர, அப்ப வாணிகர் பற்றிய செய்தியும் (பெரும். 375-77) யானைப்பாகர் யானைக்கு நெய்யுடன் பிசைந்த கவளம் அளிக்கும் செய்தியும் அம்மக்களின் வாழ்வில் இடம் பெற்றிருந்த உணவுப் பொருட்களைத் தெரிவிக்கின்றன.

---

8. மேலது, பக். 258,259.

இச்செய்திகளைப் பொதுவாகச் சங்க இலக்கியங்களில் காணும் தன்மையில் தமிழகம் முழுமையும் தமிழர்கள் கொண்டும் கொடுத்தும் வாழ்ந்த முறை இங்குத் தெளிவுபடுகிறது.

விருந்தோம்புதலில் மட்டுமல்லாது பொதுவாகவும் உணவு அளித்தல் என்பது சிறந்த அறமாகத் தமிழர்களால் பின்பற்றப்பட்டு வந்தது என்பது இம்மக்கள் வாழ்வியல் காட்டும் பண்பு. மணிமேகலை புத்த மதத் துறவி. எனினும் அவள் சமுதாயப்பணியாகக் கொண்டு திகழ்ந்தது உணவு அளிக்கும் பணியையே. இதனை மணிமேகலை மிகத் தெளிவாகக் காட்டுகிறது. மேலும் இந்த உணவை இவருக்குக் கொடுக்க வேண்டும்; இன்னாருக்குக் கொடுக்கக் கூடாது என்ற வேறுபாடு இன்றி அனைவருக்கும் கொடுத்தலைச் சிறப்பாகக் காட்டுவார் சாத்தனார்.

**காணார் கேளார் கான்முடமானோர்**
**பேணா மாக்கள் பேசார் பிணித்தோர்**
**படிவ நோன்பியர் பசி நோயுற்றோர்**
**மடி நல் கூர்ந்த மாக்கள் யாவரும்**
**பன்னூறாயிரம் விலங்கின் தொகுதியும்**
**மன்னுயிர் அடங்கலும் வந்தொருங் கீண்டி**
**அருந்தியோர்க் கெல்லாம் ஆருயிர் மருந்தாய்ப்**
***–மணி. 28:222–228***

எனவே உணவளித்தல் தமிழரின் பொது அறமாகக் காணப்பட்ட நிலையைக் காஞ்சி வரலாறும் புலப்படுத்துகின்றது. இவ் உணவை ஆருயிர் மருந்து என்பார் சாத்தனார். எனவே இல்லறத்தார் இதனை முக்கியமான இல்லற ஒழுங்காகக் கொண்டு திகழ, அரசர்கள், துறவிகள் தம் சமுதாயப்பணியாக இதனைக் கொண்டு திகழ்ந்துள்ளனர் என்பது இங்குத் தெளிவுபடுகின்றது.

விருந்தோம்புதலில் உணவு பற்றிய செய்தி மட்டுமல்லாது, பிற கொடைப்பொருட்கள் பற்றிய செய்திகளும் தெரிய வருகின்றன. முக்கியமாக இடம்பெறுவது உடைபற்றிய செய்தி.

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே என்பது தமிழர் சிந்தனை. எனினும், உண்டியை விட மானங்காக்கும் உடையை அவர்கள் பெரிதும் போற்றினர். எனவே தான் கொடுப்பது **அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக்**

கெடும் என்றார் வள்ளுவர் (குறள்.166). மன்னர்களும் விருந்தோம்பும் போது புலவர்களின் அழுக்கேறிய கந்தைகளை முதலில் மாற்றி, புத்தாடைகளை உடுக்கச் சொல்லிய பின்னரே உணவளித்து மகிழ்ந்தமை சுட்டப்படுகிறது. இங்கும்

நின் அரைப்
பாசியன்ன சிதர்வை நீக்கி
ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம்
இரும்பேரொக்கலொடு ஒருங்குடனுடீஇ
—பெரும். 467—470

என, திரையன் செய்கை சுட்டப்படுகிறது,

மேலும் மென்மையிலும் நுண்மையிலும் சிறந்த ஆடைகள் அவர்களால் பயன்படுத்தப் பெற்ற தன்மை இங்கு மட்டுமல்ல, நீர்ப்பெயற்றுத் துறையில் செல்வமகளிர்

கூழுடை நல்லிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப்பனி தவழ்பவை போல்
பைங்காழ் அல்குல் நுண் துகில் நுடங்க
—பெரும். 327—29

காட்சி தருதலிலும் காட்சிப்படுத்தப்படுகிறது. எனவே இங்கும் தமிழகத்தில் பரவலாகக் காணப்பட்ட கலிங்கம், துகில் போன்ற ஆடைகள், அவற்றைக் குறிக்கும் சொற்கள், பண்பாட்டுத் தொடர்பு, வணிகத் தொடர்பு வெளிப்படுகின்றன.

உடை போன்று, பிற ஒப்பனைப் பொருட்கள் குறிப்பாக அணிகள் போன்றவையும் இங்குச் சுட்டப்படுகின்றன.

கொடும்பூண் மகளிர் (327), பைங்காழ் அல்குல் (325), கால, தமனியப் பொற்சிலம்பொலிப்ப (330-31) கைபுனை குறுந்தொடி (336) சுறவுவாய் அமைத்த சுரும்பு சூழ் சுடர் நுதல் (385), ஆடு வண்டு இமிரா அழல் அவிர் தாமரை நீடு இரும்பித்தை பொலியச் சூட்டி (481-2) உரவுக் கடல் முகந்த பருவவானத்துப் பகல் பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு, புனை இருங் கதுப்பகம் பொலியப் பொன்னின் தொடை அமைமாலை விறலியர் மலைய (483-86) போன்ற பல குறிப்புகள் அங்குக் காணப்பட்ட பொன்னணிகலன்களையும், அவற்றை அணிந்த திறத்தினையும் காட்டுவன. தவிர இவ்வாறு பொன், மகளிரால் பயன்படுத்தப்பட,

இரும்பினை அவர்கள் யானையின் தொடி செய்யப் பயன்படுத்தியமையையும், அகன்ற அரண்மனைகளில் யானைகளுக்கு இவ்வாறு இரும்பாலான தொடியினை அணிவிக்கும் தொழிலாளர் இருந்தனர் என்பதையும் பெரும் பாணாற்றுப்படை (436-440) வழியே உணர முடிகிறது. தொல்லியலாளர்களும் அகழாய்வுகளில் கிடைத்த பொருட்கள் மூலமாகக் கச்சியில் வாழ்ந்த மக்களின் உடை, அணிகள் பற்றிய தம் கண்டுபிடிப்புகளை வெளிப்படுத்துகின்ற நிலையில்[9] இலக்கியம் சுட்டும் இந்தப் பொருட்கள் அனைத்தையும் மக்கள் பயன்படுத்தியமை உறுதிப்படும் உண்மைகளாக அமைகின்றன.

உணவு, உடையுடன், உறையுளையும் சிறப்பாக அமைத்துக் கொண்டவர்கள் தமிழர்கள். மன்னன் அரண்மனை நகர் என்று அழைக்கப்பட்டமையைப் பெரும்பாணாற்றுப் படையில் திரையனின் அரண்மனையைச் சுட்டிச் செல்லுவார் புலவர். இந்த அரண்மனையின் அமைப்பும் சிறப்பும் பொலிவும் கருதி இதனைத் தாமரைப் பூவிற்கு உவமிப்பதையும் கண்டோம். அரண்மனையைச் சுற்றிச் சுடு மண்ணால் நெடிய மதில் அமைத்திருந்த பாங்கினை அறிய முடிகிறது. மேலும் முற்றம் மாடம் போன்றன காணப்படும் நிலையில் இது வியல் நகராகவும் திகழ்ந்தது தெரிகிறது. கச்சியில் காணப்பட்ட இந்த அரண்மனையைத் தவிர, இங்கு மக்கள் வாழ்ந்த இல்லங்கள் பற்றிய குறிப்புகள் இல்லை. எனினும் சுற்றிலும் இருந்த ஊர்களில் மக்கள் வாழ்ந்த உறைவிடங்கள் பற்றிய குறிப்புகள் உண்டு.

**மாடமோங்கிய மணல் மலி மறுகுகள்** (பெரும்.322) **பரதர்மலிந்த பல்வேறு தெருக்கள்** (பெரும்.323) **சிலதர் காக்கும் சேணுயர் வரைப்பு** (பெரும்.324) **கூழுடை நல்லில்**

---

9. People of Thondaimandalam had much in common with the rest of Tamilnadu in matters of dress and ornaments. The antiquity of Kanchi goes back to the megalithic period and the megalithic culture was spread over a vast area in South India. Excavations at these megalithic sites have yielded large quantities of shell bangles..... Apart from literary sources, one can turn to archaeological evidences, excavations at Kanchi have revealed terracotta bangles, beads and pendants....

-Mahabalipuram Studies, pp. 88-89

(பெரும். 327) **உயர்நிலை வான்தோய் மாடம்** (பெரும்.332-333) **தண்டலையுழவர் தனிமனை** (பெரும்.355) போன்றன இங்குத் தெரியவருகின்றன. சாதாரணமக்கள் வாழ்ந்த இல்லங்களுடன், செல்வச் செழிப்புடையோர் வாழ்ந்த வனமனைகள் இங்கு இருந்தமை புலப்படுகிறது. செல்வம், தொழில், சூழல் போன்ற பலவற்றிற்கும் ஏற்ப இவை அமைந்திருந்தமையும் தெளிவுபடுகிறது.

நீர்ப்பெயற்றுக்கு முன்னர் மறையவர் உறைபதியைக் காட்டுகின்றார் ஆசிரியர்.

> **செழுங்கன்றியாத்த சிறுதாட்பந்தர்ப்**
> **பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்**
> **மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது**
> **வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்**
> **மறைகாப்பாளர் உறைபதிச் சேப்பிற்**
> **பெருநல் வானத்து வடவயின் விளங்குஞ்**
> **சிறுமீன் புரையும் கற்பின் நறுநுதல்**
> **வளைக்கை மகடூஉ வயினறிந்தட்ட**
> **சுடர்க் கடைப்பறவை பெயர்ப்படுவத்தம்**
> **சேதா நறுமோர் வெண்ணெயின் மாதுளத்**
> **துருப்புறு பசுங்காய்ப்போழொடு கறிகலந்து**
> **கஞ்சுக நறுமுறி யளைஇப் பைந்துணர்**
> **நெடுமரக் கொக்கின் நறுவடி விதிர்ந்த**
> **தகை மாண் காடியின் வகைப்பட பெறுகுவிர்**
>
> —பெரும். 295–310

என மறையவர் பதிபற்றிய விளக்கத்தில் பைஞ்சேறு மெழுகிய தன்மை, கோழி நாய் காணப்படாமை, கிளி காணப்படுதல், கிளி மறைபயிற்றும் தன்மை, பறவையினது பெயரைப் பெறும் நெல் இவற்றுடன் "கொம்மட்டி மாதுளையினுடைய பசிய காய் மிளகு பொடி கலக்கப்பட்டுக் கருவேம்பினது நறிய இலை அளாவப்பட்டுச் சிவந்த பசுவினது நறிய மோரின் கண் எடுத்த வெண்ணெயின் கண்ணே கிடந்து வேகலின் வெம்மையுறுகின்ற வகிரோடே நெடியமரமாகிய மாவினது பசிய கொத்திடத்து நறிய வடுவினைப் போகட்ட அழகு மாட்சிமைப்பட்ட ஊறுகறியோடே சோற்றின் கூறுகளுண்டாகப் பெறுகுவிர்" (நச்சி. ப. 240) போன்ற எண்ணங்கள் பெறப்படுகின்றன.

துறைமுகத்தில் பரதவர் வாழுமிடங்களைக் காட்டும் போது, அவர்களின் வாழ்வியலில் காணப்படும் மாற்றத்தைக் காட்சிப் படுத்துகிறார் புலவர்.

பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்கும் சேணுயர் வரைப்பின்
நெல்லுழு பகட்டொடு கறவைதுன்னா
மேழகத் தகரோ டெகினங் கொட்குங்
கூழுடை நல்லில் –பெரும். 323–327

என, இத் தெருக்களில் எருது, பசுக்கள் காணப்படவில்லை. ஆயின் மேழகக் கிடாயுடன் நாய் காணப்படுகிறது. மேலும் உணவு வேறுபாட்டையும் இயம்புகிறார் (327-345). எனவே மக்களின் இருப்பிடத்தின் தன்மைகளும் வாழும் தன்மைக்கு ஏற்ப மாறியிருந்தது இங்குக் காணக்கூடுகிறது.

மேலும் • மணல் மலி தெருக்களாகப் பரதவர் வாழும் தெருக்கள் காணப்பட, கச்சியின் தெருக்கள் தேரோடியதால் குழிந்த தெருக்களாகக் காட்டப்படல் மண் தெருக்களாக இவை இருந்திருக்கும் நிலையைக் காட்டுகின்றன.

இத்தகைய செய்திகள், இம்மக்களின் வாழ்வியல் முறைகள் அவர்களின் சூழலுக்கும், சிந்தனைகளுக்கும் ஏற்ப அமைந் திருத்தமையைக் காட்டுவனவாக அமைகின்றன.

## 2. கல்வி

தமிழரின் கல்வி வரலாறு ஆழமானது; அகலமானது; இதன் தோற்றம் தொன்மையானது. இவர்தம் அறிவுத் தேடல் பல துறை சார்ந்தது. இத் தேடல்களில் அவர்களுக்குக் கிடைத்த பயனும் மிகுதி. பல்வேறு பதிவுகளாக, இவை பரந்தும் ஆழ்ந்தும் கிடப்பதை வரலாற்று மூலங்கள் காட்டுகின்றன. எனினும் தொன்று தொட்டுத் தமிழர் பதிவு செய்து வைத்த இக்கல்வி அறிவு முழுவதையும் நாம் அறிந்து விடவில்லை. ஒவ்வொரு துறை சார்ந்த அறிவையும் தொன்று தொட்டு இன்றுவரை தொகுத்து ஆராயும்போது இவர்களின் பலதுறை சார்ந்த அறிவின் ஆழமும் அகலமும் வியப்புக்குரியதாக அமையும். தவிர, காலச் சூழலுக்கு ஏற்ப, குறிப்பிட்ட துறை சார்ந்த கல்வி குறிப்பிட்ட காலத்தில் தனிச்சிறப்பும் செல்வாக்கும் பெற்றுத் திகழ்ந்ததையும் இவர்தம் வரலாறு நமக்குப் புலப்படுத்தும். எனவே இது தனித்ததொரு

ஆய்வாக அமையும் போதே தமிழரின் கல்வி அறிவின் முழுமை தெரியவரும். இந்நிலையில், அன்று காஞ்சியில் வாழ்ந்த மக்களின் கல்வியின் தொன்மை, தன்மை, சிறப்பு போன்றவற்றை இந்தப் பகுதியில் காணலாம்.

டாக்டர் மீனாட்சி பல்லவர்க்கு முன்னரேயே காஞ்சி உயர்தர கல்வி நிறுவனமாக இருந்து வந்துள்ளது என்பதற்கு, பதஞ்சலி முனிவரையும், அறவண அடிகளையும் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.[10] ஆயின் காஞ்சியின் கல்வி இவர்களுக்கும் முன்னரேயே தொன்மையுடைய ஒன்று.

தமிழரின் வரலாற்றில் நமக்கு முதன் முதலில் அறிமுகமாகும் தொல்காப்பியரின் காலத்திற்கு முன்னரேயே கல்வியிற் ஆர்வம் கொண்டவர்களாகத் தமிழர் திகழ்ந்தனர் என்பதற்குத் தொல்காப்பியமே சான்று. இந்த வரலாற்றிலேயே காஞ்சியின் வரலாறும் அடங்குகிறது. தவிர மேலும் பல இலக்கியச் சான்றுகளும் தொல்லியற் சான்றுகளும் இதற்கு அரணாவன.

தமிழகத்தின் பல பகுதிகளிலும், தோன்றிய புலவர் பெருமக்களைப் போன்று, காஞ்சியில் காணப்பட்ட புலவர்களும் பலர். இவர்கள் இயற்றிய பாடல்களும் பல. தெரியவருபவர்களாக,

> கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றனார்
> கச்சிப் பேட்டு இளந்தச்சனார்
> கச்சிப்பேட்டுப் பெருந்தச்சனார்
> கச்சிப்பேட்டு நன்னாகையார்
> தொண்டைமான் இளந்திரையன்

போன்றோர் அமைகின்றனர். இவர்கள் பாடிய பாடல்களின் பொருண்மையும், வடிவமும் பிற தமிழகப் புலவர்களின்

---

10. It is presumable that Kanchipuram was a seat of higher learning even earlier than the period of its association with the pallava kings. Patañjali discusses the derivation of the term Kanchipuraka possibly because it was famous even during his time (second century A.D.) for its Sanskrit learning. According to one of the Sangam classics Aravana Adigal taught Buddhist philosophy at this place -Administration and Social life under the Pallavas, P.223.

பாடல்களை ஒத்தே காணப்படும் தன்மை அன்று புலவர்களுக்குள்ளே இருந்த புலமைத் தொடர்பையும் கருத்துத் தொடர்பையும் காட்டுவன. எனவே தமிழகம் இன்று போன்று தகவல் தொடர்பு சாதனங்களால் நெருக்கமாக அன்று இருந்திருக்கவில்லை எனினும் கல்வி காரணமாகவும், அறிவுத் தேடல் காரணமாகவும், புலமைத் தொடர்பு காரணமாகவும் இப்புலவர் பெருமக்களுக்குள் இருந்த தொடர்பை இங்கு நம்மால் உணர்ந்து கொள்ளல் இயலுகிறது.

இயற்கைச் சார்பு காலமாகத் திகழ்ந்த அக்காலத்திய புலவர்கள் அன்றைய தமிழர் தங்கள் வாழ்வில் மிக முக்கியமானதாகக் கருதிய காதலையும் வீரத்தையும் பாடியதோடு, பிற உலகியல் தத்துவம் சமயம் சார்ந்த செய்திகளையும் பாடியுள்ளனர்.

தொண்டைமான் இளந்திரையன் என்ற அரசன் பாடிய பாடல் வேந்தன் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை யுணர்த்தும் பாடல்.

**கால் பார் கோத்து ஞாலத் தியக்கும்**
**காவற் சாகாடு கைப்போன் மாணின்**
**ஊறின்றாகி யாறினிது படுமே**
**உய்த்த றேற்றானாயின் வைகலும்**
**பகைக்கூழ ள்ளற் பட்டு**
**மிகப் பஃறீ நோய் தலைத் தலைத்தருமே —புறம். 185**

எனவே கல்வி என்பது உலகில் வாழ்வாங்கு வாழ, வழிகாட்ட வல்லதாகத் திகழ வேண்டும் என்பதையுணர்ந்து தம் பாடல்களை யாத்து உலகிற்கு அளித்த புலவர்களாக இவர்களைக் காண இவர்களது பரந்துபட்ட அறிவும், தெளிவும், சமுதாய ஈடுபாடும் தெரிய வருகின்றன. பண்பட்ட இவர்களது அறிவின் ஆழத்திற்கு இவர்களது கல்வி அறிவையும் ஒரு காரணமெனல் பொருத்தமானதாகும். இவ்வாறு சங்கப் பாக்கள் மூலமன்றி, தொல்லியல் சான்றுகள் சிலவும் அன்றைய காஞ்சியின் தொன்மைமிக்க கல்விச் சிறப்பையுறுதிப்படுத்துவதற்கு ஏதுவாக அமைகின்றன. ''இங்குத் தமிழ் எழுத்துப் பொறித்த பானைஓடுகளும், எலும்பாலான எழுத்தாணியும் கிடைத்துள்ளன" என்ற செய்தியும், "தமிழ் எழுத்துப் பொறித்த

பானை ஓடுகள் கிடைத்த ஆய்வு மையங்களில் காஞ்சியும் ஒன்றாகும்" என்ற செய்தியும் தெரியவருகின்றன.[11]

கல்வியின் சிறப்பு காரணமாகக் காஞ்சி ஓங்கியிருந்தமை தமிழகத்தில் மட்டுமல்ல, பிறபகுதிகளிலும் பரவியிருந்தது என்பதற்கு அரணாக அமைவதே 'நகரேக்ஷு"காஞ்சி' என்ற வடமொழிப் புலவரின் கூற்று. "பதஞ்சலி மாபாடியம் காஞ்சியில் செய்யப்பட்டதாக கருத இடமுண்டு" என்ற செய்தி[12] காஞ்சியில் தமிழ்க் கல்வி மட்டுமல்லாது வடமொழிக் கல்வியும் சிறந்திருந்திருக்கிறது என்பதற்கு ஒரு சான்று. "யுவான்சுவாங் வடநாட்டுப் பல்கலைக் கழகங்களுடன், காஞ்சியைப்பற்றியும் அங்குள்ளக் கல்விக் கழகம் நூலகம் பற்றியும் ஓரிரு வரிகளில் சுருக்கமாகக் கூறியுள்ளான்" போன்றன,[13] அவர்காலத்திற்கு முன்னரேயே காஞ்சியில் காணப்பட்ட கல்விச் சிறப்பினை உறுதிப்படுத்துவதற்குரிய சான்றுகள். தவிர, டாக்டர் மீனாட்சி, மயூரவர்மன் இங்குக் கல்வி கற்க வந்த செய்தியை விளக்கும் நிலையில்,[14] பிறமொழிக் கல்வியும் இங்கு அளிக்கப்பட்டுள்ளது தெளிவுபெறுகிறது. மேலும் தமிழ்நாட்டு மக்கள் தவிர, பிற பகுதியினரும் இங்குக் கல்வி கற்க வந்தமையும் இதில் தெளிவுபடுகிறது.

மேற்கண்ட வரலாறுகளினின்றும் இங்குத் தமிழ்க் கல்வி சிறந்து விளங்கியது தெரிகிறது; வடமொழிக் கல்வி செழிப்பு பெற்றிருந்ததும் தெரிகிறது. மேலும் மதக்கல்வியின் சிறப்பைப் பௌத்த மதம் தொடர்பான சிந்தனைகளும் பௌத்தப் பெரியார்

---

11. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 114.

12. காஞ்சிபுரம் மலர், ப. 105 ; செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 49.

13. கல்விக்கு மிகுந்த மரியாதையும் அறிஞருக்குச் சிறந்த வணக்கமும் தெரிவிப்பவர்கள். கல்வித்துறையில் மேன்மையாய் விளங்கிப் பேராதரவு காட்டுபவர்கள்-யுவான் சுவாங், ப. 176.

14. The earliest inscriptional reference to the ghatika of Kanchipuram is made in the Talagunda pillar inscription of Kakusthavarman, the Kadamba king. Scholars have fixed its date variously as the fifth century and the sixth century A.D. On the strength of

வரலாறுகளும் தெளிவுபடுத்துகின்றன. இதனை மணிமேகலை கருத்துடன் யுவான் சுவாங் கருத்தும்[15] தெளிவுபடுத்துகிறது.

காஞ்சியில் பௌத்த சமயக் கல்வி மிகவும் சிறப்புடன் திகழ்ந்தது என்பது மணிமேகலையில் விளக்கம் பெறுகிறது. இங்குப் பௌத்த சமயம் மிகவும் எழுச்சியுடன் திகழ்ந்ததையும், அதன் மூலம் சமயம், தத்துவம் சார்ந்த கல்வி ஓங்கி நின்றதையும் இங்குள்ள கல்வியாளர் தமிழகத்தில் மட்டுமன்றி, இந்தியாவில் மட்டுமன்றி, பிறநாட்டிலும் புகழுடன் திகழ்ந்தனர் என்பதையும் அறிஞர் கருத்துகள் எடுத்தியம்புகின்றன. வைணவம், சைவம் போன்ற சமயங்கள் இங்குச் சிறப்புடன் திகழ்ந்தது எனினும், இவை சார்ந்த கல்விக் கூடங்கள் குறித்த தெளிவுகள் மிகுதியாகக் கிடைக்கவில்லை. ஆயின் பௌத்த சமயம் சார்ந்த கல்விக் கூடங்கள் மிகுதியாக இருந்தன என்பது பௌத்தப் பெரியோர் பற்றிய செய்திகளினின்றும் உணருதல் கூடுகிறது. பக்தி எழுச்சியும், சமய எழுச்சியும் பல சமயம் சார்ந்த கல்விகளுக்கும் அடிப்படையாக இருந்த போதிலும், காஞ்சியில், பௌத்த சமயம் சார்ந்த கல்வியின் சிறப்பு வெளிப்படையாகத் தெரிகிறது. மணிமேகலையைச் சாத்தனார் பௌத்த மதக் கல்விக்குரிய ஒரு நூலாகவே படைத்துள்ளார் என்பது அறிஞர் ஏற்றுக் கொண்ட உண்மை.

சமயக் கணக்கர் தம் திறம் கேட்டகாதையில் வஞ்சியில் காணப்பட்ட பல சமயவாதிகளிடமும், மணிமேகலை அவர்களின்

---

of Chandravalli inscription Moreas gives the date period as 345-370 A.D. for Mayurasarman. The ghatika of Kanchipuram to which Mayurasarman sought admission must have been in existence for many years before the middle of the fourth century before it attained the necessary importance for pupils outside of Pallava kingdom to seek admission to it for higher learning. Mayurasarman who travelled to the Kanchipuram ghatika along with his preceptor virasarman must have belonged to the Deccan- Administration and Social life under the Pallavas, p.224.

15. அங்கு நூற்றுக்கு மேற்பட்ட பௌத்த மடாலயங்கள் உள்ளன. பதினாயிரத்துக்கும் மேலான பௌத்த பிக்ஷுக்கள் அம்மடாலயங்களில் உள்ளார்கள்-தேவர் கோயில்கள் 80க்கும் மிகுதியாக உள்ளன- யுவான் சுவாங், ப. 175.

சமயங்கள் ஒவ்வொன்றையும் தெளிவாகக் கேட்டனள் என்ற கருத்தையுரைக்கும் நிலையில்[16] பலசமய வல்லுநரும் அவர்களது சமயம் சார்ந்த கல்வியைப் பயின்றிருந்ததையும் பிறருக்கு எடுத்துச் சொல்லி வந்ததையும் தெளிவாக உணர்ந்து கொள்ள முடிகிறது. தாம் சார்ந்த சமயங்களுடன் பிறசமயம் பற்றியும் பயின்றிருந்தனர் என்பதற்கும் மணிமேகலையே சான்று. எனினும் சில இடங்களில் சில சமயம் எழுச்சி பெற்ற நிலையில், பிற சமயக் கல்வி மதிப்பிழந்திருந்திருக்கலாம் அல்லது இல்லாது இருந்திருக்கலாம் என்ற எண்ணமும் இங்குத் தோன்றுகிறது. இந்நிலையிலேயே காஞ்சியிலும் பிறசமயக் கல்வி பற்றிய சிந்தனைகள் இக்காலகட்டத்தில் இல்லாமை தெரிகிறது.

மயிலை சீனி வேங்கடசாமி தம் 'பௌத்தமும் தமிழும்' நூலில் 'தமிழ் நாட்டுப் பௌத்தப் பெரியோர்' என இக்காலப் பகுதியில் குறிப்பிடும் பலரும் காஞ்சியைச் சார்ந்தோராக அல்லது காஞ்சியுடன் தொடர்புடையவராக இருத்தல் இங்கு எண்ணத் தக்கது. அறவண அடிகள், மணிமேகலை, புத்த தத்த தேரர், போதிதருமர், தின்னாகர், தருமபால ஆசாரியார், ஆசாரியர் தர்மபாலர் போன்றபலர். இவர்களின் வரலாற்றை இவர் சொல்லிச் செல்லும் தன்மையில் உலகில் பௌத்த மதம் பரவ இவர்கள் காரணமாக இருந்ததையும் அறிகிறோம்.[17] சிறந்த கல்வியாளர்களாக இவர்கள் திகழ்ந்தமையினையும் இங்குக் குறிப்பிடவேண்டும். மேலும், "ஹீனயான பௌத்தத் தத்துவ நூல்களை எழுதிச் சீனாவிலும் திபெத்திலும் ஐப்பானிலும் இன்றும் பாராட்டப்படும் தின்னாகர் காஞ்சியில் கல்விகற்றார். குப்த பேரரசர்களால் நிறுவப்பெற்ற நாலந்தாப் பல்கலைக் கழகத் தலைவராகவும் பேராசிரியராகவும் இருந்த தர்மபாலர் காஞ்சிபுரத்தினர் என்று வரலாறு கூறுகிறது. சீனாவில் இருந்த பௌத்த மடங்கள் அனைத்துக்கும் தலைவராக விளங்கிய போதிதர்மர் காஞ்சியின் இளவரசராக இருந்து கி.பி. 520இல் இங்கிருந்து சீனாவுக்குச் சென்றார். சீனாவிலும் ஐப்பானிலும் பரவியுள்ள தியான பௌத்தம் அல்லது ஜென் பௌத்தம் என்ற பௌத்த மதப்பிரிவைத் தோற்றுவித்தவரும் இவரே. கொரியாவில் பௌத்தம் பரவியதும் இவரால் தான் என்று தெரிகிறது" என்பார் சோமலெ.[18]

---

16. மணிமேகலை, சமயக் கணக்கர் தம் திறம் கேட்டகாதை.
17. பௌத்தமும் தமிழும், பக்.55-79. 18. காஞ்சிபுரம் மலர், ப. 106.

காஞ்சியின் கல்விச் சிறப்பு பற்றிய சோ.ந கந்தசாமியின் கருத்துகள் காஞ்சியின் கல்விச் சிறப்பைச் சிறப்பாக எடுத்தோதுவன. "பல்லவர் ஆட்சியில் காஞ்சி மாநகர் பல புதிய சிறப்புகளைப் படைத்தது. வைதிக தரிசனங்களுடன் அவைதிக தத்துவங்களாகிய பௌத்தம் சமணம் முதலிய நெறிகளும் சைவம் வைணவம் ஆகிய பக்தி மார்க்கங்களும் தழைத்துச் செழித்து ஓங்குவதற்குரிய உயர் ஆய்வியல் நிலையமாக (Centre for the Advanced Studies in Religion and Philosophy) ஒளி வீசியது. கலைச் சிறப்பு மிக்க கற்கோயில்கள் பல இந்நகரில் எழுந்தன. சமய தத்துவ மேதைகளின் சிந்தனை மேடையாகக் காஞ்சி திகழ்ந்தது. இந்நகரினை நோக்கி உலகின் பல பாகங்களிலிருந்தும் முது மாணவர்கள் உயர் கல்வி பெறுவதற்கு வந்தனர். பௌத்த தருக்கத்திலும் தத்துவத்திலும் பல புதிய நெறிகளைக் கண்ட திக்க நாகரும் அவர் மாணவர் தருமகீர்த்தியும் காஞ்சியம்பதியைச் சார்ந்தவர்களே என்பது குறிப்பிடத்தக்கது. திக்க நாகரின் பிரமாண சமுச்சயம், நியாயமுகம், ஏது சக்கரஹமரு, ஆலம்பன பரீட்சை முதலியனவும் தருமகீர்த்தியின் நியாய பிந்தும் ஒப்பற்ற தருக்க நூல்களாகும். இவ்விருவரும் சௌத்திராந்திக யோகாசாரப் பௌத்தத்தின் தூண்களாவர். சாத்தனார் இந்நெறியைத் தான் மணிமேகலையில் பிழிந்து கொடுத்துள்ளார். தேரவாத பௌத்தத்தினைச் சேர்ந்த தம்மபாலர் என்பவரும் யோகாசார பௌத்தராகிய தம்மபாலரும் காஞ்சித் தமிழர்கள் ஆவர். இவருள் முன்னவர் பிடக உரையாசிரியர் என்பதை முன்னரே சுட்டினோம். பின்னவர் தான் வடக்கேயுள்ள நாலந்தாப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தராக விளங்கியவர் ஆவார். இவர்களைப் பற்றி யுவான் சுவாங்கின் பயணக் குறிப்பும் பாலி இலக்கிய வரலாறும் பாரித்துப் பேசுகின்றன. . . அறவணர் நெடுங்காலம் காஞ்சியில் வாழ்ந்தவர். பௌத்த தருக்க தத்துவங்களில் முற்றிய மாமேதை. மணிமேகலைக்கு இவ்விரு துறைகளையும் குறைவறக் கூறியவர். இவர் வாழ்ந்த காஞ்சிப் பகுதியை நினைவுறுத்தும் பாங்கில் அறப்பணஞ்சேரி என்னும் வீதியுள்ளது. பாலிமொழியின் தொல்காப்பியர் எனப் போற்றப் பெறும் கச்சாயனர் கச்சியில் வாழ்ந்தவர் என்பது பௌத்தவியலாரின் துணிபாகும். மகாயான பௌத்தத்தினைச் சீனம் சப்பான் ஆகிய நாடுகளிலும் பரவச் செய்த போதிதருமர் என்பார் காஞ்சிப் பல்லவ வேந்தரின் இளவல் என்று அறிஞர்கள் ஆராய்ந்துணர்த்தியுள்ளனர். காஞ்சியில் வாழ்ந்த இப்பௌத்தப் பேரறிஞர்கள் தமிழராக இருந்தும் பாலி,

வடமொழி ஆகிய இந்திய மொழிகளில் தான் தம் சிந்தனைகளை முழுமையாக வெளிப்படுத்தினர். அதனால்தான் இவர்கள் பெருமை தமிழகத்தின் அளவில் நில்லாது இமயம் முதல் இலங்கை வரையும் பரவியது. அன்றியும் இவர்கள் எழுதிய நூல்களைத் திபெத்து, சீனம், சப்பானியம், சிங்களம் முதலிய அயல் மொழிகளிலும் அக்காலத்து அயல்நாட்டு அறிஞர்கள் மொழி பெயர்த்துக் கொண்டுள்ளனர். சப்பானிய எழுத்து முறையினைச் செப்பம் செய்வித்தவர் கூட தமிழகத்துப் பௌத்த பெரியார் தான் என்று கூறப்படுகிறது. . . சாங்கிய காரிகைக்குப் புத்துரை கண்ட பௌத்த பிட்சு பரமார்த்தரும் காஞ்சியில் வாழ்ந்த பௌத்தரே ஆவார். இவரைப் பின்பற்றியே சாத்தனார் சாங்கியக் கொள்கைகளைக் கூறியுள்ளார். யுவான்சுவாங் இந் நகரின் விகாரையில் தங்கிப் பல நூல்களைப் பயின்றுள்ளார்" என, எழுதிச் செல்லும் செய்திகள்,[19] பல்லவர் காலத்துக் கல்விச் சிறப்பு எனப்பொதுவாக அமைந்து, கி.பி. 6-க்கு முன்னைய முதல், இடைக் காலப் பல்லவர் ஆட்சியிலேயே இச்சிறப்பு தொடங்கிவிட்டது என்பதையும் புலப்படுத்துகிறது. மேலும் இங்கு, இந்த அறிஞர் சப்பானிய எழுத்து முறையைச் செப்பம் செய்தவர் தமிழகத்தின் பௌத்தப் பெரியார் தான் என்று கூறும் கூற்று இன்று சப்பானின் எழுத்து முறையொன்றைக் குறிப்பிட, 'காஞ்சி' என்ற சொல்லைப்பயன் படுத்தும் முறையுடன்[20] ஒப்பிட்டு நோக்கத்தக்கது. இந்தப் பெயர் ஒற்றுமைக்குரிய காரணம் காஞ்சியினின்றும் சென்ற பௌத்தப் பெரியாராக இருந்திருக்கலாமா என்ற கோணத்தில் இங்குச் சிந்திக்க வாய்ப்புண்டு. தவிர, பிற்காலத்துச் சான்றுகளும் காஞ்சியின் பண்டைய கல்விச் சிறப்பு சுட்டும் நிலையில் அமைவதை இங்கு எண்ணலாம்.

அப்பர் காஞ்சியின் கல்வி வளத்தைத் தன் பாடலில் சுட்டிச் செல்கின்றார்.

**செவ்வியைப் பாகம் கொண்டார் சேந்தனை மகனாக்**
**கொண்டார்**
**மல்லிகை கண்ணியொடு மாமலர் கொன்றை சூடிக்**

---

19. மேலது, பக். 70,71.

20. The Kanji SITE - A guide for students of Japanese Kanji.

**கல்வியைக் கரையிலாத காஞ்சி மாநகர் தன் உள்ளால்**
**எல்லியை விளங்க நின்றார் இலங்கு மேற்றளியனாரே**
**-4-431**

தமிழகம் முழுவதும் வளங்கள் ஏறக்குறைய ஒன்று போலவே தான் இருந்தன. எனினும் சில வளங்கள் சில பகுதிகளில் மிகுதியாக இருந்ததைக் குறிப்பிடும் பாடலொன்று உண்டு. அப்பாடல் தொண்டை நாட்டைக் குறிப்பிடும் போது அங்குச் சான்றோர் வளத்தைக் காட்டுகிறது. இங்கு நோக்கத்தக்கதொரு ஒளவையாரின் பாடல் இது.

**வேழம் உடைத்து மலைநாடு; மேதக்க**
**சோழ வளநாடு சோறுடைத்து - பூழியர் கோன்**
**தென்னாடு முத்துடைத்து; தெண்ணீர் வயற்**
**தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து**

மாடு கட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று ஆனை கட்டிப் போரடிக்கும் அழகான தென் மதுரை என்று மதுரையின் நெல் வளம் காட்டினாலும், சோழ வளநாட்டின் சோற்றுவளம் தான் இப்பாட்டில் சிறப்புப் பெறுகிறது. இது போன்று தமிழகம் முழுவதும் சான்றோர்கள் இருந்த போதிலும், தொண்டை நாடு குறிப்பிட்டுச் சொல்லப்படக் காரணம் இங்குக்காணப்பட்ட சான்றோர் பெருமக்களே. இதற்குக் காரணம் இவர்கள் சிறந்த கல்வியாளர்களாகவும் திகழ்ந்தமை தான் எனவும் குறிப்பிடலாம். இந்தப் பெருமையைத் தொண்டை நாட்டுக்கு அளித்தது காஞ்சி என்றால் அது மிகையாகாது.

### 3. சமயம்

காஞ்சியின் பகுதிகள் சிவக் காஞ்சி, விஷ்ணு காஞ்சி, ஜினக் காஞ்சி, பௌத்தக் காஞ்சி என அழைக்கப்பட்டதாகத் தெரியவரும் நிலை காஞ்சிக்கும் சமயங்களுக்கும் உள்ள தொடர்பைக் காட்டும். பெயர்கள் மட்டுமன்றி, இச்சமயங்கள் காஞ்சியில் காணப்பட்டன என்பதையும் அவை செல்வாக்குடன் திகழ்ந்தன என்பதையும் நிலை நிறுத்தும் வரலாற்று ஆதாரங்கள் மேலும் பலவும் உள. இந்த வரலாற்றில் எல்லாச் சமயங்களையும் காஞ்சி ஈர்த்த தன்மை தெரிகிறது. எல்லாச் சமயங்களும் தொடக்கக் காலந் தொட்டே இங்குக் காணப்பட்டனவா? எவை யெவை எந்தெந்தக் காலத்திற் சிறந்திருந்தன? சமயத்தால் காஞ்சியும் காஞ்சியின் சிறப்பால் சமயங்களும் எவ்வாறு

வளர்ந்தன? ஒன்றின் வளர்ச்சிக்கு மற்றொன்று எவ்வாறு 1துணையாக அமைந்தன போன்ற பல கேள்விகளுக்கு இங்கு இடமுண்டு; விடையுமுண்டு. எனினும் இக்கேள்விகளுக்கு எல்லாம் முழுமையான விடை, இந்த ஆய்வுப் பகுதியில் காணக் கிடைக்காவிடினும் சில செய்திகள் கிடைக்கின்றன. அக்காலத்தில் காஞ்சியில் காணப்பட்ட சமயங்கள், செல்வாக்கு பெற்றிருந்த சமயங்கள், இவற்றால் காஞ்சி அடைந்த சிறப்பு போன்றன தொடர்பான விளக்கங்கள் இச்செய்திகள் மூலம் கிடைக்கின்றன.

பல்லவர்க்கு முன் காஞ்சியின் சமயவரலாறும் தமிழகத்தின் அன்றைய சமய வரலாற்றின் பிரதிபலிப்பு தான். தமிழகத்தின் அன்றைய சமய வரலாற்றை ஆராய்ந்த அறிஞர் பெருமக்கள் இயற்கை நெறிக் காலமாகத் திகழ்ந்த சங்க காலத்தில் வாழ்ந்து வந்த மக்களிடமும் பல சமயச் சிந்தனைகள் காணப்பட்டதையும் பின்னர் இச்சிந்தனைகளில் ஏற்பட்ட மாற்றங்கள், செல்வாக்குகள் இலக்கியங்களில் தொடர்ந்து பிரதிபலிக்கத் தொடங்கியதையும் தெளிவாக விளக்கிச் சென்றுள்ளனர்.

"தமிழ் நாட்டில் இயற்கை நெறிக் காலம் நிலவியபோது வட இந்தியாவில் சமய நெறிக் காலமே நிலவியது. தமிழ் இலக்கியத்தில் இயற்கை நெறி போற்றப்பட்டபோது வட இந்திய இலக்கியத்திற் சமயமே முக்கியத்துவம் பெற்றிருந்தது. சங்க காலத் தமிழகத்தில் ஐவகை நிலங்களுக்கும் வெவ்வேறு தெய்வங்களும் வெவ்வேறு வழிபாட்டு முறைகளும் வழக்கிலிருந்தன. இலக்கியம் வாழ்க்கையைச் சித்திரிப்பது என்பதை ஏற்றுச் சங்க கால இலக்கியத்தை ஆராய்ந்தால் அக்காலத்திய மக்கள் வாழ்க்கையிற் சமயம் முக்கிய இடம் பெறவில்லை என்பது பெறப்படும். தெய்வமும் தெய்வ வழிபாட்டு முறையும் இல்லாத மக்கள் இனம் இல்லை. தமிழரிடையேயும் இவை இருந்தன. ஆனால் வைதிகம் சமணம் பௌத்தம் என்ற வட இந்திய சமயங்கள் தமிழ் நாட்டிற்கு வருமுன்பு தமிழ் மக்கள் வாழ்க்கை ஆன்மிக ஈடேற்றத்தை நோக்கமாகக் கொண்டிருந்தது என்று கருத அக்கால இலக்கியச் சான்றுகள் இடந்தரவில்லை. இயற்கையான வாழ்க்கையில் ஈடுபாடு மிகுந்தவர்களாக விளங்கிய அக்காலத் தமிழர் மக்களுக்குரிய இயல்பான தன்மைகளையே போற்றினர்

மக்கள் புறநானூற்றுக் கால வாழ்க்கை முறையிலே திருப்தி அடைந்திருந்தால் புதுமையை ஏற்றிருக்க மாட்டார்கள். தம்முடையவும் தம்முன்னோருடையவும் வாழ்க்கை முறையிலே

அதிருப்தி ஏற்பட்டிருக்கா விட்டால் புறநானூறு தோன்றிய தமிழ் நாட்டிலே திருக்குறள் தோன்றியிருக்க முடியாது. அரசாள்வோரில் ஏற்பட்ட மாற்றம் மட்டும் மக்கள் வாழ்க்கையை அதுவும் நிறுவனங்கள் முதலியன வளர்ச்சியடையாத பூர்வீகச் சமுதாயத்தில் பெருமாற்றமுறச் செய்திருக்க முடியாது. சங்ககால வாழ்க்கை முறையிற் காணப்பட்ட குறைபாடுகளால் மனம் நொந்த மக்களுக்கு வேறு வாழ்க்கைமுறை தேவைப்பட்டது. பொறியாலும் புலனாலும் கவர்ச்சியுற்று, காதல் வாழ்க்கை வீர வாழ்க்கைகளில் ஊக்கம் மேலிட்டு நின்று வாழ்ந்து அவ்வாழ்க்கையில் துன்பத்தைக் கண்ட மக்கள் கட்டுப்பாடுகள் நிறைந்த வாழ்க்கையையும் ஒழுக்கத்தையும் அவாவினர். வைதிக சமயத்தவரைச் சமண பௌத்தரோடு ஒப்பிடும் போது வைதிக சமயத்தவர் மனஅமைதியோடு வாழ்வதற்குரிய ஒழுக்கத்துக்கு அடிப்படையான பொதுவகையறங்களைப் பெரும்பான்மை யளவில் விதந்தெடுத்து வற்புறுத்தாததாலும் பிராமணரின் நன்மையையே ஏற்றமான அளவிலே கருத்திற் கொண்டிருந்ததாலும் சங்க மருவிய காலத் தமிழ் மக்களிடையே அதிக அளவில் செல்வாக்குப் பெறமுடிய வில்லை" என அன்றைய காலகட்டத்தை நம்முன் காட்சிப்படுத்துகிறார் ஆ.வேலுப்பிள்ளை.[21]

ப. அருணாசலம் தன்னுடைய 'பக்தி இலக்கியம்' நூலில், "சமய உணர்வின் அடிப்படையில் பல பாடல்கள் தோன்றாது போயினும் சங்க இலக்கியத்தைப் பயின்றால் அந்நாளைய தமிழர்கள் வாழ்க்கை சமயவுணர்வோடு கலந்திருந்தது என்பது நன்கு புலப்படும். "சமயம், மதம்" என்னும் சொற்கள் சங்க இலக்கியத்தில் காணாது போயினும் இந்நாளில் இந்து சமயம் எனக் கூறப்படும் வேத நெறியும் அவ்வேத நெறிக்கும் புறம்பான சைன பௌத்த நெறிகளும் அந்நாளில் நிலவி வந்தன என்பதில் ஐயமில்லை. . . அகம் புறம் பாகுபாட்டில் நின்று பாடவிழைந்த புலவர்களும் அந்நாளையச் சமயச் சிந்தனைகளைத் தம் அக, புறப் பாடல்களில் கலந்து பாடியுள்ளனர். வேதம் ஓதுதல், வேள்விகள் செய்தல், இவற்றைச் செய்து வரும் பார்ப்பனர்களைப் பாராட்டுதல், பார்ப்பனர்களுக்குத் தானம் வழங்குதல், வைதிக அறங்களில் ஈடுபாடு, புராண இதிகாச நிகழ்ச்சிகள், வேதநெறியைப் பாராட்டுதல், வழிபடு தெய்வங்களைப் பற்றிய குறிப்புகள்

---

21. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக். 7,8, 26,27.

முதலியன சங்கப் பாடல்களில் காணப்படும் வைதிக நெறிபற்றிய செய்திகள் எனலாம். சைன, பௌத்தர் உறைவிடங்கள் பற்றிய குறிப்புகளும் ஊழ், துறவு, மறுபிறப்பு பற்றிய சிந்தனைகளும் சைன, பௌத்த நெறிகளும் அந்நாளிலிருந்தன என்பதற்குச் சான்று பகரும்... பல்வேறு சமயக் கோட்பாடுகள் தமிழகத்தில் நிலவி வந்தன ஆயினும் இலக்கியப் படைப்பைப் பொறுத்த அளவில் சங்க காலப் புலவர்கள் காதல் வீரம் பற்றிப் பாடுவதே சிறப்பு என்று கருதினர்... வடமொழியோடு தொடர்பு கொண்ட போதும் இக்கவிதைக் கரு தமிழுக்குச் சிறப்பாக இருப்பதைக் கருதிப் பெருமைப்படவும் செய்தனர். வைதிக நெறியை ஏற்றிருந்தோரும் இலக்கியத்தின் இச்சிறப்பினைப் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. இந்நாளில் சைன பௌத்த நெறியினரும் இவ்விலக்கிய நெறி நின்று பாடியுள்ளனர். இருப்பினும் சைன பௌத்தக் கோட்பாடுகளோடு ஏற்பட்ட பிணைப்பு, அந்நெறிகளிலே கொண்ட ஈடுபாடு காலப்போக்கில் இவ்விலக்கியக் கட்டை மீறப் புலவர்களை உந்தின எனல் வேண்டும்" என அக்கால நிலையைச் சொல்லத் தொடங்கி அக்காலத்திலேயே அம்மக்களிடம் சமய உணர்வு காணப்பட்ட வரலாற்றைச் சொல்லுகின்றார் இவர்.[22]

இத்தகையப் பொதுவான, தமிழகம் முழுமையும் காணப்பட்ட சமய உணர்வுகளும், செல்வாக்குமே காஞ்சியிலும் காணப்பட்டிருக்க வேண்டும் என்பதை உணரக் கூடுகின்ற நிலையில், காஞ்சியில் காணப்பட்ட சமயங்கள் குறித்துத் தெரிய வரும் செய்திகள் தமிழகத்தின் இச்சூழலை உறுதிச் செய்யும் சான்றுகளாக அமைகின்றன எனக் கொள்ளலும் பொருத்தமானதாக அமையும். எனவே தமிழரின் தனித்த வழிபாட்டுச் சிந்தனைகளுடன் அன்று சைவம் வைணவம் சமணம் புத்தம் சார்ந்த சிந்தனைகளும் காணப்பட்ட நிலையினைச் சங்கச் சமுதாயம் காட்டிநின்றாலும் எல்லா மதங்களும் எல்லாவிடத்திலும், எல்லாக்காலங்களிலும் சிறப்புற்றோ, செல்வாக்கு பெற்றோ காணப்பட்டதாகத் தெரியவில்லை. இதனைப் போன்றே சில சமயங்கள் காஞ்சியில் மிகச் செல்வாக்குப்பெற்றுக் காணப்பட்டதைக் காஞ்சியின் அன்றைய வரலாறு தெளிவுபடுத்துகிறது.

---

22. பக்தி இலக்கியம், பக். 8,9,13,16,18.

காஞ்சியின் இந்த ஆய்வுக் காலப்பகுதியில், இந்த நான்கு சமயங்களும் இருந்தமைக்கான எண்ணங்கள் புலப்படுகின்றன. இவற்றுள்ளும் புத்த மதத்தின் செல்வாக்கு மிக ஓங்கிச் செழித்த நிலையினை மணிமேகலைத் திறம்பட எடுத்தியம்புகிறது. வைணவம் காணப்பட்டமை பள்ளியமர்ந்தோன் கோயில் இருந்த தன்மையில் தெரிகிறது. பிற்கால இலக்கியச் சான்றுகள் சைவம் இருந்தமையினை உணரச் செய்கின்றன. சமணம் பற்றிய சிந்தனைகளும் உண்டு.

கச்சியை வருணிக்கும் உருத்திரங் கண்ணனார்,

**இழுமென் புள்ளினீண்டு கிளைத் தொழுதிக்**
**கொழு மென்சினைய கோளியுள்ளும்**
**பழமீக் கூறும் பலாஅப் போலப்**
**புலவுக் கடலுடுத்த வானம் சூடிய**
**மலர்தலை யுலகத்துள்ளும் பலர் தொழ**
**விழவு மேம்பட்ட பழவிறன் மூதூர்** –பெரும். 406–411

என இதன் சிறப்பு காட்டுகிறார். இதற்கு, உரையாசிரியர் நச்சினார்க்கினியர், "பல சமயத்தாரும் தொழும்படி எடுத்த விழாக்களாலே ஏனை நகர்களின் மேலான வெற்றியினையுடைய பழைய ஊர்" என எழுதுகின்றார் (ப. 251).

எனவே சங்க காலத்திலேயே கச்சி, பல சமயத்தாரும் நிறைந்து காணப்பட்ட ஓர் ஊராக, விழாக்கள் எடுக்கும் வண்ணம் மேன்மைபெற்ற ஓர் ஊராகக் திகழ்ந்துள்ளது என்பது தெளிவுபடுகிறது. புலவரின் 'விழவுமேம் பட்டபழவிறன் மூதூர்' என்ற வரியினை இலக்கணமாகக் கொண்டால் இலக்கியமாகவே கச்சி குறித்த சமயச் செய்திகள் அமைகின்றன எனக் கூறலாம்.

### 3. 1. வைணவம்

பெரும்பாணாற்றுப்படையில்,

. . . . . . . . . . . . . . . நீடுகுழைக்
**காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்குப்**
**பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்** – பெரும். 371–73

என, பாம்பணையில் பள்ளி கொண்டோனாகிய திருமாலைக் காட்டும் தன்மையிலே வைணவம் கச்சியில் போற்றப்பட்டது என்பதையுணர்த்தி விடுகிறார் கடியலூர் உருத்திரங் கண்ணனார்.

பாம்பணைப்பள்ளியில் அமர்ந்தோனை வழிபட்டு, பின் கச்சிக்குள் செல்லுங்கள் என்று வழிகாட்டுகிறார் புலவர்.* இத்தெய்வம் பள்ளி கொண்டிருக்குமிடம் ஒரு சோலை. பூமலிப் பெருந்துறையில் இருக்கும் சோலை. இச்சோலையில் தங்கி, கடவுளை வாழ்த்திப் பின் செல்லச் சொல்கிறார் புலவர்.

வெயினுழைபறியாக் குயினுழை பொதும்பர்க்
குறுங்காற் காஞ்சி சுற்றிய நெடுங்கொடிப்
பாசிலைக் குருகின் புன்புற வரிப்பூக்
காரகற் கூவியர் பாகொடு பிடித்த
இழை சூழ் வட்டம் பால் கலந்தவை போல்
நிழறாழ் வார் மணனீர் முகத்துறைப்பப்
புனல் கால் கழீஇய பொழில் தொறும் திரள்காற்
சோலைக் கமுகின் சூல் வயிற்றன்ன
நீலப் பைங்குடந் தொலைச்சி நாளும்
பெருமகிழிருக்கை மரீஇச் சிறு கோட்டுக்
குழவித் திங்கள் கோணேர்ந்தாங்குச்
சுறவுவாயமைத்த சுரும்பு சூழ் சுடர் நுத
னறவு பெயர்த்தமைத்த நல்லெழின் மழைக்கண்
மடவரன் மகளிரொடு பகல் விளையாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைச்
செவ்வி கொள்பவரோடசைஇ யவ்வயி
னருந்திறற் கடவுள் வாழ்த்திச் சிறிது நுங்
கருங்கோட்டின்னிய மியக்கினிர் கழிமின்

–பெரும். 374–392

இங்குப் பள்ளி கொண்டோனைக் காட்டுகின்றார் புலவர். இங்கு நமக்குக் கிடைக்கும் செய்திகள் சில. பாம்பணையிற் பள்ளி கொண்ட வடிவம், 'காந்தளஞ் சிலம்பிற் களிறு படிந்தாங்கு' என்ற உவமை மூலம் தரப்படுதல் பெரிய வடிவமாக இது காட்சி தந்ததைக் காட்டுகிறது. களிறுடன் ஒப்பிடுவதில் இதன் நிறம் தெரிகிறது. எனவே இதனைக் கற்சிலையாகக் கொள்ளலாமா என்ற எண்ணம் எழுகிறது. சோலையும் பெருந்துறையாகக் காணப்பட்ட அந்த இடத்தின் இயற்கைச் சூழலைத் தெரிவிக்கிறது. மக்கள் வழிபட்டு வந்த தலம் இது என்பதும்

---

* இந்த நூலின் அட்டையில் இடம்பெற்றிருப்பது இன்றைய இக்கோயிலின் தோற்றம்.

தெரிகிறது. இவற்றைத் தவிர, பிற எந்தக் குறிப்புகளும் தெரியவில்லை. கோயில் இருந்ததா? பிற தெய்வங்கள் இருந்ததா? என்ன பெயரில் அந்த இடம் அழைக்கப்பட்டது? கோயிலுக்குப் பெயர் இருந்ததா? எதுவும் இங்குப் புலப்படவில்லை.

எனினும், சங்க இலக்கியத்தில் பள்ளி கொண்டோனாகிய திருமால் தொடர்பாகத் தெரிய வரும் பல செய்திகளுள் இதனையும் ஒன்றாகக் கருதுதல் கூடுகிறது. திருமாலின் நிறம், திருவுருவச் சிறப்பு, அவனது அணிகள், கொடி, ஆயுதங்கள், அவதாரம், குலம் போனற பல சங்க இலக்கியத்தில் காட்டப்படுகின்றன.[23] அவற்றுள் ஒன்றாகப்பள்ளி அமர்ந்த கோலமும் அமைகிறது. அதனை இப்பெரும் பாணாற்றுப்படையில் காண்கிறோம். தவிர, இச்சோலையும் நீர்த்துறையுள் பள்ளி கொண்ட காட்சியும், இவ்வழிபாட்டு முறையும் தொல்காப்பியருக்கு முன்னமேயே தமிழர்களிடம் காணப் பட்டிருக்கலாம் என்ற எண்ணத்தைத் தருகிறது.

ஒவ்வொரு நிலத்திற்கும் தனித்தனி தெய்வம் இருந்ததைத் தொல்காப்பியர் சுட்டுவார்.

**மாயோன் மேய காடுறையுலகமும்**
**சேயோன் மேய மைவரை யுலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே**

–தொல். 951

சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே என்ற தொடரில் தொல்காப்பியர் தமக்கு முன்னமேயே மாயோன் (திருமால்) விரும்பியுறையும் இடம் காடும் காடுசார்ந்த பகுதியும் என்ற சிந்தனை இருந்ததைத் தெளிவாகச் சுட்டுகிறார். எனவே இவ்வழிபாட்டுத் தொடர்ச்சியையே பெரும்பாணாற்றுப் படைவரிகள் தருகின்றன எனலாம். திருமாலின் இக்கோலத்தையும் இதன் ஒரு பகுதியாகக் கொள்ளலாம். இப்பாடலில் புலவர் இந்தத் தெய்வம் இருந்த ஊரையோ இதன் பெயரையோ சொல்லவில்லை. எனினும் பின்னாளில் ஆழ்வார்கள் சுட்டும்

---

23. சங்கக் காலக் கடவுளர், பக். 83-91

வெஃகாவே இத்தலம் என்பது வரலாற்று ஆசிரியர்கள் கருத்து. நச்சினார்க்கினியர் திருவெஃகா எனக் குறிப்பிடுவார்.[24] பின்னர் இத்தெய்வம் சொன்ன வண்ணம் செய்த பெருமாள் என்றும், இக்கோயில் யதோத்தகாரி கோயில் என்றும் அழைக்கப்பட்டமையும் தெரிகிறது. எனவே இயற்கைச் சார்புடன் இயற்கைச் சூழலில் வணங்கப்பட்ட இத்தெய்வம் பின்னாளில் பல வித கருத்துகட்கு இடம் கொடுத்தமையை இங்கு அறியமுடிகிறது.

எனவே திருமாலின் வணக்கம் கச்சியில் இருந்தது தெளிவாக அமைய, திருமால் தொடர்பான பிற சான்றுகள் ஏதும் இங்குக் கிடைக்கின்றதா என்ற நோக்கில் ஆராயும் போது, திருமால் வழிபாடு மேலும் பிற இடங்களில் இருந்திருக்கலாம் எனவும், பிறகோலங்களிலும் வழிபட்டிருக்கக் கூடும் என்ற சிந்தனையும் பெறப்படுகிறது.

ஆழ்வார்களில் முதல் மூன்று ஆழ்வார்களும் கி.பி. 6ஆம் நூற்றாண்டு சார்ந்தவர்கள் என்பது பொதுவான கருத்து.[25] இவர்கள் திருமாலைப் போற்றிப்பாடிய பாடல்களுள் கச்சியின் திருமால் தலங்களும் இடம்பெறுகின்றன.

அட்டபுயகரம், திருஅத்தியூர், திருப்பாடகம், திருவேளுக்கை போன்ற தலங்கள் இவர்களால் பாடப்பட்ட தலங்கள் என்ற நிலையில் இவை இவர்களுக்கு முன்னரேயே காணப்பட்ட தலங்கள் என்பது உறுதிப்படுகிறது. எனவே இவையும் தொன்மையுடையனவாக இருந்திருத்தல் கூடும் என்ற நிலையில் இவற்றை எண்ணிப்பார்க்கலாம்.

உருத்திரங்கண்ணனார் பாணனிடம் கச்சிக்கு வழி காட்டும்போது கச்சி மூதூருக்கு முன்னர் வெஃகா அமைந்திருந்த நிலையில் இதனை மட்டும் சொல்லி அமைகின்றார். பிற வைணவத் தலங்களைச் சுட்டும் தேவை அப்போது அவருக்கு இல்லையாதலால் பிற தலங்களை விட்டிருக்கலாம் என்ற எண்ணம் பொருத்தமாகலாம். எனவே இச்செய்திகள் அனைத்தையும் நோக்கி, இவை ஏற்றுக் கொள்ளப்படும் நிலையில், திருமால் இங்குக் கிடந்த கோலத்துடனும், நின்ற கோலத்துடனும், இருந்த கோலத்துடனும் வணங்கப்பட்ட தன்மை சங்க

---

24. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், ப. 246.

25. தமிழ் இலக்கிய வரலாறு, ப. 97.

காலத்திலேயே காஞ்சியில் காணப்பட்ட வழிபாட்டு முறைகள் என்பதையும் ஏற்கலாம். எனவே கச்சியில் பழங்காலந் தொட்டே வைணவம் சிறப்புடன் திகழ்ந்திருந்தது என்பது தெளிவுபடுகிறது.

## 3.2 பௌத்தம்

தமிழகத்தில் புத்த மதத்தின் தோற்றம் பற்றியியம்பும் மயிலை சீனி வேங்கடசாமி “கடைச் சங்க காலத்திற்குப் பின்னர்தான் அதாவது கி.பி. முதலாவது அல்லது இரண்டாவது நூற்றாண்டுக்குப் பிறகு தான் பௌத்த மதம் தமிழ் நாட்டில் வந்திருக்கக் கூடும் என்று சிலர் கருதுகின்றனர். இவ்வாறு இவர்கள் கருதுவதற்குக் காரணம் யாதெனில் கடைச்சங்க நூல்களில் பௌத்த மதத்தைப் பற்றிக் கூறப்படாதது தான். ஆனால் இவர்கள் கருத்துத் தவறெனத் தெரிகிறது. பௌத்த மதத்தைப் பற்றியக் குறிப்புகள் கடைச்சங்கத் தொகை நூல்களுள் கூறப்படவில்லையாயினும் அந்தந்தக் காலத்து நூல்களில் காணப்படுகின்றன. அதாவது கடைச் சங்க காலத்து நூல்களாகிய மணிமேகலை, சிலப்பதிகாரங்களில் இந்த மதத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளன. அன்றியும் பௌத்த மதப்புலவர்கள் இயற்றிய செய்யுட்கள் கடைச் சங்கத் தொகை நூல்களில் காணப்படுகின்றன. மணிமேகலை என்னும் பௌத்த காவியத்தை இயற்றிய பௌத்தராகிய கூலவாணிகன் சாத்தனார் அருளிச் செய்த செய்யுள்கள் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் நூல்களுள் தொகுக்கப்பட்டுள்ளன. இளம் போதியார் என்பவரும் கடைச் சங்க காலத்திலிருந்த பௌத்தப் புலவர். இவரது பெயரே இவர் பௌத்தர் என்பதைத் தெரிவிக்கிறது. . . இந்த இளம்போதியார் இயற்றிய செய்யுள் ஒன்று நற்றிணை என்னும் கடைச்சங்கத் தொகை நூலில் 72ஆம் பாட்டாகத் தொகுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே கடைச்சங்க நூல்களில் பௌத்தப்புலவர்களின் செய்யுட்கள் தொகுக்கப் பட்டிருக்கின்ற படியினாலே அச்சங்ககாலத்திற்குப் பிறகு தான் பௌத்தமதம் தமிழ்நாடு வந்திருக்கக் கூடும் என்பது தவறாகிறது. அதாவது கி.பி. முதலாவது அல்லது இரண்டாவது நூற்றாண்டிலேயே பௌத்தம் தமிழ் நாட்டில் இருந்தது என்பது நன்கு விளங்குகின்றது” என்கிறார்.[26] தவிர இவர் அசோகரின் இரண்டு கல்வெட்டுச் சாசனம் மூலமாகவும் மகாவம்சம் தீபவம்சம் பௌத்த நூல்கள்

26. பௌத்தமும் தமிழும், பக். 1,2.

தரும் சான்றுகள் கொண்டும் விளக்கி, "கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் இந்த மதம் தமிழ்நாட்டில் வந்ததென்றும் இதனைக் கொண்டு வந்து புகுத்தியவர் அசோக மன்னரும் அவரது உறவினருமாகிய மகேந்திரரும் மற்றும் அவரைச் சேர்ந்த பிக்குகளுமாவார் என்றும் விடை கண்டோம்" என்றும் எழுதுகிறார்.[27]

கச்சியில் பௌத்தத்தின் தொன்மை குறித்த சான்றுகள் என்று நோக்க, பொதுவாகத் தமிழகத்தில் இம்மதம் பற்றிய மயிலை சீனி வேங்கடசாமியின் கருத்து கச்சிக்கும் பொருந்தும் என்ற நிலையில் முதற்கண் இதனை ஏற்கலாம்.

"கி.பி. முதல் நூற்றாண்டுக்கு முன் தமிழகம் வந்து மீண்ட "பான்கௌ என்னும் சீனத்தூதர் தம் 'சியன்ஹான் கௌ' என்னும் நூலில் காஞ்சி மாநகரத்து அரசன் தம் அரசனுக்குப் பரிசளித்துச் சிறப்பித்ததைக் குறிப்பிட்டுள்ளார். கிறித்துவிற்கு முற்பட்ட காலத்துப் புத்தத்துமுளி ஒன்று காஞ்சியில் இருப்பதை அண்மையில் அகழாய்வு செய்து கண்டு பிடித்துள்ளனர். இந்த அகழாய்வு உண்மையும் காஞ்சிபுரத்திலிருந்த புத்தமதச் செல்வாக்குப் பற்றிச்செல்லப்படும் செய்தியும் சீனப் பயணியின் புத்தமதத் தொடர்புச் செய்தியும் கால ஒருமைப்பாட்டைக் காட்டுகின்றன". என்ற கருத்து,[28] கி.மு. விலேயே பௌத்தம் காஞ்சியில் வளரத் தொடங்கியதைச் சுட்ட ஏதுவாக அமைகிறது. இந்த வளர்ச்சிக்குப் பின்னர் காஞ்சியில் மிக்க எழுச்சியுடன் பௌத்தம் காணப்பட்டது என்பதற்கு அரணாக அமைவது மணிமேகலை. இதனை மேலும் உறுதிப்படுத்துவது யுவான் சுவாங் குறிப்பு.

தம்முடைய ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம் நூலில் வி. கனகசபை மணிமேகலையின் சிறப்பு குறித்தும், இதில் விளக்கமாகும் பௌத்தம் குறித்தும் மிகச் சிறப்பாக எடுத்தியம்புகிறார்.[29]

---

27. பௌத்தமும், தமிழும், ப. 9.

28. தமிழ்நாடு வரலாறு, சங்ககாலம்-அரசியல், ப. 127.

29. இந்நூல் சிறப்பாக, தென் இந்தியாவிலும், இலங்கையிலும் சுமத்ராவிலும் கி.பி. 2ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் புத்தநெறி எந்த அளவுக்குப் பரவியிருந்தது என்பதைத்

எனவே மணிமேகலை ஒரு பௌத்த வரலாற்று நூலாக அமையும் நிலையில், காஞ்சியின் அன்றைய பௌத்த மத எழுச்சியைச் சிறப்பாகப் படம் பிடித்துக் காட்டுகிறது என்பதும் அறிஞர் யாவரும் ஏற்றுக்கொண்ட உண்மை. மேலும் இதன் எழுச்சியினை நோக்க, ஒரு சமயம் ஓர் இடத்தில் மிகுந்த செல்வாக்குடன் திகழ்வது என்பது திடீரென்று நிகழும் நிகழ்வு அல்ல. திடீரென்று சிறப்புற வேண்டுமெனில் திடீர் திருப்பமோ வேறு ஏதோ ஓர் நிகழ்வோ காரணமாக இருக்க வேண்டும். அவ்வாறு எந்த நிகழ்ச்சியும் காஞ்சியில் நடைபெற்றது என்பதற்கும் சான்று இல்லை. எனவே கி.மு.விலேயே பௌத்தம் இங்கு வளரத் தொடங்கியதையும், சாத்தனார் காலத்தில் அல்லது அவருக்கு

---

தெரிவிக்கும் மதிப்பு வாய்ந்த ஓர் எழுத்து மூலம் ஆகும். இலங்கையில் பாஹியான், ஹியூன்சுவாங் ஆகியவர்களின் சீன நூல்களையும் இலங்கையில் பாளி மொழியில் உள்ள காலக் கணிப்பு ஏடுகளான தீபவம்சமோ மகாவம்சமோ ஆகியவற்றை விட அது பழமை வாய்ந்தது அதன் அருமை இன்றும் உயர்ந்தது ஆகும். புத்த சமயத்திருநூல்களுக்கு அடுத்தபடியாக, புத்த சமயத்தினர் வணக்கப் பொருட்கள், வழிபாட்டு முறைகள், தனிப்பட்ட சமயக் கருத்துகள், மூடநம்பிக்கைகள், மெய்விளக்கக் கொள்கை கோட்பாடுகள் ஆகியவற்றைத் தெரிவிக்கும் வகையில் உலகில் வேறெம் மொழியில் இருக்கும் நூல்களையும் விட இது பழமை வாய்ந்ததாகும். இக்காப்பியத்திலிருந்து நாம் புத்தகால வழக்குகளைப் பற்றிப் பல செய்திகளையுணரலாம். எடுத்துக் காட்டாகத் தமிழகத்தில் அந்நாளில் புத்தத் துறவியர் பெருந் தொகையினராய் இருந்தார்கள். அவர்களில் சிலரேனும் நடந்ததும் நடக்கவிருப்பதுமான செய்திகளை அறிதல் முதலிய மாயச் சித்துகள் தம்மிடம் இருப்பதாகக் கூறி வந்தனர். அத்துடன் அவர்கள் மாயங்களிலும் மந்திரங்களிலும் நம்பிக்கை யுடையவர்களாக இருந்தார்கள். நம்பிக்கையும் அவர்களுக்கு இருந்தது. ஏட்டின் ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார் புலமையும் ஆர்வமும் மிக்க ஒரு புத்தராய் இருந்ததாகத் தோன்றுகிறது-

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட

தமிழகம், ப. 289,290.

முன்பே மிகச் செல்வாக்கு பெற்றிருக்கிறது என்பதையும் இங்கு எந்த வித ஐயமுமின்றி ஏற்கலாம். எனினும் காஞ்சியில் கி.மு. வில் பௌத்த மதம் யாரால் கொண்டு வரப்பட்டது? எப்படி வளர்ச்சியுறத் தொடங்கிற்று? என்ற கேள்விகளுக்கு, தமிழகத்தின் பௌத்தம் மதம் சார்பான பொதுவான வரலாற்றையே நாம் விடையாகக் கொள்ள வேண்டியதாக அமைகிறது.[30]

தவிர, எந்த மதமும் மக்களிடம் செல்வாக்குப் பெற வேண்டும் எனில் சூழலும் அதற்கேற்றாற்போல இருத்தல் வேண்டும். மக்களின் ஆதரவும், மன்னனின் ஆதரவும் பெற்றுச் சிறப்புறுவதற்கு ஏதுவாகப் பிற சூழல்களும் அங்கு அமைதல் வேண்டும். இந்நிலையில் காஞ்சியில் புத்த மதச் செல்வாக்குக்குப் பல சூழல்கள் காரணமாக அமைந்திருக்க வேண்டும் என்பது உறுதி.

காஞ்சியின் இருப்பிடம் ஒருவாய்ப்பு. வடக்கும் தெற்கும் சந்திக்குமிடத்தில் இதன் இருப்பிடம் சிறந்த வாய்ப்பு. அடுத்து, காஞ்சியின் கல்விச்சிறப்பு. தமிழ் மொழிக் கல்வியும் வடமொழிக் கல்வியும் இருமொழியாளரையும் தொடர்புபடுத்தும் விதத்தில் காணப்பட்ட தன்மை. தவிர, சமயப் பொறையுடன் திகழ்ந்த அக்கால மன்னர்கள், மக்கள். இத்தகைய பலகாரணங்களை இங்குக் கருதிப்பார்க்கலாம். இந்நிலையில் சோ. ந. கந்தசாமியின் "பௌத்த சமயத்தின் பொற்காலம் கி.பி. 400-700 ஆகும்" என்ற கருத்தை[31] எதிரொலிக்கிறது காஞ்சியில் காணப்பட்ட அன்றைய புத்த மதத்தின் செல்வாக்கு; மணிமேகலை இயம்பும் செல்வாக்கு. இதன் பின்னர் பௌத்த மதம் செல்வாக்கு இழக்கத் தொடங்குகிறது. அவ்விடத்தைச் சமணம் நிரப்பத் தொடங்குகிறது[32] என்ற கருத்து இங்கு இணைத்துப் பார்க்கத் தக்கது.

இந்நிலையில் பௌத்த மதம் காஞ்சியில் காணப்பட்ட சிறப்பை மணிமேகலை மிக ஆழமாகத் தருகின்றதைக் காண்கிறோம். மணிமேகலை பௌத்த மதத்தின் கொள்கைகளைப் பற்றியெல்லாம் விதந்தோதுகிறது என்பதுடன், (தவத்திறம் பூண்டு

---

30. பௌத்தமும் தமிழும், பக்.1-11.

31. காஞ்சிபுரம் மலர், ப. 71.

32. பௌத்தமும் தமிழும், ப. 15.

தருமம் கேட்டகாதை) அன்று காஞ்சி எவ்வாறு பௌத்தத்தின் எழுச்சியினைக் காட்டவல்லதொரு தலமாக விளங்கியது என்பதையும் இங்கு எவ்வாறு இம்மதம் பரப்பப்பட்டது? யார் ஆதரவாக இருந்தனர்? எப்படியெல்லாம் புத்தமதம் வளர்க்கப்பட்டது போன்ற செய்திகளையும் அறிந்து கொள்ள வாய்ப்பு அளிக்கிறது.

மணிமேகலை புத்தத் துறவியாக இருந்த கோவலனின் தந்தையை வஞ்சியில் காணுகிறாள். அவர் மூலமாக அறவண அடிகள் காஞ்சி சென்றமையைக் கேள்வியுறுகிறாள். மாசாத்துவான் காஞ்சிக்குச் சென்று அறம் செய்யுமாறு மணிமேகலையிடம் அறிவுரை கூற, மணிமேகலை காஞ்சி செல்கின்றாள். இதுமுதல் காஞ்சியின் வரலாறு தொடக்கம் பெறுகிறது. பௌத்தத்தின் தொடர்பு அங்குக் காணப்பட்டமையையும் சாத்தனார் சொல்லத் தொடங்குகிறார்.

மணிமேகலை காஞ்சிக்குச் சென்றதாகக் காட்டப்படும் போதே அங்குப் புத்தர் கோயில் இருந்ததைக் காட்டுகிறார் சாத்தனார்.

> கொடி மதின் மூதூர்க் குடங்கணின் றோங்கி
> வடதிசை மருங்கின் வானத்தியங்கித்
> தேவர் கோமான் காவன் மாநகர்
> மண் மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
> பொன்னகர் வறிதாப் புல்லென்று ஆயது
> கண்டுளங்கசிந்த வொண்டொடிநங்கை
> பொற்கொடி மூதூர்ப் புரிசை வலங்கொண்டு
> நடுநகர் எல்லை நண்ணினள் இழிந்து
> தொடுகழற் கிள்ளி துணையிளங்கிள்ளி
> செம்பொன் மாச்சினைத் திருமணிப் பாசடைப்
> பைம்பூம் போதிப்பகவற்கியற்றிய
> சேதியம் தொழுது
>
> —மணி. 28:164—175

இங்கு, சோழ மன்னனால் இந்தப் புத்தர்கோயில் கட்டுவிக்கப் பட்டதைச் சாத்தனார் சுட்டுகிறார். இங்குக் கோயில் கட்டப்பட்டமையுடன், மன்னன் கட்டுவித்தான் என்ற குறிப்பு மன்னன் ஆதரவுடன் இம்மதம் இங்கு விளங்கியதைக் காட்டும் சான்றாக அமைகிறது. தவிர மணிமேகலை காஞ்சியை அடைந்த

பின்னரும் புத்தமத வழிபாட்டுக்கு, ஏற்பவற்றை அமைத்து விழவெடுத்த செய்தியையும் இப்பகுதியில் காண்கிறோம்.

பண்டை யெம் பிறப்பினைப் பான்மையிற் காட்டிய
அங்கப் பீடிகை யிதுவென அறவோன்
பங்கயப் பீடிகை பான்மையிற் வகுத்துத்
தீவதிலகையும் திருமணி மேகலா
மாபெருந் தெய்வமும் வந்தித்து ஏத்துதற்
கொத்த கோயில் உளத்தகப் புனைந்து
விழவும் சிறப்பும் வேந்தன் இயற்ற -மணி. 28: 209-15

என்ற பாடலடிகள் புத்தமதம் சிறப்பிக்கப்பட்டதைக் காட்டுவன. மேலும் பௌத்த மதத்தின் மேல் கொண்ட நம்பிக்கைகள் காரணமாக, அதற்கேற்ற செயல்பாடுகளை மன்னனும் புரிந்த தன்மையை,

கார்வறங்கூரினும் நீர்வறங்கூராது
பாரகவீதியிற் பண்டையோர் இழைத்த
கோமுகி என்னும்கொழுநீ ரிலஞ்சியொடு
மாமணி பல்லவம் வந்த தீங்கெனப்
பொய்கையும் பொழிலும் புனைமின் என்ற றைந்தத்
தெய்வதம் போயபின் செய்தியாமமைத்த
திவ்விடம் என்றே அவ்விடம் காட்ட
-மணி. 28: 200-206

என, மணிமேகலை காட்டுகிறது.

மேலும் கந்திற்பாவை என்ற தூணில் உறையும் தெய்வம் காஞ்சியில் காணப்பட்டது என்பதையும்

கந்திற்பாவை கட்டுரை யெல்லாம்
வாயாகின்றென வந்தித்தேத்தி
-மணி. 28:185-186

என்னும் பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

இவ்வாறு பௌத்தமதம் தழைத்தோங்கிக் காணப்பட்ட தன்மை கி.பி. 6ஆம் நூற்றாண்டு வரையிலும் தொடர்ந்து காணப்பட்டமையை யுவான் சுவாங் குறிப்பு தருகிறது. பௌத்த மதத்துறவிகள் மிகுதியாக இருந்தனர் என்றும் பௌத்த விகாரைகள் பல காணப்பட்டதையும் இவர் சொல்லிச் செல்லும் தன்மை இதனை வலியுறுத்தும். இத்தகைய இலக்கியச்

சான்றுகளுடன், அகழாய்வுச் சான்றுகளும் இதற்கு அரணாகின்றதைக் கண்டுபிடிப்புகள் உணர்த்துகின்றன.[33]

### 3.3. சைவம்

இக்காலகட்டத்தில் சைவமதத்தின் செல்வாக்கு கச்சியில் எந்த அளவிற்கு இருந்தது என்பது தெளிவாகப் புலப்படவில்லை. எனினும், வைணவம் போன்று சைவமும் பரவி இருந்திருக்கலாம் என்ற உணர்வு நாயன்மார்களின் தேவாரப்பாக்கள் மூலம் எழுகின்ற ஒன்று. சைவ சமயம், வைணவம் போன்றே தமிழகத்தில் பரந்து காணப்பட்டது என்பதைச் சங்கப்பாக்கள் தரும் பல குறிப்புகளினின்றும் பெறுகின்றோம். எனினும் காஞ்சியில் சைவம் பற்றிய நேரடிச் சான்று கிடைக்கவில்லை. ஆயின் தேவாரப்பாக்கள் பல கச்சியில் காணப்பட்ட சிவன் கோயில்கள் பற்றியியம்புகின்றன. "பன்னிரு திருமுறைகளிலும் திருக்கச்சித் தளிகளைப்பற்றி 390 திருப்பாடல்கள் உள்ளன . . . அவை திருக்கச்சி ஏகம்பம், திருக்கச்சி நெறிக் காரைக்காடு, திருக் கச்சி மேற்றளி, திருஓணகாந்தன் தளி, திருக்கச்சி அனேகங்காவதம் தலம் பற்றியன. இவையேயன்றி நாயன்மார்கள் திருக்கச்சியம்பதிக்கு வேறாயத் திருத்தலங்களைப் பாடிய போதும் (40 திருத்தலங்களில்) திருக்கச்சித் தளிகளை நினைவு கூர்ந்து பாடினார்கள்" என்பதை அறியும் போது[34] அன்று காணப்பட்ட சைவ மதத்தின் வழிபாட்டு முக்கியத்துவமும் செல்வாக்கும் நன்கு விளக்கம் பெறுகின்றன. மேலும் திருக்கச்சி ஏகம்பம் பற்றிய தன்னுடைய ஆய்வில் இதன் தொன்மை பற்றிய சில கருத்துகளைத் தருகிறார் சி. இரத்தினம்.[35]

திருநாவுக்கரசு நாயனார்,

> கச்சிப்பல தளியும் ஏகம்பத்தும்
> கயிலாத நாதனையே காணலாமே

என, கச்சியில் பல சிவத்தலங்கள் இருந்ததைக் காட்டுகிறார். எனவே திருநாவுக்கரசர் நாயனார்க்கு முன்னரேயே இருந்த கோயில்கள் இவை என்பது இங்குக் கருதத்தக்கது.

---

33. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 118.

34. காஞ்சியும் மலர், ப. 1.

35. காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோவில் ஓர் ஆய்வு, ப. 25.

திருவேகம்பமே காஞ்சியின் தலைமைத் தலம் என்றும் **மல்லல் தலங்கட்கு அரசாம் மணித் தெய்வக் கோயில் செல்வத் திருவேகம்பம்** என்பது காஞ்சி புராணம்[36] என்னும் கூற்றும் இதன் பழமையையும் சிறப்பையும் உணர்த்தும். **கச்சி பல தளியும் ஏகம்பத்தும்** என்ற தொடரும் இங்குச் சிந்தித்தற்குரியது. கயிலாதநாதனுக்குக் கோயில் பல இருந்ததையும், இவற்றுள் ஏகாம்பரநாதர் கோயில் தொன்மையும், சிறப்பும் உடையதாகத் திகழ்ந்திருக்கிறது என்பதும் இங்கு வெளிப்படும் செய்தி. எனவே தேவாரப்பாக்கள் பெற்ற இத்தலங்கள் சைவமதம் கச்சியில் சிறப்புற்று விளங்கியமையைக் காட்டும் நிலையில் கச்சியில் வைணவம் போன்றே சைவமும் அன்று சிறப்புடன் திகழ்ந்திருக்கிறது என்ற எண்ணத்தைப்பெற இயலுகிறது.

### 3.4 சமணம்

"பண்டைக் காலத்திலே சமண சமயம் தமிழ்நாடு முழுவதும் பரவி நிலை பெற்றிருந்தது. பரவியிருந்தது மட்டுமல்லாது செல்வாக்குப் பெற்றும் இருந்தது. இந்தச் சமயம் தமிழ் நாட்டிலே வேரூன்றி, தழைத்துத் தளிர்த்து இருந்ததைத் தேவாரம், நாலாயிர திவ்விய பிரபந்தம், பெரிய புராணம், திருவிளையாடற் புராணம் முதலிய பிற்காலத்து நூல்களும் மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய சங்க காலத்து நூல்களும் தெரிவிக்கின்றன. இலக்கியச் சான்று மட்டுமல்லாமல் தமிழ் நாட்டிலே ஆங்காங்குக் காணப்படுகின்ற கல்வெட்டுச் சாசனங்களும் அழிந்தும் அழியாமலும் காணப்படுகிற சமணக் கோயில்களும் காடுமேடுகளில் ஆங்காங்கே காணப்படுகிற சமண சமயத் தீர்த்தங்கரர்களின் திருவுருவங்களும் சான்று கூறுகின்றன"[37] என்று கூறும் மயிலை சீனி வேங்கடசாமி தொண்டைநாட்டில் இதன் பழமையை இன்னமும் தொன்மைக்குக் கொண்டு செல்கிறார். "இன்னும் ஊன்றி ஆராயப்புகுந்தால் கி.மு. 3ஆம் நூற்றாண்டிற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே சமண மதம் தமிழ் நாட்டிற்கு வந்திருக்க வேண்டும் என்று தெரியவருகிறது. மகாபாரத காலத்திலே அஃதாவது கண்ணபிரானுடைய காலத்திலே சமணர் தமிழ்நாட்டிற்கு வந்ததாகத் தெரிகிறது-கண்ணபிரான் சமணராக இருந்தால் அவர் வழியினராகிய அகத்தியரால் அழைத்து வரப்பட்ட பதினெண் குடிவேளிரும் அருவாளரும் சமணராக

---

36. காஞ்சிபுரம் மலர், ப. 52. 37. சமணமும் தமிழும், ப. 41.

இருந்திருக்கவேண்டும். . . அகத்தியருடன் வந்த அருவாளர் தொண்டை நாட்டில் குடியேறினார்கள். அவர்கள் குடியேறிய பிறகு தொண்டை நாட்டிற்கு அருவாநாடு என்று பெயர் உண்டாயிற்று" என்கிறார்.[38] எனினும் காஞ்சியில் சமணம் இந்த ஆய்வுக் காலப்பகுதியில் இருந்ததற்கான செய்திகள் தெளிவாகத் தெரியவில்லை. இருந்திருப்பினும் செல்வாக்கு மிகுதியாக இல்லாமலேயே இருந்தது என்றுதான் கூற இயலுகிறது. ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தொண்டை நாட்டில் சமணமுனிவர்கள் வாழ்ந்தனர் என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன எனக் கூறும் வெ. இர்ாதா கிருஷ்ணன், "காஞ்சியின் ஒரு பகுதியாக விளங்கிய திருப்பருத்திக் குன்றம் 'ஜின காஞ்சி' எனப் பெயர் பெற்றது. பல்லவர் ஆட்சியின் தொடக்கத்திலிருந்து இவ்வூர் சமணத்தின் இருப்பிடமாகத் திகழ்கிறது. சமண மரபில் கூறப்பெறும் நான்கு வித்தியாதானங்களில் ஜினகாஞ்சியும் ஒன்று. இங்கு சந்திர, மல்லிசேனர், புஷ்பசேனர், அனந்த வீர ராமனர் போன்ற சமணப் பெரியார்கள் வாழ்ந்துள்ளனர்... கி.பி. ஆறாம் நூற்றாண்டில் இங்கு வாழ்ந்த வஜ்ரநந்தி என்ற சமணப் பெரியார்க்குப் பல்லவ மன்னன் சிம்மவர்மன் பள்ளிச் சந்தமாக, 'பதினாறரைப்பட்டி' நிலம் அளித்த செய்தி பள்ளன்கோயில் செப்பேடுகளால் அறியப்படுகிறது. தமிழக வரலாற்றில் பள்ளிச் சந்தம் அளிக்கப்படுவது இதுவே முதன் முறையாகும். இங்கிருந்த சமணப்பள்ளிகள் பொதுவாகப் பல்லவ மன்னர்களால் ஆதரிக்கப்பெற்றன" என்று கூறும் கருத்து,[39] பிற்காலப் பல்லவர் காலத்தை நம்முன் காட்சிப்படுத்துகிறது. சிம்ம விஷ்ணு பல்லவனுடைய தந்தை சிம்மவர்மன் காலத்தில் சமணத்தின் செல்வாக்கை இச்செய்திகளில் காண்கிறோம். முன்னைய செய்திகள் தெளிவாகத் தெரியாமைக்குக் காரணம் பௌத்த மதத்தின் செல்வாக்கு எனத்தோன்றுகிறது. பௌத்த மதத்தின் செல்வாக்கு இழப்பிற்குப்பின் சமணமதம் செல்வாக்கு பெற்றது என்பது, "கி.பி. 8ஆம் நூற்றாண்டில் (கி.பி. 753-இல்) சமண சமய குருவான பேர் பெற்ற ஆசாரிய அகளங்கர் காஞ்சீபுரத்தில் பௌத்தக் கோயிலாக இருந்த காமாட்சி அம்மன் ஆலயத்தில் பௌத்த பிக்குகளுடன் சமயவாதம் செய்து அவர்களை வென்றார். தோல்வியுற்ற பிக்குகள் இலங்கைக்குச் சென்று

---

38. சமணமும் தமிழும், பக். 38-40.

39. காஞ்சிபுரம் மலர், ப. 99.

விட்டனர். இவ்வாறு பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் தமிழ் நாட்டிலே வைதீகம் பௌத்தம் என்னும் மதங்கள் பின்னடைந்து விடச் சமணமதம் செல்வாக்குப் பெற்றுச் சிறப்புற்றிருந்தது" என்னும் செய்தியில் உணரக் கூடிய ஒன்று.[40]

எனவே சமண சமயம் பண்டு தொட்டே இங்கு இருந்திருந்த போதிலும் இதன் எழுச்சி, கி.பி.5-க்குப் பின்னரேயே தொடங்கியிருக்க வேண்டும். அது வரையிலும் பிற சமயங்களின் செல்வாக்கு, இது எழுச்சி பெற இயலாமல் தடுத்து இருக்கலாம் என்பதுவே இங்குத்தோன்றும் எண்ணம்.

எனவே பல்லவர்க்கு முன் காஞ்சியின் சமய வரலாறு தமிழகத்தின் வரலாற்றுத் தெளிவுக்கும் பலவிதங்களில் பயன்படுகிறது. தொடக்க காலத்தில் வைணவம், சைவம், பௌத்தம், சமணம் இங்குக் காணப்பட்டன. சமணம் மிகுந்த செல்வாக்குப் பெற்றதாகத் தெரியவில்லை. பிற மூன்று சமயங்களில் பௌத்தம் மிக்க எழுச்சி பெற்றுத் திகழ்ந்தது. எனினும் இறுதியில் பௌத்தத்தின் எழுச்சி குன்ற, இந்த இடத்தைச் சமணம் பற்றத் தொடங்கியது; சைவம் வைணவம் இரண்டு சமயங்களும் தொடர்ந்து செல்வாக்கு பெற்றிருந்தன என்பது இச் செய்திகளினின்றும் புலப்படும் வரலாறுகளாகும். தவிர, இச்சமய வரலாறுகள், அன்றைய சமய வாதிகளையும் இனங்காட்டுகின்றன. பொதுவாக அன்று தாங்கள் பின்பற்றிய மதங்கள் பற்றிய தெளிவான அறிவைச் சமயவாதிகள் கொண்டு திகழ்ந்தனர் என்பதையும், அவற்றைப் பிறருக்கு எடுத்தியம்புவோர் அன்று காணப்பட்டனர் என்பதையும் வஞ்சி மாநகரில் சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் சாத்தனார் இயம்புகிறார். தவிர, குறிப்பிட்ட சமயவாதிகள் ஆயினும், அவர்கள் பிற சமயங்கள் பற்றியும் ஆழ்ந்த அறிவைக் கொண்டு திகழ்ந்துள்ளனர் என்பதையும் சாத்தனார் இவற்றை யெல்லாம் தொகுத்துத் தரும் விதம் காட்டுகிறது. தவிர, சமயத்தைப் பின்பற்றுவோரும் பரப்புவோரும் தாம் பின்பற்ற எண்ணும் மதம் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்டபின்னரே, பிறமதங்களைக் காட்டிலும் குறிப்பிட்ட சமயத்தின் சிறப்பினை உணர்ந்து கொண்ட பின்னரே அதனைப்பின் பற்றத் தொடங்கினர் என்பதும் மணிமேகலை வாழ்வு காட்டும் விளக்கம். இதனைச்

40. சமணமும் தமிழும், ப. 37.

சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதை, தவத்திறம் பூண்டு தருமம் கேட்டகாதை புலப்படுத்துகின்றன. எனவே இவையெல்லாம் தமிழகத்தில் சமயச் செல்வாக்கு அன்று மிக ஓங்கிக் காணப்பட்டது என்பதையே புலப்படுத்துகின்றன. இருப்பினும் மக்களின் சமூகச்சூழல், மனவுணர்வுகள், எண்ணங்கள் போன்றன குறிப்பிட்ட மதம் குறிப்பிட்ட இடத்தில் செல்வாக்குப் பெறவும், செல்வாக்கு இழக்கவும் காரணமாக இருந்திருக்கின்றன என்பது காஞ்சியின் சமய வரலாற்றில் தெளிவுபடும் எண்ணம்.

## 4. வணிகம்

தேவையும், தொழிலும், பயன்பாடும், வாணிகமும் ஒன்றோடொன்று நெருங்கியத் தொடர்புடையன. பொருட்களின் தேவையுணர் தன்மையும் பயன்படுத்தும் அறிவும் பொருட்களைப் பெறும் / உற்பத்திச் செய்யும் அறிவும் பங்கிடும் வணிகத் திறனும் வரலாற்றுக் காலம் தொட்டே தமிழர் பெற்றிருந்தமையினைத் தமிழரின் வரலாற்றையுணர்த்தும் வரலாற்று மூலங்களின் வழிக் காண்கிறோம். தமிழகம் முழுவதும் இச்சிறப்பு பரவலாகக் காணப்பட்டதும் அங்குப் புலப்படுகிறது. தமிழரின் தலைசிறந்த தொழில் அறிவும் வாணிக அறிவும் அங்கு வியப்பூட்டும் வண்ணம் அமைகின்றன. காஞ்சி பற்றிய ஆய்விலும் இவை வெளிப்படுகின்றன.

ஓர் இடம் வணிகச் சிறப்பு பெற பல்வேறு அடிப்படைகள் வேண்டும். அவற்றுள் இருப்பிடம், சூழல், கிடைக்கும் பொருட்கள், மக்கள் திறன், அரசு போன்ற காரணங்கள் முக்கியமானவை. காஞ்சியின் வணிக வளத்திற்கும் இத்தகைய பல சிறப்புகள் காரணமாக இருந்துள்ளது தெரிகிறது. வேகவதி ஆற்றின் கரையில் கச்சியின் இருப்பிடமும் கடற்கரையின் / துறைமுகம் அமைய வாய்ப்பான கடற்கரையின் அருகாமையும், பல தரப்பட்ட மக்கள் வாழ்ந்த நிலையும், கல்விச் சிறப்பும், போன்ற பல காரணங்கள் இதன் வணிகச் சிறப்பிற்குக் காரணமாக இருந்திருக்கின்றன.

கச்சி பற்றிய தன் விளக்கத்தில் கடியலூர் உருத்திரங் கண்ணனார் சொல்லும் பாடல் அடிகளுக்கு உரையாசிரியர்களின் உரை அதன் வணிகச் சிறப்பினைத் தருகிறது.

"கொடையும் கோளும் (400) கெழீஇ கால் யாத்த பல்குடிகடை (399) - பண்டங்களை விற்றலும் கொள்ளலும் பொருந்தி அவ்விடத்து நெருங்கின பல குடிகளையுடைய கடையினையுமுடைய மூதூர் (411)" என, உரை எழுதுகின்றார் நச்சினார்க்கினியார்.[41]

இப்பாடலடிகள் சிறந்த வணிகம் நடைபெற்றமையை மட்டும் காட்டுகின்றன. வணிகப் போக்குவரத்து எப்படி நடைபெற்றது? என்னென்ன பொருட்கள் வணிகப் பொருட்களாகக் காணப்பட்டன? போன்றன ஒன்றும் இங்குத் தெளிவு பெறவில்லை. இருப்பினும் கச்சியின் அருகாமைத் தலங்களின் வருணனைகள், காஞ்சியில் அகழாய்வு செய்த அறிஞர் தரும் விளக்கங்கள், சங்க காலத்திற்குப் பின்னைய காஞ்சியின் வரலாறு போன்றன அக்கால வணிகம் குறித்த செய்திகளைப் பெறத் துணையாகின்றன; அங்கு வாணிகம் சிறப்பாக நடைபெற்றமையையும் தெளிவுபடுத்துகின்றன.

பெரும்பாணன் கச்சிக்கு வரும் வழியில் காணும் பல ஊர்களைப் புலவர் சொல்லிச் செல்கிறார். அங்கெல்லாம் மக்களின் விருந்தோம்பும் தன்மை, ஊர் வளம் எல்லாம் சொல்லிச் சென்றாலும், மிக விளக்கமாக அவை ஒவ்வொன்றும் பாடப்படவில்லை. ஆயின் கச்சிக்கு முன்னர்க் காணப்படும் துறைமுகப் பட்டினத்தை மிகத் தெளிவாக வருணிக்கிறார் புலவர். இத்துறைமுகத்தை இவர் விளக்கிச் செல்லும் நிலை, திரையனின் காலத்தில் இப்பட்டினம் மிகச் சிறப்புடன் இலங்கியதைக் காட்டுகிறது. நீர்ப்பெயற்று என்ற ஊரின் எல்லையில் இத்துறைமுகப்பட்டினம் இருப்பதைக் காட்டுகிறார் புலவர்.

வண்டலாயமொ டுண்டுறை தலைஇப்
புனலாடு மகளிரிட்ட பொலங்குழை
யிரைதேர் மணிச்சிர லிரைசெத் தெறிந்தெனப்
புள்ளார் பெண்ணைப் புலம்பு மடற் செல்லாது
கேள்வி யந்தண ரருங் கடனிறுத்த
வேள்வித் தூணத் தசைஇ யவன
ரோதிம விளக்கி னுயர் மிசைக் கொண்ட
வைகுறு மீனிற் பைபயத் தோன்று
நீர்ப்பெயற்று எல்லைப்போகி —311–319

41. பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், ப. 250.

என்றவர், அங்குக் காணப்படும் துறைமுகப்பட்டினத்தைச் சிறப்பாக விவரிக்கிறார்.

. . . . . பாற்கேழ்
வாலுளைப் புரவியொடு வடவளந்தரூஉம்
நாவாய் சூழ்ந்த நனி நீர்ப்படப்பை
மாடமோங்கிய மணன் மலி மறுகிற்
பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்
சிலதர் காக்கும் சேணுயர் வரைப்பிற்
நெல்லுமு பகட்டொடு கறவை துன்னா
மேழகத் தகரோடு எகினம் கொட்குங்
கூழுடை நல்லிற் கொடும்பூண் மகளிர்
கொன்றை மென்சினைப் பனி தவழ்பவை போற்
பைங்காழ் அல்குல் நுண்டுகில் நுடங்க
மால்வரைச் சிலம்பின் மகிழ் சிறந்தாலும்
பீலி மஞ்ஞையினியலிக் கால
தமனியப் பொற் சிலம்பொலிப்ப வுயர் நிலை
வான்றோய் மாடத்து வரிப்பந்தசைஇ
கைபுனை குறுந்தொடி தத்தப்பைபய
முத்தவார்மணற் பொற் கழங்காடும்
பட்டின மருங்கி னசையின் —319–336

என அப்பட்டினத்தில் இளைப்பாறினால்

. . . . . . . . . . . . . . . . . . . . . . . முட்டில்
பைங்கொடி நுடங்கும் பலர் புகு வாயிற்
செம்பூத் தூய செதுக்குடை முன்றில்
கள்ளடு மகளிர் வள்ள நுடக்கிய
வார்ந்துகு சின்னீர் வழிந்த குழம்பி
னீர்ஞ் சேறாடிய விரும்பல் குட்டிப்
பன்மயிர்ப்பிணவொடு பாயம் போகாது
நென்மாவல்சித் தீட்டிப் பன்னாட்

குழி நிறுத்தோம்பிய குறுந்தாளேற்றைக்
கொடுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவிர்
—336–345

என அங்குக் கிடைக்கும் உணவினைச் சொல்லி, பின்னர் அங்குக் காணப்படும் கலங்கரை விளக்கினையும் காட்சிப்படுத்துகிறார்.

வானமூன்றிய மதலை போல
ஏணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண் பொர நிவந்த வேயா மாடத்
திரவின் மாட்டிய விலங்கு சுடர் ஞெகிழி
யுரவு நீர் அழுவத்தோடு கலங்கரையுந்
துறை —346–351

என்பது அப்பகுதி.

விண்ணைத் தீண்டும்படி உயர்ந்த விளக்கின் உச்சியில் இலங்கும் சுடர் துறைமுகத்தில் இருந்தது இங்குத் தெளிவுபடுகிறது.

இப்பாடலடிகள், கடற்கரையில் நாவாய்கள், புரவிகளுடன் வடதிசையினின்றும் வளம் பலவும் கொண்டு தருகின்றதையும், வணிகர், பரதவர், தொழிலாளர் வாழ்ந்து வருகின்றமையையும் போன்றனவற்றைக் குறிப்பிடும் தன்மை இன்றைய துறைமுகத்தையே நம்முன் கொணருகின்றது.

எனவே புலவர் இந்த அளவிற்கு வேறு எந்த இடத்தையும் வருணிக்காது இந்தத் துறைமுகப் பட்டினத்தை மட்டும் மிகவும் விரிவாக விளக்கிச் செல்லும் நிலை இரண்டு நிலைகளில் முக்கியத் துவம் பெறுகிறது. கச்சியின் சிறப்புக்கும் வளத்துக்கும் இந்தத் துறைமுகம் ஒரு காரணமாக இருந்திருக்கிறது. அடுத்து, கச்சியோன் சிறப்புக்கும் இது ஒரு சான்றாக அமைகிறது என்ற நிலைகளில் இதனை எண்ணிப் பார்க்கலாம்.

நீர் வழி வாணிகம் குறித்த இச் செய்திகளுடன், நில வழி வாணிகம் குறித்த செய்திகளையும், இப்புலவரின் கச்சிக்குச் செல்லும் வழிகளின் வருணனையில் காண்கிறோம்.

எனவே இச்செய்திகள் கச்சி தொன்று தொட்டே சிறந்த வாணிபத் தலமாகத் திகழ்ந்தமைக்கு நிலவழியும் நீர்வழியும் சிறந்த துணையாக இருந்ததைத் தெரிவிக்கின்றன.

இலக்கியச் சான்றுகள் மூலம் தெரியவரும் இத்தகைய, வாணிபத்தின் சிறப்பு இப்பகுதியில் ஆய்வு செய்த அகழ்வாய்வு வல்லுநர்களின் கண்டுபிடிப்புகள் மூலமும் உறுதிப்படுகிறது.

"பண்டைய இலக்கியங்களில் ரோமானியத் தொடர்பினை வலியுறுத்திக் கூறும் பகுதிகள் பல உள்ளன. இவற்றின் மூலம்

கிடைக்கும் சான்றாதாரங்களை உறுதிப்படுத்தும் வகையில் உரோமானிய மதுச் சாடிகளின் எச்சங்கள், அப்பாணியைத் தழுவி, உள் நாட்டில் செய்யப்பட்ட மதுக் குடங்கள் ஆகியவைகளும் கிடைத்துள்ளன. . . இங்குக் கிடைத்த படகு உருவம் வரையப்பட்ட பானை ஓடுகள் திரைகடல் வணிகத் தொடர்பை உறுதிப்படுத்தும்.

இங்குச் சுடுமண் மணிகளும் அகேட் (Agate) ஜாஸ்பர் (Jasper) கார்நீலியன் (cornelian) சால்சிடெனி (chalcedonny) படிம மணிகள் (quariz crystal) முதலிய விலையுயர்ந்த வண்ண மணிகள் கிடைத்துள்ளன. இவை தமிழ் நாட்டில் அரிக்கமேடு, காவிரிப்பூம்பட்டினம், உறையூர், திருக்காம்புலியூர், அழகரை, கருவூர், கொற்கை ஆகிய இடங்களில் கிடைத்துள்ளவற்றுடன் ஒப்பிடத்தக்கன. எனினும் மேற்குறித்த இடங்களை விட, கண்ணாடி மணிகளும் ஏனைய மணிகளும் இப்பகுதியில் எண்ணிக்கையில் அதிகமாகக் கிடைக்கின்றன.

அடுத்து இம்மணிகள் தயாரிப்பதற்கு உரிய மூலப்பொருட்கள் காஞ்சி அகழாய்வில் அதிகமாகக் கிடைத்துள்ளன. அவ்வாறு கிடைத்துள்ள பல்வேறு வகையைச் சார்ந்த மணிகளில் செதுக்கப்பட்டனவும் துளையிட்டனவும் துளையிடாதனவுமே அதிகமானவை. இப்படி வேலைப்பாடு முற்றுப் பெறாத மணிகள் அதிகமாகக் கிடைப்பதால் காஞ்சி மாநகரின் இப்பகுதி மணிகளின் உற்பத்திச் சாலையாகவும் மையமாகவும் வாணிபத் தளமாகவும் இருந்திருக்க வேண்டு மென்பது உறுதிப்படுகின்றது.

காஞ்சி மாநகரம் உயர்ந்த கற்களும் அழகிய முத்துக்களும் சங்க காலத்திலேயே பெற்றிருந்தது என்பதைக் கி.பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த 'பாங்கோ' என்ற சீன நாட்டவர் குறிப்பிலிருந்து அறிகிறோம்."[42]

சங்க காலத்தில் காணப்பட்ட இத்தகைய பெரும் வாணிகத்தின் சிறப்பினைப் பற்றிய செய்திகளைப் பின்னைய இலக்கியங்களில் காணக் கூடவில்லை. மணிமேகலையிலோ, பல்லவர் செப்பேடுகளிலோ இவை குறித்த செய்திகள் தெரிய வில்லை எனினும், இப்பகுதியில் காணப்பட்ட துறைமுகங்களின்

---

42. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, பக். 116-117.

வரலாறு சில கருத்துகளைப் பெறத் துணையாகிறது. சங்க காலத்தில் காணப்பட்ட நீர்ப்பெயற்று எல்லையில் காணப்பட்ட துறைமுகம் பற்றிய எந்தச் செய்தியையும் பிறகு காணக் கூடவில்லை ஆயினும் மல்லைத் துறைமுகம் பற்றி அறிஞர்கள் கருத்துத் தெரிவிக்கின்றனர். கலங்களியங்கும் மல்லை என்ற திருமங்கையாழ்வார் கூற்றும், பல்லவ மன்னன் மாமல்லபுரத்திலிருந்து இலங்கைக்குப் படை அனுப்பினான் என்ற கருத்தும் கொண்டு இதனை இயம்புகின்றனர்.[43] சங்க காலத்திய நீர்ப் பெயற்றுத் துறைமுகம் என்னவாயிற்று, பின்னர் மல்லைத் துறைமுகம் எவ்வாறு திகழத் தொடங்கிற்று என்பது தொடர்பான செய்திகள் கிடைக்கவில்லை. ஆயின் மா. இராசமாணிக்கனார் "பெரும்பாணன் துறைமுகப்பகுதியைக் கூறி, அதனை அடுத்திருந்த பகுதியைப் பட்டினம் என்று

---

43. ஒய்மானாட்டுக்கு வடக்கேயிருந்த தொண்டை நாட்டில் மாமல்லபுரமே பல்லவர் காலத்தில் சிறந்த துறைமுகப் பட்டினமாய் இருந்தது. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் நரசிம்மவர்மன் இலங்கை அரசனான மானவர்மனுக்கு உதவியாக இருமுறை கப்பற்படையை மாமல்லபுரத்திலிருந்தே இலங்கைக்கு அனுப்பினான். அதே நூற்றாண்டில் முற்பாதியில் யுவான்சுவாங் என்ற சீனவழிப்போக்கன் இந்த மாமல்லபுரம் சிறந்த துறைமுக நகரம் என்று பாராட்டியுள்ளான். கி.பி. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் மாமல்லபுரம் சிறந்த துறைமுக நகரம் என்பதைக் கீழ் வரும் பாடலில் தெளிவாகக் குறித்துள்ளார்.

புலங்கொள் நிதிக் குவையொடு
    புழைக் கைம்மாக் களிற்றினமும்
நலங்கொள் நவமணிக் குவையும்
    சுமந்தெங்கும் நான்றொசிந்து
கலங்களியங்கும் மல்லைக்
    கடன்மல்லைத் தலசயனம்
வலங்கொள் மனத்தாரவரை
    வலம்கொள் என் மட நெஞ்சே

இவற்றை நோக்கத் தொண்டைநாட்டில் மாமல்லபுரமே சிறந்த துறை முகநகராய் இருந்தது என்பது தெளிவாகும்-

பத்துப்பாட்டு ஆராய்ச்சி, பக். 64-65.

குறிப்பிட்டிருத்தலைக்காண, பிற்கால மாமல்லபுரம் இருந்த பகுதி சங்க காலத்தில் பட்டினம் என வழங்கப்பட்டது என்று கருதுவதே பொருத்தமாகும்" என்று மேலும் பல கருத்துகளை இயம்பி இதனை முடிவு செய்கிறார்.[44]

எனவே நீர்ப்பெயற்றின் எல்லையில் இருந்த துறைமுகமும், பின்னர் மல்லைத் துறைமுகம் எனச் சுட்டப்படும் துறைமுகமும் இரண்டும் ஒன்றா வேறா என்ற ஆய்வு ஒரு புறமிருப்பினும், இப்பகுதியில் காஞ்சியின் கடல்வாணிபம் தொடர்ந்து நடப்பதற்கு இந்தத் துறைமுகங்கள் துணையாக இருந்திருக்கின்றன என்பதில் எந்த ஐயமும் இல்லை.

இவ்வாறு' நீர்ப்பெயற்று எல்லையில் காணப்பட்ட துறைமுகம் பற்றிப் பெரும்பாணாற்றுப்படை தெளிவாக வருணிக்கின்ற போதிலும், இந்தத் துறைமுகத்தின் கடல்வாணிபம் கச்சியின் சிறப்புக்குக் காரணமாக இருத்தல் வேண்டும் என்பதை ஊகிக்க முடிகின்ற அதே நேரத்தில், இத்துறை முகம் பற்றிய பல ஐயங்களும் அறிஞரிடையே காணக் கிடக்கின்றன. இந்த ஐயங்களை ஆராயும் போது, நீர்ப்பெயற்றுத் துறைமுகத்தினின்றும் எவ்வாறு கச்சிக்கு வாணிகப் பொருட்கள் எடுத்துச் செல்லப்பட்டன என்ற செய்தியும் துலக்கம் பெறுகிறது.

மயிலை சீனி வேங்கடசாமி தம்முடைய 'பழங்காலத் தமிழர் வாணிகம்' நூலில் அன்று காணப்பட்ட பல துறை முகங்களையும் ஆராய்கின்றார். இதில் எயிற் பட்டினம் (சோபட்டினம்) என்பதையே இந்தத் துறைமுகப்பட்டினமாகக் கருதி எழுதுகிறார். இது பிற்காலத்தில் மரக்காணம் என்ற பெயர் பெற்றது என்பார்.[45]

தவிர, இத்துறைமுகப்பட்டினமே, வசவமுத்திரம் என்ற கூற்றும், இடைக்காலத்தில் துறைமுகமாக இருந்த சதுரங்கப் பட்டினம் என்ற கூற்றும் அறிஞர்களிடம் காணப்படுகின்றன. மேலும், தன்னுடைய தமிழகத் துறைமுகங்கள் நூலில், பா. ஜெயக்குமார், "சங்க இலக்கியத்தில் வசவ சமுத்திரம் குறித்து எவ்விதத் தகவலும் காணப்படவில்லை. எனினும் இக்கடற் கரைப்பகுதியில் சங்க காலத்தில் கீழை மற்றும் மேலை நாடுகளுடன் வாணிகத் தொடர்புகள் காணப்பட்ட நீர்ப்பெயற்று

---

44. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.67
45. பழங்காலத் தமிழர் வாணிகம், ப. 75.

என்னும் துறைமுகம் இருந்ததைப் பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது. ஆனால் இப்பெயர் மாமல்லபுரத்தைக் குறிப்பதாகவும் வசவசமுத்திரத்தைக் குறிப்பதாகவும் வரலாற்று ஆசிரியர்களிடையே வெவ்வேறு கருத்துகள் நிலவுகின்றன. சில ஆய்வாளர்கள் நீர்ப்பெயற்று என்பதைச் சதுரங்கப் பட்டினத்துடன் ஒப்பிடத் தவறவில்லை" என்கிறார்.[46] இருப்பினும் ஏன் இவர் வசவசமுத்திரம் என சங்க காலத் துறைமுகங்கள் என்ற தலைப்பில் எழுதினார் என்பது தெளிவு பெறவில்லை. எனினும் ஆராயும்போது,[47] நீர்ப்பெயற்று வசவ சமுத்திரமாகவோ, சதுரங்கப்பட்டினமாகவோ இருக்க வாய்ப்பில்லை என்றே தோன்றுகிறது.

மாமல்லபுரத்திலிருந்து தெற்கே 14 கி.மீ. தொலைவில் பாலாறு கடலில் கலக்குமிடத்தில் வசவ சமுத்திரம் அமைந்துள்ளது என்ற செய்தியும், இங்குக் கிடைத்தப் பொருட்களைத் தொல்லியலார் சுட்டிச் செல்வதும் போன்ற செய்திகளையெல்லாம் ஆராயும் போது,

1. சங்க காலத்தில் வசவசமுத்திரம் துறைமுகமாக இருந்தது என்பதற்கு எந்த விதச் சான்றுகளும் கிடைக்காத நிலையிலும்
2. இவ்வூர்ப் பெயரில் அமையும் சமுத்திரம் என்ற பொதுக்கூறு சங்க இலக்கிய ஊர்ப்பெயர்ப் பொதுக் கூறுகளில் காணப்படாமையும்
3. சங்க காலத்தில் நீர்ப்பெயற்று எல்லையில் துறைமுகம் இருந்தது என்பதற்கே சான்றுகள் கிடைக்கும் நிலையும்
4. இடைக்காலத்தில் வசவசமுத்திரம் ஓர் ஊராகத் தெரியவரும் நிலையும்
5. இங்கு அகழாய்வு செய்யப்பட்டபோது கிடைக்கப்பெற்ற பொருட்கள் மூலமும்,

வசவ சமுத்திரம் என்பது ஓர் ஊரே அன்றி, துறைமுகமாக இருந்திருக்க வாய்ப்பில்லை என்பது தெரியவருகிறது. தவிர, நீர்ப்பெயற்றுத் துறைமுகம் சிறப்புடன் திகழ்ந்த காலத்தில் அருகாமையில் இருந்த கச்சிக்கு இத்துறைமுகத்தில் வந்திறங்கிய பொருட்கள் படகுகளில் ஏற்றப்பட்டுப் பாலாற்றின் வழியே வேகவதி ஆற்றின் கரையில் இருந்த கச்சிக்குக் கொண்டு செல்லப்

---

46. தமிழகத் துறைமுகங்கள், ப. 43.

47. வசவ சமுத்திரம் துறைமுகமா?, இ. த. ம. க. ஆய்வுக்கோவை, ப. 230.

பட்டிருக்க வேண்டும். இந்தப்படகு போக்குவரத்து நடை பெற்ற ஆற்றின் கரையில், வழியில் இருந்த ஊர் வசவசமுத்திரம் என்பது[48] இங்கு எண்ணக் கூடியதாக, ஏற்கக் கூடியதாக அமைகிறது. எனவே இவையனைத்தையும் இணைத்துப்பார்க்க, நீர்ப்பெயற்று எல்லையில் இருந்த துறைமுகப்பட்டினமே பின்னர், மா.இராசமாணிக்கனார் கருத்துப்படி மாமல்லையாகச் சுட்டப்பட்டிருக்க வேண்டும். எனினும் இதற்கும் இடைப்பட்ட காலத்து வரலாறு தெளிவுபடவேண்டும். இல்லையென்றால் சங்க காலத்தில் பலதூர்ந்துபோன துறை முகங்களின் வரலாறுகள் இருப்பது போல் நீர்ப்பெயற்றுத் துறைமுகமும் தூர்ந்துபோக, பின்னர் மாமல்லை துறைமுகமாக இயங்கியிருக்க வேண்டும். எனவே நீர்ப்பெயற்றுத் துறைமுகம் மல்லைத் துறைமுகம் பற்றிய செய்திகள் இவை ஒன்றா வேறு வேறா என்ற முடிவுக்கு நம்மை அழைத்துச் செல்லவில்லை எனினும் தொடர்ந்து இப்பகுதியில் துறைமுகங்கள் இருந்து அவை கச்சியின் வாணிபத்திற்கு துணையாக இருந்திருக்கின்றன என்பதை உறுதிப் படுத்த இச் சிந்தனைகள் ஏதுவாக அமைகின்றன. ரோமானியர் தொடர்பு, சீனர் தொடர்பு[49] போன்ற செய்திகளும் இவர்களின் கடல்வழித் தொடர்புகளை முன்னிறுத்தப் போதுமான சான்றுகளாம்.

இந்நிலையில் இடைக்காலத்து யாப்பருங்கலக் காரிகை மேற்கோள் பாடலும் இங்கு எண்ணத்தக்கது.

**மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்**
**ஒலியும் பெருமையும் ஒக்கும்- மலிதேரான்**
**கச்சி படுவ கடல்படா கச்சி**
**கடல்படுவ எல்லாம் படும்.**

இப்பாடலில் கச்சியின் கடல் வாணிகச் சிறப்பும் தரை வாணிகச் சிறப்பும் புலப்படுகின்றன. இந்தப் பாடலின் தொன்மை தெரியவில்லை. ஆயின், கச்சியின் வாணிகம் தொன்று தொட்டே சிறப்புற்றிருந்தது என்ற அடிப்படையிலேயே இப்பாடல் எழுந்திருக்கலாம் என்பதே இங்குத் தோன்றும் எண்ணமாக அமைகிறது-

48. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 121; பாலாற்று வளம், ப. 167.
49. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, ப. 117; தமிழ்நாட்டு வரலாறு, சங்ககாலம் அரசியல், ப. 31.

# முடிவுரை

ஆய்வு என்பது புதிய கண்டுபிடிப்புகளை, புதிய கோட்பாடுகளை இனங்காண உதவுவது என்ற நிலையில் இந்த ஆய்வும் காஞ்சியைப் பற்றிய சில புதிய செய்திகளைக் காணத் துணை நின்றது; காஞ்சி குறித்து அறிஞர்கள் ஏற்கெனவே ஆராய்ந்து வெளிப்படுத்திய சிந்தனைகள் சிலவற்றை உறுதிப்படுத்த உதவியது; மீளாய்வு செய்ய வேண்டிய கருத்துகளையும் புலப்படுத்தியது என்ற நிலையில் இவ்வாய்வில் புலப்பட்ட சில முடிவுகளையும் சில சிந்தனைகளையும் காணலாம்.

1. காஞ்சி, கச்சி இரண்டும் இயற்கைச்சார்பில் பெயர் பெற்ற ஊர்கள். காஞ்சி மரங்கள் காரணமாகப் பெயர் பெற்ற ஊர் காஞ்சி.

2. காஞ்சி கச்சி என்பன இரண்டு ஊர்கள். வேகவதி ஆற்றின் கரையில் அருகருகேயிருந்த இரண்டு மூதூர்கள். தனித்தனியே இருந்த இரண்டு ஊர்களும் பின்னர் ஒன்றோடு ஒன்று இணைந்து நகராயிற்று. கச்சி எனவும் காஞ்சி எனவும் இருபெயர்களாலும் அழைக்கப்படத் தொடங்கிற்று.

3. காஞ்சியும் கச்சியும் இயற்கையின் அரவணைப்பில் இயல்பாக எழுந்து, சிறந்த மூதூர்களாக வளர்ச்சியுற்றவை. பின்னர் ஒரே நகராக விரிவுற்ற ஊர். நகராக விரிவுற்ற பின்னும், பெரிய நகருக்கு உரிய வசதிகள் அனைத்தும் இருந்ததாகக் காட்டப்படினும் இதன் அமைப்பினைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளல் இயலவில்லை. எனினும் திட்டமிட்டு அமைக்கப்படாத ஊர் இது என்ற நிலையில் கிடைக்கும் செய்திகள் தாமரைப்பூ வடிவத்தில் இவ்வூர் அமைக்கப்பட்டிருக்கவில்லை என்பதையே உறுதிப் படுத்துகின்றன.

4. திரையர் கடல் தொழிற்சார் மரபினர். எனவே திரையர் என்ற பெயருக்கும் தொழில் காரணமாக இருத்தல் பொருத்தம் பெறுகிறது.

5. தொண்டை மலரைப் பயன்கொண்ட திரையர், தொண்டையர் காரணமாகக் காஞ்சி சார்ந்த வடபகுதி பெற்ற பெயர் தொண்டை மண்டலம்.

6. கச்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர் திரையர். காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவர் பல்லவர். தவிர, சோழர்கள் போன்றோர் ஆட்சி செய்தனர் எனினும் இவர்கள் வரலாறு தெரியவில்லை. குறிப்பாக, கரிகாலன். இவனது ஆட்சி இருந்ததாகச் சுட்டப்படும் அறிஞர் கருத்துகள், ஐயந்திர இல்லை என்ற நிலையில் வரலாற்றுத் தெளிவுக்கு மேலும் சான்றுகள் வேண்டும். எனவே இவையெல்லாம் மீளாய்வுக்குரியன.

7. தொன்றுதொட்டே காஞ்சி சிறப்புப் பெறுவதற்கு மக்களும் காரணம் என்பதற்குச் சான்றாக இங்கு வாழ்ந்த மக்களின் வாழ்வியல் அமைகிறது. இவர்தம் பண்பாடு, கல்வி, வாணிகம், சமயம் சார்ந்த சிறப்பே தமிழகமெங்கும், இந்தியாவெங்கும், கடல்கடந்தும் காஞ்சி புகழ் பெறக் காரணம் என்பது இந்த ஆய்வு மூலம் புலப்படும் கருத்து.

எனவே முன்னுரையில் குறிப்பிட்டது போன்று காஞ்சியின் பெருமையினைப் புலவர்களும் ஆய்வாளர்களும் கூறிச் சென்றதில் எந்தவித உயர்வு நவிற்சியும் இல்லை என்பதை இந்த ஆய்வுக்காலப் பகுதி காஞ்சியின் வரலாறே சான்றாக நின்று உணர்த்தி விடுகிறது என்றால் அதில் மிகையில்லை.

இந்த ஆய்வு தரும் மேலும் சில சிந்தனைகள் 1. தமிழ் இலக்கியங்களில் இன்னமும் ஆராயப் படவேண்டிய பகுதிகள் பல இருக்கின்றன. 2. தமிழக வரலாறு தெளிவும் துல்லியமும் பெற பெயராய்வு உறுதியாகத் துணை செய்யும். 3. நகர் பற்றிய ஆய்வுகள் இன்று வளர்ச்சி பெற்று வருகின்றன. இதன் துறைகளாக நகரப்புவியியல், நகரச் சமூகவியல், நகரச் சூழலியல் போன்றன அமைகின்றன. இத்துறை கல்வியாளர்க்கும் ஆராய்ச்சியாளர்க்கும் தமிழகத்தின் நகர் வரலாறுகள் பயன் தரத்தக்கன. இந்நிலையில் தமிழகத்தின் ஒவ்வோர் ஊரும் பண்டு தொட்டுக் காலவாரியாகவும் கருத்துவாரியாகவும் முழுமையாக ஆராயப்பட்டுத் தமிழுலகிற்கு அளிக்கப்படவேண்டும்.

❊❊❊❊❊

# பயன்பட்ட நூல்கள்

1. அகநானூறு, ந.மு. வேங்கடசாமி, R.வேங்கடாசலம் பிள்ளை, கழக வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1949.
2. ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், தமிழாக்கம்-அப்பாத்துரையார், கழக வெளியீடு, சென்னை, 1962.
3. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-I, ஆர். ஆளவந்தார், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல் பதிப்பு, 1984.
4. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள், தொகுதி-II, டாக்டர் கு.பகவதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற் பதிப்பு, 1984.
5. இலக்கிய சாஸன வழக்காறுகள், மு.இராகவையங்கார், தமிழ்நாடு அரசு, 1973.
6. உரையாசிரியர்கள், மு.வை. அரவிந்தன், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1995.
7. ஊரும் பேரும், ரா.பி. சேதுப்பிள்ளை, கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1946.
8. எசலாம் வரலாற்றுப் புதையல், மா.சந்திரமூர்த்தி எம்.ஏ.,; ச. கிருஷ்ணமூர்த்தி, எம்.ஏ., சேகர் பதிப்பகம், மெட்ராஸ், 1995.
9. கல்வெட்டு-தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் காலாண்டு இதழ், தமிழ்நாடு அரசு, 1974.
10. களப்பிரர் ஆட்சியில் தமிழகம், மயிலை சீனி வேங்கடசாமி, எம். வெற்றியரசி வெளியீடு, சென்னை, 2001.
11. காஞ்சியின் கவின்மிகு கோயில்கள், T.V.R. சாரி, ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்பாள் தேவஸ்தானம், காஞ்சிபுரம், நான்காம் பதிப்பு, 1986.
12. காஞ்சிபுரம் ஆலயங்கள், க.வெ. அருணகிரி முதலியார், கணபதி வாசக சாலை, காஞ்சிபுரம், 1962.
13. காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில், ஓர் ஆய்வு, முனைவர் சி.இரத்தினம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல்பதிப்பு, 1998.
14. காஞ்சிபுரம் மலர், சோமுநூலகம், சென்னை, 1979.
15. காஞ்சிபுரம் மாவட்ட வரலாறு, ஆ.பா. திருஞான சம்பந்தன், தேன்மொழிப் பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 2002.
16. காஞ்சிப்புராணம், திரு.சி. அருணை வடிவேலு முதலியார், மெய்கண்டார் கழக வெளியீடு, காஞ்சிபுரம், 1937.
17. கோயிற் களஞ்சியம், செங்கை-எம்.ஜி.ஆர். மாவட்டக் காஞ்சிபுரம் கோயில்கள், கோ.மு. முத்துசாமிப் பிள்ளை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதல்பதிப்பு, 1994.

18. சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், டாக்டர் ந.சஞ்சீவி, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, முதற்பதிப்பு, 1973.
19. சங்க இலக்கியத்தில் வேந்தர், அரங்க இராமலிங்கம், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 1987.
20. சங்க காலக் கடவுளர், கு.வை. இளங்கோவன், சேகர் பதிப்பகம், சென்னை, முதல் பதிப்பு, 1995.
21. சங்ககாலக் காசு இயல், முனைவர் ப.சண்முகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல்பதிப்பு, 2003.
22. சங்ககால மன்னர்வரிசை (ஆய்வு குறிப்புகளுடன்), திருச்சிராப்பள்ளி நாணயவியல் கழகத்தின் மூன்றாம் ஆண்டு நிறைவு விழா மலர், சிறப்பு வெளியீடு, முனைவர் பே.க. வேலாயுதம், ப.சீனிவாசன், பாரதி நூலகம், திருச்சி, 1997.
23. சங்ககாலச் சோழ வேந்தர்கள், க.சண்முகசுந்தரம், பெ.கந்தசாமி நாயகர் கல்வி அறக்கட்டளை, சென்னை, முதல் பதிப்பு, 1997.
24. சங்ககால வரலாற்று ஆய்வுகள்-II, மயிலை சீனி வேங்கடசாமி, எம். வெற்றியரசி வெளியீடு, சென்னை, 2001.
25. சங்ககால வாழ்வியல்- சங்கத் தமிழரின் அரசு முறையும் சமூக வாழ்வும், டாக்டர் ந.சுப்ரமண்யன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, முதல் பதிப்பு, 1986.
26. சங்ககாலத் தமிழக வரலாற்றில் சில செய்திகள், மயிலை சீனி வேங்கடசாமி, அண்ணாமலை பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், முதற்பதிப்பு, 1970.
27. சதாசிவ பண்டாரத்தார் ஆய்வுக்கட்டுரைகள், தொகுப்பாசிரியர், முனைவர் அம. சத்தியமூர்த்தி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை, 1998.
28. சமணமும் தமிழும் (முதற்பகுதி), திரு மயிலை சீனி வேங்கடசாமி, கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1970.
29. சமணத் தமிழ் இலக்கிய வரலாறு, தெ.பொ.மீ., கலைக்கதிர் வெளியீடு, கோவை, முதல்பதிப்பு, 1961.
30. செங்கை மாவட்ட வரலாற்றுக் கருத்தரங்கு, தொல்பொருள் ஆய்வுத்துறை, 1977.
31. செந்தமிழ்த் தொகுதி 12, பகுதி-2, "சோழன் கரிகாலன் 55 கிபி. - 95 கிபி.," சதாசிவ பண்டாரத்தார், மதுரைத் தமிழ்ச் சங்க முத்திரா சாலைப் பதிப்பு, 1914.
32. சென்னை 1639-க்கு முன்பின், டாக்டர் கு.பகவதி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல்பதிப்பு, 1995.
33. சேக்கிழார் வழியில் சிவத்தலங்கள், பு.மா. ஜயசெந்தில் நாதன், இந்துசமய மன்றம், காஞ்சிபுரம், 1983.
34. சோழர்கள், கே.ஏ. நீலகண்டசாஸ்திரியார், தமிழாக்கம் கே.வி. ராமன் நியூ செஞ்சுரி புக்ஹவுஸ், முதல்பதிப்பு, 1989.

35. சோழர் வரலாறு, டாக்டர் மா. இராசமாணிக்கனார், பூரம் பதிப்பகம், சென்னை, 1999.
36. சோழர் வரலாறு, கே.கே. பிள்ளை, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977.
37. சோழமன்னர் வரலாறு, சி. கோவிந்தராஜன், செம்பியன் என்செம்பிள் பப்ளிஷர்ஸ், திருச்சிராப்பள்ளி, முதல்பதிப்பு, 1965.
38. தமிழ் இடப்பெயராய்வு, கே. நாச்சிமுத்து, சோபிதா பதிப்பகம், நாகர்கோவில், 1983.
39. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், டாக்டர் ஆ.வேலுப்பிள்ளை, பாரி புத்தகப் பண்ணை, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1978.
40. தமிழ் இலக்கிய வரலாறு, டாக்டர் மு.வரதராசனார், சாகித்திய அகாதெமி, புதுடெல்லி, முதல்பதிப்பு, 1972.
41. தமிழ் லெக்ஸிகன், தொகுதிகள்-2, 3, 4, 5, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
42. தமிழ்நாட்டு வரலாறு-தொல் பழங்காலம், தமிழ் நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் நாடு அரசு வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 1975.
43. தமிழ்நாட்டு வரலாறு-சங்ககாலம்-அரசியல், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாடு அரசு வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1983.
44. தமிழ்நாட்டு வரலாறு-சங்ககாலம்-வாழ்வியல், தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாடு அரசு வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1988.
45. தமிழ்நாட்டு வரலாறு-பல்லவர்-பாண்டியர் காலம், முதற் பகுதி, தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் வளர்ச்சி இயக்ககம், சென்னை, 1990.
46. தமிழ்நாட்டு வரலாறு-பல்லவர்-பாண்டியர் காலம், இரண்டாம் பகுதி, தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்வளர்ச்சி இயக்கம், சென்னை, முதல்பதிப்பு, 2000.
47. தமிழ்நாட்டு வரலாறு-சோழப் பெருவேந்தர்காலம், முதற் பகுதி, தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் வளர்ச்சித் துறை வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1998.
48. தமிழ்நாட்டு வரலாறு-சோழப் பெருவேந்தர்காலம், இரண்டாம் பகுதி, தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ் வளர்ச்சித்துறை வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 2000.
49. தமிழ் நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள், கி.மு.200-கி.பி. 1300, முனைவர் பா. சூரிய நாராயணன், தமிழ்க் கல்வி இயக்கம், சென்னை, முதல் பதிப்பு, 1998.

50. தமிழக ஊர்ப்பெயர்கள், முனைவர் கு.பகவதி, உலகத் தமிழ்க் கல்வி இயக்கம், முதல்பதிப்பு, 1986.
51. தமிழகத் துறைமுகங்கள், பா.ஜெயக்குமார், அன்பு வெளியீட்டகம், தஞ்சாவூர், முதல்பதிப்பு, 2001.
52. பி.டி சீனிவாச அய்யங்காரின் தமிழர் வரலாறு (முதற்பகுதி), புலவர் கா.கோவிந்தன் (மொழி பெயர்ப்பும் திறனாய்வும் (தமிழாக்கம்), கழக வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1989.
53. தமிழர் வரலாறு (இரண்டாம் பகுதி), புலவர் கா.கோவிந்தன், மொழி பெயர்ப்பும் திறனாய்வும், (தமிழாக்கம்), கழக வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1989.
54. தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும், டாக்டர் கே.கே.பிள்ளை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 2002.
55. தமிழும் தெலுங்கும், சோமலெ, இ.ப.த.ம. ஆய்வுக்கோவை-II ஹைதராபாத், சூன், 1979.
56. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச்செய்த தேவாரத் திருப்பதிகம், இரண்டாவது திருமுறை, தருமபுர ஆதினம்-முதல்வர் ஸ்ரீவரு குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை விழாமலர், 1954.
57. தென்னிந்திய வரலாறு-முதல் பகுதி, கே.ஏ. நீலகண்ட சாஸ்திரியார், தமிழாக்கம் மு.ரா. பெருமாள் முதலியார், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1973.
58. தேவாரம்-I, ஞானசம்பந்தர், பாண்டிச்சேரி இன்ஸ்டிடியுட், 1984.
59. தேவார ஒளிநெறி- I, சம்பந்தர், ராவ்பகதூர் வ.சு. செங்கல்வராயப் பிள்ளை, 1946.
60. தொண்டை மண்டலசதகம் மூலமும் உரையும், டாக்டர் சி.வ.சண்முக சுந்தரம், விசாலாட்சி பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு, 1994.
61. தொல்காப்பியம் தெளிவுரை, முனைவர் ச.வே.சுப்பிரமணியன், மணிவாசகர் பதிப்பகம், முதற்பதிப்பு, 1998.
62 நற்றிணை நானூறு மூலமும் உரையும், பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்கள், கழக வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1952.
63. பக்தி இலக்கியம் ஓர் அறிமுகம், ப.அருணாசலம், முல்லை நிலையம், சென்னை, 2002.
64. பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை, மறைமலையடிகள், கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1957.
65. பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், தேவநேயப்பாவாணர், கழக வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1992.

66. பத்துப்பாட்டு ஆராய்ச்சி, டாக்டர் மா.இராசமாணிக்கனார், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, முதல்பதிப்பு, 1970.
67. பத்துப்பாட்டு சொற்பொழிவுகள், கழக வெளியீடு, சென்னை, 1969.
68. பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், சென்னை, 1974.
69. பத்துப்பாட்டு மூலமும் மதுரையாசிரியர் பாரத்துவாசி முதற்பகுதி), திரு. பெ.வே. சோமசுந்தரனார், கழக வெளியீடு, சென்னை, 1971.
70. பல்லவர் செப்பேடுகள் முப்பது, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 1999.
71. பல்லவர் வரலாறு, டாக்டர் மா.இராசமாணிக்கம் பிள்ளை, கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 1971.
72. பழங்காலத் தமிழர் வாணிகம், மயிலை சீனி. வேங்கடசாமி, ஸ்ரீ சாரதி குவாலிடி பிரிண்டர்ஸ், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1990.
73. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்- இலக்கணம் மற்றும் மொழியியல், செ. ஜீன்லாறன்ஸ், கு. பகவதி (பதி.), உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 2004.
74. பாலாற்று வளம், புலவர் கே.தி.நா.அறிவுஒளி, கழக வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1983.
75. பாஹியான் (கி.பி.399-414), வி.எஸ்.வி. இராகவன், மணிவாசகர் நூலகம், சென்னை, 1978.
76. பிங்கல நிகண்டு, பிங்கல முனிவர், கழக வெளியீடு, முதல் பதிப்பு, 1968.
77. பிற்காலச் சோழர் சரித்திரம், சதாசிவ பண்டாரத்தார், தொகுதி-I, 1974.
78. புலமை, ஜுன், 2001.
79. பெரும்பாணாற்றுப்படை ஆராய்ச்சியும் உரையும், ரா.இராகவையங்கார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைநகர், இரண்டாம்பதிப்பு, 1958.
80. பௌத்தம், சோ.ந. கந்தசாமி, சென்னைப் பல்கலைக்கழகம், 1977.
81. பௌத்தமும் தமிழும், மயிலை சீனி.வேங்கடசாமி, பதிப்பாளர், கா.ஏ. வள்ளிநாதன், சென்னை, 1940.
82. மகேந்திரவர்மன், மயிலை சீனி.வேங்கடசாமி, மீனா கோபால் பதிப்பகம், சென்னை, 2001.
83. மணிமேகலை, உ.வே.சாமிநாதய்யரவர்கள், உ.வே. சாமிநாத நூல் நிலையம், ஏழாம் பதிப்பு, 1981.

84. மணிமேகலைச் சிந்தனைகள், அண்ணாமலை பல்கலைக்கழகம், தமிழ்த்துறை ஆசிரியர்கள், 1979.
85. மயிலை சீனி. வேங்கடசாமி தமிழுக்கு வழங்கிய கொடை, எம்.வெற்றியரசு வெளியீடு, சென்னை, 2001.
86. யுவான்சுவாங் (கி.பி. 629-645), வி.எஸ்.வி. இராகவன், பதிப்பு, மே.வி. வேணுகோபால பிள்ளை, மணிவாசகர் நூலகம், சென்னை, 1978.
87. வசவ சமுத்திரம் துறைமுகமா?, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு, ஆய்வுக்கோவை, பண்பாட்டியல், 2004.
88. வடமொழி இலக்கிய வரலாறு, நவாவியூ, நடராஜன், சங்கீதா பதிப்பகம், சென்னை, 1979.
89. வரலாற்றில் திருவாலங்காடு, சு.இராசவேலு, திருமகள் நிலையம், சென்னை, முதல்பதிப்பு, 1997.
90. Administration and Social life under the pallavas, Dr.C. Minakshi, University of Madras, Chennai, Revised edition, 1977.
91. Archaelogical Atlas of the Antique Remains of Buddhisam in Tamilnadu, Dr. K. Sivaramalingam, Institute of Asian Studies, Chemmancherry, Chennai, 1997.
92. A comparative study of Tamil and Japanese, Dr. Pon. Kothandaraman, International Institute of Tamil Studies, Madras, 1994.
93. A History of Tamil Literature (250-600-A.D.), T.V. Sadasiva Pandarathar, Annamalai University, Annamalai Nagar, 1955.
94. Buddhisam in Tamilnadu, Collected papers, Institute of Asian Studies, Chemmancherry, Chennai, 1998.
95. Kanchi- The City of Temples, V. Narayanaswamy, Manivasagar Pathipagam, Chennai, First Edition, 1999.
96. Kanchipuram through the ages, C.R. Srinivasan, Agam Kala prakashan, Delhi, First Edition, 1979.
97. Kanchipurm in the early South Indian History, T.V. Magalingam, Madras, 1968.
98. History of the Later Cholas part-I, T.V. Sadasiva pandarathar, Annamalai University, Annamalai Nagar, 1967.
99. Mahabalipuram Studies, Michael Lockwood, Gift Siromoney, P. Dayanandan, The Christian Literature Society, Chennai, First edition, 1974.
100. Town planning in Early South India, C.P. Venkatarama Ayyar, Mittal Publications, Delhi, Reprint, 1987.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600 113

### அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| தமிழ் உரைநடையும் கிறித்தவர் பங்களிப்பும் | 20.00 |
| திருக்குறளில் பொது நிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கியத்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழ்க் கடல் இராய. சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | 25.00 |
| வ.உ.சி. ஒரு பன்முகப் பார்வை | 25.00 |
| இலக்கண நூல்களில் கருத்து வளர்ச்சி | 35.00 |
| சுவடிப்பதிப்புக்கலை வழிகாட்டி - டாக்டர் உ.வே.சா | 50.00 |
| தொல்காப்பியத் தொடரியல் | 120.00 |
| மொழிபெயர்ப்புத் தமிழ் | 60.00 |
| சங்கத் தமிழிரின் மனிதநேய மணிநெறிகள் | 45.00 |
| தெ.பொ. மீனாட்சி சுந்தரனாரின் தமிழ்த்தொண்டும் மொழியியல் பங்களிப்பும் | 25.00 |
| சமூகத்திலும் இலக்கியத்திலும் ஊனமுற்றோர் | 80.00 |
| பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் | 25.00 |
| இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | 40.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - தொகுதி 4 | 45.00 |
| இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் - தொகுதி 3 | 60.00 |
| பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | 80.00 |
| சங்கத் தமிழர் வாழ்வியல் | 100.00 |
| தமிழெனப்படுவது | 115.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கணம் & மொழியியல் | 105.00 |
| வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | 70.00 |
| தென்னிந்திய மருத்துவ வரலாறு | 115.00 |
| இலக்கிய இதழ்கள் | 110.00 |
| சிரவையாதீனப் பதிப்புகள் | 30.00 |
| திருமணம் செல்வக்கேசவராய முதலியார் | 30.00 |
| பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் | 35.00 |
| நாமக்கல் கவிஞரின் உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும் | 35.00 |
| ஆய்வுக்கோவை - பல்துறையியல் | 75.00 |
| ஆய்வுக்கோவை - இக்கால இலக்கியம் | 75.00 |
| ஆய்வுக் கோவை - சமயவியல் | 75.00 |
| ஆய்வுக் கோவை - பண்பாட்டியல் | 75.00 |
| ஆய்வுக் கோவை - இலக்கணவியல் | 75.00 |
| ஆய்வுக் கோவை - இலக்கியவியல் | 75.00 |

---

538 - காஞ்சிபுரம்

கி.பி. ஆறாம் நூற்றாண்டிற்கு முன் 65.00